# மாறன் சடகோபனும் மறை (த்) தமிழும்

ஆசிரியர்

ஸ்ரீரங்கம் நல்லான் சக்கரவர்த்தி ஸ்ரீனிவாசன்

**N. C. SRINIVASAN**

வெளியீடு

ஆசிரியர்

H 129 / 2, 34th கிராஸ் தெரு
பெசன்ட் நகர்
சென்னை 600 090

1994



சமய நூல்களுக்கு நிதி உதவி வழங்கும் திட்டத்தின் கீழ், இந்நூல் திருமலை திருப்பதி ஆலய தேவஸ்தானத்தின் நிதி உதவியுடன் பிரசுரிக்கப்பட்டது.

*"This Book is published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanam under their scheme Aid to Publish Religious Book"*

நூல் கிடைக்குமிடம் :

ஆசிரியர்,
H 129/2 34வது கிராஸ் தெரு,
பெசன்ட் நகர்,
சென்னை – 600 090.

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ
நெ. 8 மேயர் சம்பந்தம் தெரு
கோடம்பாக்கம்
சென்னை – 600 024

ஹிக்கின்பாதம்ஸ் லிமிடெ
அண்ணாசாலை
சென்னை – 600 002

# அணிந்துரை

ஸ்ரீமதுபயவே N.C. ஸ்ரீனிவாசன் ஸ்வாமி எழுதியுள்ள "மாறன் சடகோபனும் மறை (த்) தமிழும்" என்ற புத்தகத்தைக் கண்டேன் பெருமகிழ்ச்சி அடைந்தேன்.

தென்னக ரெயில்வேயில் Asst. Signal & Tele Communication பொறியாளராகப் பணியாற்றிப் பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பு ஓய்வு பெற்ற இப்பெரியவர், பல மஹான்களிடம் குறிப்பாக ஸ்ரீமதுபயவே திருக்கள்ளம் நரஸிம்ஹராகவாச்சாரியார் ஸ்வாமி, புரிசை கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி போன்றவர்களிடம் பயின்றவர். ப்ரக்ருதம் ஸ்ரீமதழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் சென்னையில் ஸ்ரீபகவத் விஷயம் காலக்ஷேபம் சாதித்தருளுகையில், அந்த கோஷ்டியிலும் அன்வயம் பெற்ற தன்யர், "சக்கரவர்த்தி திருமகன் பரத்வாஜர் திருமாளிகையிலும் விருந்து ஏற்றார். சபரீ பக்கலிலும் விருந்து ஏற்றார். அதாவது, "பகவதி பரத்வாஜே புக்தி: ததா சபரீக்ருஹே" என்று சிறிய திருவடி (அனுமன்) பாடிக் கொண்டு அவருடைய மேன்மையும் எளிமையையும் நினைத்து மகிழ்வதாக ஸ்வாமி தேசிகன் "சங்கல்ப சூர்யோதயத்தில்" ஒரு காட்சியைக் காட்டுகிறார். இதை நினைவூட்டுவது போல. இந்த ஸ்வாமி இத்தகைய மஹான்கள் பக்கலிலும் பாஷ்ய ரகஸ்யத்ரய பகவத் விஷயாதிகளை கேட்டு விட்டு அடியேன் - சபரீயைப் போல் ஆச்சார்ய கருணையையே துணையாகக் கொண்டவன் பக்கலிலும் சில நாள் திருநெடுந்தாண்டகம் மஹா சாஸ்திர பரிசயம் பண்ணினார் என்பதினால் இவருடைய நூலுக்கு ஒரு அணிந்துரை தரும் வாய்ப்பு கிட்டியது.

பேரருளாப் பெருமாள் "நல்லான்" என்று உகந்து பாராட்டிய நல்லான் சக்கரவர்த்தி குலத்திலே தோன்றும் படி பாக்யம் பெற்றவர். இந்த ஸ்வாமி ஸ்ரீ அழகிய சிங்கர்களின் திருவடி சம்பந்தம் பெற்று ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயுடன் பொலியும் இந்த ஸ்வாமி எளிய நடையில் பல சம்பிரதாயக் கட்டுரைகளை தர்ம(ச்)சுடர், திருமால் போன்ற இதழ்களில் எழுதியிருக்கிறார். இவருடைய "ராமாநுஜதர்சனம்" என்ற நூல் ஒன்றும் வெளியிடப்பட்டுள்ளது. இவருடைய பின்னணியும் அனுபவமும் சேர்ந்து மாறன் சடகோபனும் மறை (த்) தமிழுமாக இப்பொழுது மலர்ந்து மணம் வீசுகிறது.

ஆழ்வாருடைய பெருமையைப் பேசும் நூல் ; அவர்களுடைய அடியார்கள் பெருமையைப் பேசும் நூல் ; என்ற இவையே போதும் இதன் பெருமைக்கு. இதில் முன்னோர்கள் கூறிய கருத்துக்களையும், வரலாற்றுத் துணுக்குகளையும். 13-வது இயலில் "அருளிச் செயல்கள்" என்ற தலைப்பில் திருவிருத்தத்தின் முதல் பாசுரத்துக் கொடுத்துள்ள விரிவுரை

இதற்கு உதாரணமாக எடுத்துக்காட்டு.

அடியேன் போன்றோர் சிறிது கற்றோம் என்ற நினைப்பினால், ஒரு நூலைப் படிக்கும் போது குறை காண்பதே நோக்காகப் பார்ப்போம். அந்த கோணத்தில் பார்த்தும்கூட இந்த நூலில் குறிப்பிடக்கூடிய பெரிய குறைகள் அரிதாக இருப்பதும் இந்நூலின் சிறப்பு ஒன்று.

முக்தி அடைந்த ஜீவாத்மாவுக்கு இருக்கும் ஆனந்தம் அளவற்றது. பரம புருஷனுடைய ஆனந்தம் அளவிட முடியாதது அவனுடைய செல்வமும் அப்படியே. இவை அனைத்தும் கூடினாலும், ஆழ்வார் அருளிச் செயல் அனுபவிக்கும் ஆனந்தத்திற்கு ஈடாக முடியாது. ஆழ்வாரே இதனை, "நுகர்ச்சியுறுமோ மூவுலகின் வீடு பேறு - தன்கேழில் புகர் செம்முகத்த களிறட்ட பொன்னாழிக்கை யென்னம்மான் நிகர் செம்பங்கி யெரிவிழிகள் நீண்ட அசுரருயிரெல்லாம் தகர்த்துண்டுழலும் புட்பாகன் பெரிய தனிமா புகழே." என்ற பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

திருவாய் மொழியை நன்கு அனுபவிக்க உதவும் நூல், ஆகையால் இதன் ஏற்றத்தில் அப்படி ஏதேனும் குறை கண்டாலும், அது சந்திரனிலுள்ள கருப்புப் பகுதியைப் போல் கவர்ச்சிக்கு மாசாகாது.

மேலே குறிப்பிட்ட திருவாய் மொழிப் பாசுரத்திற்கு ஸ்வாமி திருக்குருகைப் பிரான் பிள்ளான் உரை :-

ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வக பகவதனுபவ ப்ரீதியும் ஸ்வாதீன அகில லோகப் பகவதானந்தமும் கூடினால் தான் திருவாய்மொழியிலே எம்பெருமானை அனுபவித்தால் உள்ள ப்ரீதிக்கும் போருமோ ? என்கிறார் என்பதே உரை பாட்டை விட சிறியதாக உள்ளது. ஆனால் உயிர் நாடியைக் காட்டி பாட்டின் முழுப் பொருளையும் காட்டுகிறது. இப்படி சுருக்கமாக ஆழமாக அமைந்திருப்பது திருவாறாயிரப்படியின் தனிச்சிறப்பு.

திருவாறாயிரப் படிக்குப் பின் வந்த உரைகள் சாமானியர்களைக் கருத்தில் கொண்டு விரிவாக அமையத் தொடங்கின. அவைகள் அனைத்துக்கும் ஆதாரம் திருவாறாயிரப்படியே. ஆனால் நாளடைவில் அவ்வுரைகட்கும் திருவாறாயிரப்படிக்கும் நெருக்கமில்லையோ என்ற கருத்து வரத்தொடங்கி விட்டது. இந்நிலையில் திருவாறாயிரப்படியின் ஆழத்தையும், ஆணிவேரான தன்மையும் காட்டி அதனைப் பாமரரும் சுவைக்கும்படி அதற்கு ஓர் அற்புதமான வியாக்யானத்தை இருபத்தி நாலாயிரப்படியாக அருளிச் செய்த வள்ளல் 17 ம் நூற்றாண்டில் திகழ்ந்த ஸாக்ஷாத் ஸ்வாமி திருநாராயணபுரத்தில் அவதரித்த இந்த ஸ்வாமி தமிழில் நன்கு பயிற்சி இல்லாத ஸ்ரீ வைஷ்ணவர் களை மனதில் கொண்டு பாசுரங்களுக்கு உரை ஒன்றும் அருளிச் செய்தார். திருவாய்மொழி வியாக்யானங்களைக் கணக்கிடும் பலர். இந்த

நூல்களைப்பற்றி குறிப்பிடாமல் எழுதுகிறார்கள். மேலும் பெரிய வாச்சான் பிள்ளையைப் போலவே அருளிச் செயல்களில் ஆழ்வார்களின் பாசுரங்கள் அனைத்துக்கும் உரை அருளிய பரகாலஸ்வாமி, திருவாய்மொழி, திருப்பாவை முதலியவைகளையும் ஸம்ஸ்கிருத உரை நடையில் மொழி பெயர்த்துக் கொடுத்த உபநிஷத் பாஷ்யகார ஸ்வாமி முதலியவர்கள் பற்றியும் இத்தகைய நூல்களில் அவசியம் குறிப்பிட வேண்டும்.

பிரபந்தப்பள்ளி பாஷ்யப்பள்ளி என்று இராமாநுஜருக்குப் பிறகு ஆச்சார்ய பங்தி பிரிந்ததாக இந்நூலில் உள்ள குறிப்பு மிகவும் ஆராயப்பட வேண்டிய ஒன்று உண்மையில் உபயவேதாந்த ஸம்ப்ரதாயமான எம்பெருமானார் ஸம்பிரதாயத்தில் பிரபந்தப் பள்ளி பாஷ்யப்பள்ளி என்ற ஒரு பிரிவே கிடையாது.

பாஷியப்பள்ளி என்று இந்நூல் ஆசிரியர் போடும் பட்டியலில் முதல் ஆச்சார்யார் யார் ? திருக்குருகைப்பிரான் பிள்ளான். இவர்தான் திருவாய்மொழிக்கு முதன் முதலாக உரை எழுதிய மஹான். பிரபந்தப்பள்ளியில் இவர் தலைமை இல்லையென்றால் எப்படிப் பொருந்தும் ? உண்மையிலேயே எம்பெருமானாருக்குப் பிறகு ஆசிரியர்கள் அனைவரும் உபயவேதாந்தப் பள்ளிகளையே நடத்திப் போந்ததை சிஷ்யர்களால் குருபரம்பரை தங்கட்குக் கிடைத்த பரவசத் தொடர்ச்சியின் அடிப்படையில் அநுசந்திக்கப்படுகிறது. ஆசிரியர், அத்தகைய குருபரம்பரையின் அடிப்படையில் பள்ளிகளைப் பிரித்து எழுதியுள்ளார் என்று எண்ணுகிறேன். இதை தெளிவுபடுத்தும் வகையில் திருக்குருகைப்பிரான் பிள்ளான் சிஷ்ய பரம்பரையில் வந்த உபநிஷத் பாக்ஷியக்காரர். ஸாக்ஷாத் ஸ்வாமி போன்ற பெரியோர்களின் தொண்டை விளக்கி மாறன் சடகோபனும் மறை(த்) தமிழும் என்ற இந்நூலுக்கு அனுபந்தம் ஒன்றை இந்நூலாசிரியர் வெளியிட்டால் இப்பணி நிறைவு பெறும் என கருதுகிறேன்.

இந் நூலாசிரியருக்கு இத்தகைய பணிகளை தொடர நல் வாய்ப்பையும் ஆரோக்யத்தையும் திருவேங்கடத்தெந்தை திருவருள் நல்க வேண்டும் என்று வணங்கி அமைகிறேன்.

புதுதெல்லி

ஆனி அனுஷம்

*அன்பன்*

V.S. கருணாகரன்

(ஸ்ரீமதுபயவே வில்லூர் நடாதூர் மஹாவித்வான் ஆசுகவி ஸார்வபௌம ஸ்வாமி திருவடி)

21.6.94

V.S. KARUNAKARAN, B.E.MIE
DIRECTOR (S.S.I.)
NEW DELHI

# பணிவுரை

சுருதி என்றால் செவிப்புலன் வழி அறிவது. பல வகைப்பட்ட ஒலிகளை செவி உணர்த்திடினும், செவியின் சுவையுணர்வு என்பது வேதாந்தப் பொருளின் விளக்கங்களும், அதன் சார்புடைய தர்ம நூல்களுமான உணர்வே ஆகும். இவ்வுணர்வே இறை நிலை ஞானம் என்றளவில் செவிக்கு அமுதமான செவிச் செல்வமாகும். அத்தகைய செவிச்செல்வத்தை தமிழ் மறையாக வழங்கியவர் ஸ்வாமி நம்மாழ்வாராகும்.

அடியேன் பகவத் விஷய காலக்ஷேபகோஷ்டியில் அன்வயம் பெற்ற வகையில், திருவாய்மொழி தன்னுள் கொண்டிருக்கும் ஆழ்ந்த பொருள் விசேஷங்களை அனுபவித்த பொழுது, அவைகளை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற உணர்வின் வெளிப்பாடே மாறன் சடகோபனும் மறை (த்) தமிழும் என்ற இந்நூல்.

இந்நூலிற்கு ஒரு அணிந்துரை வழங்க வேண்டும் என்ற அடியேனது கோரிக்கையை ஏற்று, பல பொறுப்புகளுக்கிடையில், சிறிது நேரம் ஒதுக்கி ஒரு சிறப்பான அணிந்துரையை ஸ்ரீமதுபயவே V.S. கருணாகரன் ஸ்வாமி வழங்கியுள்ளார். இந்நூலின் நிறைவுகளைப் போற்றியும், ஒரு சில குறைகளை எடுத்துக் காட்டியும் வழங்கியது. அவைகளையும் நிறைவுகளாகவே அடியேன் உள்ளம் ஏற்றுக் கொண்டது.

திருவரங்கத்தில் ஒரு கால கட்டத்தில், பிரபந்தப் பள்ளி, பாஷியப்பள்ளி என்று இரண்டு பிரிவுகளாக செயல்பட்டது என்பதனை, ஸ்ரீ V.N. ஹரிராவ் எழுதிய "திருவரங்க ஆலய வரலாறு என்ற ஆங்கில நூலில் குறிப்பிட்டுள்ளதைச் சார்ந்து அடியேனும் குறிப்பிட்டுள்ளேன் என்பதனை தெரிவித்துக்கொள்கிறேன்.

திருவாய்மொழி விரிவுரைகள் சிலவற்றுள், ஆழுங்கால் பட்டு ஆய்ந்துணருங்கால், தெளியாத மறை நிலங்களையும் தெளியக் காட்டும் என்பதனை காட்டிக் கொடுத்த அணிந்துரையின் நேர்த்தி அடியேனை நிறைவுறச்செய்து பரவசப்படுத்தியது. ஸ்ரீ மதுபயவே V.S. கருணாகரன் ஸ்வாமிக்கு, அடியேன் அன்பார்ந்து நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலை மிகச் சிறப்பான முறையில் அச்சிட்டுக் கொடுத்து உதவிய ஸ்ரீ தியாகராஜன் அவர்களுக்கும், அச்சுக்கூடத்தார்களுக்கும் அடியேனது நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலிற்கு நிதிஉதவி அளித்து உதவிய திருமலை திருப்பதி ஆலய தேவஸ்தான கமிட்டிக்கும் அடியேனது நன்றி உரித்தாகுக.

சென்னை

தாசன்
N.C. ஸ்ரீனிவாசன்
N.C. SRINIVASAN

# பொருளடக்கம்

## இயல் 1

# உறுதிப் பொருள்கள்

இவ்வுலகில் பிறந்த கட்டுப்பட்ட (பத்த) சீவர்களான நாமனைவரும், சீவனம் என்ற வாழ்க்கை முறைகளை, எப்படி அமைத்துக் கொள் கிறோமோ, அதைச் சார்ந்து தான், வாழ்க்கையின் குறிக்கோளான "உச் சீவனம்" (உஜ்ஜீவனம்) என்ற உயர்ந்த வாழ்க்கையை அளிக்கும் "வீட்டை"ப் பெறுவதற்கு வழிகாண இயலும். நடைமுறையில் பொதுவாக உலக வாழ்க்கை துன்பங்கள் நிறைந்ததாக இருப்பினும், அதை பரமனை நாடிச் செல்லும் ஒரு புனித யாத்திரையாக அமைத்து வாழ்ந்தால், அது வாழ்க்கையின் குறிக்கோளான வீட்டைப் பெறுவதற்கு சாதனமாக அமையக்கூடும். இதற்காகவே, மிக அரிதான மனிதப் பிறவியைப் பெற்ற நாம், அறநெறிக் கோட்பாடுகளைத் தழுவி, தேவைக்கு அளவான பொரு ளையே சம்பாதித்து, அதனால் பெறும் மன நிறைவோடு இல்லறம் நுகர்ந்து, பகவத்ப்ரீதிக்கு இலக்காகும்படி வாழ்ந்தால், வீடு பெறும் முயற்சியைக் கைக் கொண்டவர்களாவோம் !

"புருஷார்த்தங்கள்" என்பது "தருமம், அர்த்தம், காமம், மோக்கம்" ஆகும். தமிழ் வழக்கில் இவைகள் "அறம் பொருள் இன்பம் வீடு" என்று வழங்கப்படும், "உறுதிப்பொருள்கள்" ஆகும். இவைகளுள் முதல் மூன்றை அடிப்படையாகக் கொண்டுதான் உலக வாழ்க்கையான சீவனம் அமையப் பெறுதல் வேண்டும் என்று ஆன்றோர் பணிப்பர்.

உறுதிப் பொருள்களுள் முதலானது அறம். ஒழுக்கம் நிறைவு பெற ஏதுவாக அமையப் பெற்றது அறம். கடையான வீடு நிரந்தரமான உண்மை, துன்பம் சிறிதும் கலசாத இன்பத்தைக் கொடுப்பது. அதனால் முதலான அறத்தை வாழ்க்கை வியாபாரத்தில் முதலீடு செய்தால், கடையான வீடு என்ற பேரின்பத்தை லாபமாக அடைய வாய்ப்புகளுண்டு. முதல் இல்லையேல் கடையும் இல்லை என்பதைப் பல பிறவிகள் எடுத்தாலும் உணரத்தக்கது.

அறம், முதல் மட்டுமல்ல முதன்மையானதுங் கூட. அறத்திற்கு பல வகையில், பொருள் கூறப்படினும், அதைச் சார்ந்த நெறிகளையும் பண்பு களையும் ஆன்றோர் வகுத்த சம்பிரதாயங்களை கடைப்பிடித்து இறைத் தொண்டில் ஆர்வங் கொண்டு பெறுதல் வேண்டும். மேலும் அன்புடைமை, விருந்தோம்பல், நடுநிலைமை, வாய்மை, பொறையுடைமை ஆகியவைகள் அறத்தைப் பெறச் செய்யும் பண்புகளாகும். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களும் அதாவது எண்ணம், சொல், செயல் ஆகியவைகள் ஒன்றி, தூய்மையுடனும் நேர்மையுடனும் செயல்படும்போது அறம் தழைத் தோங்கும்.

அன்புடைமை, தன்னடக்கம், தூய்மை, புலனடக்கம் பற்று ஒழித்தல் ஆகியவைகள் மனத்தால் செய்யப்படும் அறம்.

ஆச்சார்யார், சான்றோர், பெரியோர் ஆகியவர்களுடன் நேர்மை, மரியாதை, பக்தி வழுவாதுசெயல்படுதலும், தீங்குசெய்யாமை, பழியாமை, பகைக்காமை, பரோபகாரம் ஆகிய பண்புகளுடன் செயல்படுதல் உடலி னால் செய்யப்படும் அறம்.

இன்சொல் மொழிதல், வாய்மை, பகவானின் நாம ஜெபம், வேதம் ஓதுதல், ஓதுவித்தல் ஆகியவைகள் வாக்கினால் செய்யப்படும் அறம், பொறாமை, அவா, கோபம், சொல்லத்தகாத சொற்கள் ஆகியவைகள் கல வாததே அறம் என்று திருவள்ளுவரும்,

*"அழுக்காறு, அவா, வெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்"*

என்று அறத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளார்.

மறைகூறும் தருமம் இருவகை. ஒன்று முப்பால் அறம் (பிரவிருத்தி லஷணம்), மற்றொன்று வீட்டு அறம் (நிவ்ருத்திலஷணம்). உலக மக்கள் அவா அறுத்தலை ஏற்காது செயல்படுவதால், தருமம் வாட்டமுற்று, ஞானம் குன்றி அதருமம் ஒங்கும் போதெல்லாம் உலகை நிலைப்படுத்த, ஆதி நாதனான திருமால், அவதாரம் எடுத்து உலகை நிலை பெறச் செய்கிறான். இதை பகவானே பகவத் கீதையில் கூறுகிறார். அவ்விருவகை தருமமும் முப்பாலான பிரவிருத்தியும் வீட்டுப்பாலான நிவ்ருத்தியும் பகவானே வகுத்த இருவகை. அதற்கேற்ப ஒழுக்கத்தினால் உலகு நிலை பெறுகின்றது என்ற உண்மை, உறுதிப்படுகிறது.

மறைகளை ஏற்காதவர்களுள் சிலர் தன்னிச்சையாக, சம்பிரதாயங் களுக்கு புறம்பாக சில வழி வகைகளை உருவாக்கி செயல்படுவதும் கண்கூடு. பிரமாணம் என்று கருதப்படும் மறையை ஆதாரமாகக் கொண்டு, சான்றோர்களாலும், ஆன்றோர்களாலும் கடைப்பிடிக்கப்பட்டு வழிவழியாக வருவதே சம்பிரதாயங்களாகும். ஆதலால் அதற்கு எதிர்தட்டு ஏற்புடையதல்ல.

அறம் தழைக்க தடையாயிருப்பவைகள் அவாவும், பற்றுதலும் பொருள்களைப் பெற நினைப்பது பற்று. பற்றுக்கு காரணம் ஆசை, ஆசை நிறைவேறாத நிலையில் கோபம், கோபத்தினால் மனத்தாபம், தாபத்தினால் அறிவு குன்றுதல், இது நாசத்திற்கு வழி. ஆதலால் ஆசை யையோ அதன் எதிர்பார்ப்புக்களையோ வளர்த்துக் கொள்ளாமல், அவா அறுத்தலையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படின் அறம் தழைக் கும், அதுமட்டுமல்ல, மீண்டும் பிறந்து வருதலில்லாத பேரின்பத்தை தர

வல்லது, அவா அறுத்தல் என்பதனை,

*"ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே*
*பேரா இயற்கை தரும்"*

என்று திருவள்ளுவரும் உறுதிப்படுத்துகிறார் !

இனி, உறுதிப்பொருள்களுள் இரண்டாவதான "பொருள்" என்பதனைப் பற்றி அறிவோம்.

பொருள் நிலையற்றது, அழியும் தன்மை கொண்டது. இதை அளவோடு பெற்றால் இன்பம், அளவிற்கு மீறினால் துன்பம். உலகியல் வழக்கில் வீடு, நிலம், வாகனம், பொன், வெள்ளி, பணம், பதவி, பட்டம், புகழ், அன்னம், பானம், உற்றார், உறவினர், கணவன், மனைவி, மக்கள் ஆகியவைகளனைத்தும் பொருள் என்ற வகையில் "செல்வம்" என்ற ஒரே சொல்லால் வழங்கப்படுகின்றது. இவைகள் மனித இனத்திற்கு அனுபவப் பொருள்கள் (போக்யங்கள்) என்பதனால், இவைகளால் பெறப்படும் இன்பம் 'காமம்' எனப்படும். இவைகள் புலன்கள் வழி பெறப்படுவதால், அனைத்தும் புறப்பொருள்களாகும். புறப்பொருள்களால் பெறப்படும் காமமான இன்பம் சிற்றின்பமாகும். புறப்பொருள்களைச் சாராது பெறப்படும் இன்பமே பேரின்பமாகும். அது பெறப்படுவது வீடு என்ற நிலையில் தான்!

உலகில் செல்வம் என்றால், பொதுவாக அது பணத்தைக் குறிப்பிடுவதாகவே உலக வழக்கு. இதை அளவோடு சம்பாதித்து, அதன் அனுபவத்தால் மனம் நிறைவு பெற்று, அடையப் பெறுவதே இன்பமாகும். ஆனால் செல்வமான பணத்தை அளவுக்கு மேல் எவ்வகையாயினும் சம்பாதித்து விட வேண்டும் என்பதே வாழ்க்கையின் நோக்காக அமைந்து விட்டது. மனித வாழ்க்கைக்கு தேவையானதும் இன்றியமையாததுமானதும் செல்வம் தான் ! அதைச் சம்பாதிப்பதில் எந்தத் தவறுமில்லை. பகவத் கீதையில் பகவானும், பொருளை வேண்டி பிரார்த்திப்பவர்களுக்கு அதை அருளிச் செய்கிறேன் என்றுதான் கூறுகிறார். அதனால் பொருளைச் சம்பாதிக்க வேண்டாம் என்று வேதாந்தமும் கூறவில்லை. இருப்பினும், தன் தேவைக்கு அதிகமாக சம்பாதிக்க வேண்டும் என்ற தணியாத ஆசையைத்தான் விட்டு விட வேண்டும் என்று வேதாந்தம் வற்புறுத்துகிறது. ஆசை கடலைப் போல அளவிட முடியாதது. கடல் மழை நீராலும் ஆற்று நீராலும் நிறைவடையாதது. அதுபோல தணியாத ஆசைகளும் மன நிறைவை, தரவல்லது வல்ல.

செல்வம் சம்பாதிப்பது, நாணயத்தின் ஒரு பக்கம். செல்வத்தோடு அதன் விளைவுகளான ஆணவம், அழுக்காறு, இறுமாப்பு, தகாத செயல்கள், தூய்மையற்ற ஐயங்கள், உற்றார் உறவினர் வெறுப்பு ஆகியவைகளை கொள்முதல் செய்வது நாணயத்தின் மறுபக்கம். இவைகளினால் மனம் அமைதியையோ, நிறைவையோ பெறாத நிலையில், மனிதனை தவறான பாதைக்கு இழுத்துச் செல்லும் திறன் கொண்டதாகி விடும். ஆதலால்

இன்றியமையாததான செல்வத்தை அளவுடன் பெற்று, அதை தக்க வ
யில் பயன்படுத்துவது அவசியம். நாம்தான் செல்வத்தை ஆள வேண்
மேயன்றி, செல்வமும் செழிப்பும் நம்மை ஆட்டிப்படைக்க அனுமதித்தா
குணங்கெட்ட வாழ்வு அமையப் பெற்று தீயவினைகளின் மூட்
களோடும், தூய்மையற்ற வாசனைகளோடும், மரணம் நம்மைவழி அனுப்
வைக்கும் போது, அறத்தை தவிர எதுவும் நம்முடன் துணைவராது.

மனித உள்ளத்தின் மேம்பாடு, பண்பாடு எனப்படும். இது அனை
வருக்கும் பொது. ஆனால் நாகரீகம் பொதுவல்ல. நாட்டிற்கு நாடு, இன
திற்கு இனம், காலத்திற்கு காலம் வேறுபட்டதாக அமையும் தன்மை
கொண்டது. மேலும் மாறுதலுக்கும் உட்பட்டது. ஆகையால் மறை, தர்
நூல்கள், இதிகாசம் ஆகியவைகளின் அடிப்படையில் அமையப் பெற்
கலாச்சாரம், பண்பாடு, கோட்பாடுகள் ஆகியவைகளைச் சார்ந்து சு
கட்டுப்பாட்டுடன் வாழ்வதே நாகரீக வாழ்வாகும். மறை, முதலான ஞான
பொக்கிஷங்கள் வற்புறுத்துவது சத்தியம், அஹிம்சை, கற்பு, விசுவாசப்
தைரியம், அன்பு தியாகம், கருணை, பரோபகாரம், அகத்தூய்மை ஆகிய
தார்மீகக் கருத்துக்களாகும். இவைகளை சார்ந்து வாழ்வதே முப்பா
அறத்தை கடைப்பிடிப்பதாகும், அதாவது உறுதிப் பொருள்களுள் முதல
மூன்றான அறம், பொருள் இன்பமாகும்.

வாழ்க்கை, காலத்தின் நியதியில் அடங்கியுள்ளது, தற்காலிகமானது
ஆதலால், முறையான வழியில் ஞானம் பெற்று, வைணவம் கூறுவதுபோல
பக்தி வழியையோ, அல்லது எளிதான பரசமர்ப்பணம் என்ற சரணாகதி
வழியையோ. பின்பற்றி ஒரு நலமிக்க வாழ்க்கையை மேற்கொண்டால் மறு
பிறவிக்கு காரணமான அனைத்து வினைகளும் அற்றுப் போகும். சரண
டைந்துவர்களுக்கு மன்னிப்பு வழங்கி, அனைத்து வினைப் பயன்களை
தீர்த்து, முக்தி என்ற வீட்டை அளிக்கிறேன் என்று பகவத்கீதையில் பக
வானே வாக்களித்துள்ளார். ஆண்டாளும், "வாயினால்பாடி மனத்தினால்
சிந்திக்க போய பிழையும் புகுதருவான், நின்றனவும் தீயினில் தூசாகும்"
என்று, நின்ற வினைகள் அனைத்தும் தீயினில் இட்ட சாம்பலாகும் என்று
பகவானின் வாக்கை உறுதிப்படுத்துகிறார். இதுவே உறுதிப் பொருள்களுல்
நான்காவதான வீடு, என்ற வீட்டுப்பால் அறமாகும். இது பொதுவல்ல, முயற்
ச்சியுடையோர்க்கு மட்டும் உரித்தானது !

இவர்களுக்கு ஞானத்தை அளிப்பவர்கள் ஆச்சார்யார்கள். மறை
தமிழ் செய்த மாறனுக்கு, பகவானே, "மயர்வறமதிநலம்" அருளி ஞானம்
அளித்தார் என்று ஆன்றோர் பணிப்பர். ஆனால் நம்மைப் போல கட்டுப்
பட்ட சீவர்களுக்கு இவ்வகையில் ஞானம் பெறுவது மிகமிக அரிது. ஆத
லால், கலியுகத்தில் மாறனை முதல் ஆச்சார்யாராகக் கொண்டு வளர்ந்த
தியாக பரம்பரையில், ஒருவரை ஏற்றுக் கொண்டு ஞானம் பெறுதல் அவசியம்.

நாம் ஒரு பொருளை உள்ளது உள்ளபடி அறியும் அறிவு "பிரமை"
(VALID KNOWLEDGE) என்றும், பிரமை உண்டாவதற்கு சாதனமாக

அமையப் பெற்றது "பிரமாணம்" (AUTHORITY) என்றும் வழங்கப் படுகிறது. அநேக பிரமாணங்கள் இருப்பினும் வைணவம் ஏற்றுக் கொண்டது, காணுதல் (பிரத்யக்ஷம்), கருதுதல் (அனுமானம்), வாய்மொழி (சப்தம்) என்ற மூன்று பிரமாணங்களாகும்.

ஐம்புலன்களைக் கொண்டு, காலதாமதமின்றி பெறும் ஞானம் 'காணுதல்' என்பதாகும். (INTUTION).

ஒரு செயலைக் கொண்டு அதன் காரணத்தையோ அல்லது காரணத்திலிருந்து கார்யத்தையோ யூகித்துப் பெறும் ஞானம் காரணகார்ய அறிவாகும். இதுவே தருக்கவாத அறிவு (வாத பிரதிவாதங்களினால் பெறப்படுவது) என்றும் கூறப்படும் (REASON & LOGIC).

மறையின் அடிப்படையில், ஒரு தகுதி பெற்ற ஆச்சார்யாரிடம் பயின்று பெறுவது மூன்றாவதாக கூறப்பட்ட ஞானமாகும். (SUPER INTUTION) இவ்வகையில் பெறுவதே சாலச்சிறந்தது ஆகும் !

இவைகளுள் தருக்க வாத்தினால் பெறும் காரணகார்ய அறிவு மனிதனின் குணநலன்களை (CHARACTER) பாதிக்கும் வகையில் சில சந்தர்ப்பங்களைச் சார்ந்து அமையக் கூடும். தருக்க வாதத் திறமையின் ஆற்றலினால் ஏற்க முடியாதவைகளையும் ஏற்கும்படி செய்யமுடியும் என்ற துணிவு, சாதனையாகி விட்டால், அநியாயத்தையும் நியாயப்படுத்திப் பேச முடியும் என்று மனம் உரம் பெறும். இந்நிலையில், நல்லது, கெட்டது, தக்கது, தகாதது, புறக்கணிக்கப்பட்டு, நேர்மையும் நீதியும் பாதிப்புக்குள் ளாகும். இது, காலப்போக்கில், பொய் உரைத்தல், களவாடுதல் முதலான வைகள் சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாக செய்யப்பட்டது, குற்றமல்ல என்றும் வாதாட தூண்டும். இரகசியத்தில் கொலை கொள்ளை முதலான செயல்களை செய்யவும் தூண்டலாம். அதனால் தருக்கவாதமோ பகுத் தறிவு வாதமோ, சம்வாதமாக அமையப் பெறாவிடின், குணநலன்கள் பாதிக்கும்படி நேரிடும் என்பதை உணர முடிகிறதல்லவா ?

ஆதலால் குண நலன்கள் கொண்ட ஒரு சமுதாயம் உருவாவதற்கு, ஒவ்வொரு மனிதனுக்கும் நம்பிக்கை உரம் பெற்றதாக அமைதல் அவசி யம். எண்ணங்களை தாங்கும் அடித்தளம் நம்பிக்கை.அது ஆக்கபூர்வமான செயல்களாற்றும் எண்ணங்களை தாங்குபவையாக இருக்க வேண்டும். ஞானத்திற்கு வடிகால் அறிவாற்றல். குணநலன்களற்றவனுடைய அறிவாற்றல், அழிவுப் பாதையில் செல்லும் என்பது நாட்டில் நடக்கும் சில நிகழ்ச்சிகள் உறுதிப்படுத்துகின்றன. ஆதலால் மறைவழி நன்னெறிகளை சார்ந்தும் ஆச்சார்யார்கள், சான்றோர்கள், ஆகியோர்களின் சேர்க்கை கொண்டும். நம்பிக்கையை வளர்க்க வேண்டும்.

எம்பெருமானின் குணநலன்களையும், தத்துவங்களையும், மன உணர்வில் நிறுத்தி நம்பிக்கையை வளர்க்க வேண்டுமென்றால், ஆச்சார் யார்களால் கூறப்படும். உபதேசச் சொற்களினால் பெறும் ஞானமே தலை சிறந்த ஞானமாகும் !

## இயல் 2

# உபதேசச் சொற்கள்

நமது வினைப்பயன்களால் பெறும் இன்ப துன்பங்களை அனுபவிப் பதற்குரிய இடம் மனித உடல். ஆனால் துன்பம் கலவாது, இன்ப வாழ்க்கையையே ஆன்மாவான சீவன் பெறுதல் வேண்டும் என்ற குறிக் கோளை அடைய உரிய வழி, எதுவென்று தெரிந்து செயலாற்ற வேண்டும். அப்படி செய்யாமல் தோன்றியபடியெல்லாம் செய்வதோ, பலவழிபாட்டு முறைகளை அனுசரிப்பதோ முறையல்ல. உயிரான சீவன் பெறக்கூடிய இன்பமான உயர்ந்த வாழ்க்கையைப் பெற, கேவலம் மனித முயற்சியால் மட்டும் பெறப்படுவதா ? அல்லது எம்பெருமானின் அருளும் வேண்டுமா ? என்பதை ஆராய்ந்தறிய வேண்டும். பிறகு இதனை நாமே நமது முயற்சி யால் மட்டும் அறிய இயலுமா ? அல்லது உணர்ந்தவர்கள் சொல்லக் கேட்டு அறிய வேண்டுமா ? என்பதையும் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். அதன்பின் உணர்ந்தவர்கள் அதை எப்படி பெற்றார்கள் என்ப தையும் விசாரித்தறிய வேண்டும். இதற்காக இறைவனின் அருளைப் பெற இறைவன் ஒருவரா, பலரா என்பதையும் அறிதல் வேண்டும். அனாதி காலமாக தொன்று தொட்டு ஒராண் வாய்மொழியாக எந்த உபதேசச் சொற்கள் உருமாறாமல் பெருகி வருகின்றனவோ, அவைகளையே மூலா தாரமாகக் கொண்டு, அறிவைப் பெருக்கி தெளிய வேண்டும். அந்த உப தேசச் சொற்களே, மறை என்றும் வேதம் என்றும் வழங்கப்படுகிறது.

வடமொழி "வினைவேர் சொல்லான வித் கற்க" என்பதிலிருந்து தோன்றியதால், வேதம் எனப்பட்டது. இறைவனைப் பற்றிய மெய்யறிவை உணர்த்துவதற்கு வேதம் காரணமாக அமைவதால், இதற்கு "அறியப் படுவது" என்றும் பொருள் கூறலாம். தவஸ்ரேஷ்டர்களான மஹரிஷிகள் தாங்கள் புரிந்த தவத்தின் பயனாக முழுவேதங்களையும் பகவானிட மிருந்து கேட்டறிந்தவர்கள் என்பதால் வேதம் சுருதியாயிற்று.

சுருதி என்றால் செவிப்புலன் வழி அறிவது. பல வகைப்பட்ட ஒலி களை செவி உணர்ந்திடினும், செவியின் சுவையுணர்வு என்பது, வேதாந் தப் பொருளின் விளங்கங்களும் அதன் சார்புடைய தர்மநூல்களுமான உணர்வேயாகும். இவ்வுணர்வே இறைநிலை ஞானம் என்றளவில் செவிக்கு அமுதமான செவிச்செல்வமாகும்.

விசுவரூபன் என்றும் விசுவாத்மா என்றும் கூறப்படும் இறைவன், அனைத்துயிர்களுக்கும் தஞ்சம் அளிப்பவன் என்ற நிலையில் அவனைப் பற்றிய உணர்வே மெய்யுணர்வு. மற்ற உணர்வெல்லாம் புற உணர்வாகும். மெய் என்றால் சத்தியம். இதுவே வேதத்திற்கும் வேதம் உணர்த்தும் பொருளுக்கும் பொருந்தும். அப்படி வேதம் உணர்த்தும் பொருளே பரம் பொருளான பகவான் எனப்படுகிறான். பகவான் என்பது வடமொழி. "பக"

என்னும் சொல் "மதுப்" விகுதி ஏற்று பகவான் என்றாயிற்று. பக என்னும் சொல் ஞானம், பலம், ஐசுவர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்களை உணர்த்தும் சொல்லாகும். இவ்வகையில் ஆறு குணங் களுக்கு இருப்பிடமானவன் "பகவான்" ஆயிற்று. ஆறுகுணங்களைக் கொண்டவன் என்று பொருள்படும். "ஷாட்குண்யமயன்" என்ற சொல் ஸ்ரீமந் நாராயணனைக் குறிப்பிடும். மேலும் நாராயணன் என்ற சொல் அனைத்து பூதங்களையும் உடையவன் என்றும், அனைத்து பூதங்களிடத் தும் ஆன்மாவாக இருப்பவன் என்பதையும் குறிப்பிடும். அதனால் மறை உணர்த்தும் மெய்பொருளான பகவான் ஸ்ரீமந் நாராயணனே என்பதை அறியக்கூடும். இக்குணங்களுள் ஒன்றிரண்டில் சிறிதளவு உடையவர் களும் பூசிக்கத்தக்கவர்கள் என்பதினால், அவர்களையும் இறைவனாக கருதுவது உபசார வழக்கமாகும் ! ஸ்ரீமந் நாராயணனே கிருஷ்ணனாக அவதரித்து வேதங்களின் சாரத்தை கீதையாக உபதேசித்ததை "பகவத்" என்ற அடைமொழியிட்டு, "பகவத் கீதை" என்று கூறப்படுவதும், கிருஷ் ணனது வரலாற்றினை கூறும் நூலை "பாகவதம்" என்று கூறப்படுவதும், பகவான் என்ற சொல் ஸ்ரீமந் நாராயணனையே குறிப்பிடும், என்பதற்கு சான்றுகள். மாறன் சடகோபன் தனது திருவாய் மொழியில் "ஆதியம் பகவன்" என்று அருளிச் செய்தது ஆதிமூலமான ஸ்ரீமந் நாராயணன் என்பதையே உறுதிப்படுத்துகிறது. ஆக இதனால் தேறுவது பலரல்ல. ஒரு வர்தான், அவர் பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனே என்பதாகும். பக வானை வழிபட்டவர்கள் பாகவதர்களானார்கள். வைணவத்தைச் சார்ந்த யதிகளை "முக்கோல்பகவர்கள்" என்று வழங்கப்பட்டது இங்கே நினைக் கிற்பாலது !

முற்காலத்தில் வாழ்ந்த இருடிகள், முனிவர்கள் அனைவரும் மறை யைக் கண்டவர்கள். அதாவது ஓராண்வாய் மொழியாக அப்யசித்து, செவிச் செல்வமான வேதத்தைப் பெற்றவர்கள். ஐம்புலன் வழி பெறப்படும் ஞானம் காண்டல் என்ற பிரமாணத்தைச் சார்ந்ததால், செவிப்புலன் வழி அறியப்பட்டதால், மறையைக் கண்டவர்களானார்கள் !

வேதங்களை நான்கு கிளைகளாகப் பிரித்து, அவைகளை தக்க அதிகாரிகளுக்கு உபதேசித்து, இந்த கலியுகத்திலும் ஓதுவதற்கும், ஓது விப்பதற்கும் ஏற்பட அருளிச் செய்தவர் கிருஷ்ண த்வைபாயனர் என்ற வேதவியாசராவர். ஒவ்வொரு மகா பிரளயத்திற்கும், பின் தோன்றும் ஒவ்வொரு கலியுகத்திற்கும் ஒரு மகா புருஷர் தோன்றி வேதங்களான மறையை வழங்குவர் என்று ஆன்றோர் பணிப்பர்.

ருக்வேதம் பரமனின் புகழைத் துதிப்பதாகும்.

யஜுர்வேதம் கிரியைகளான ஆராதனை, யாகம், தானம் முதலிய வைகளைப்பற்றி விளக்குவதாகும்.

கானத்துடன் போதிப்பது சாமவேதமாகும்.

அதர்வண வேதம் அர்த்த சாஸ்திரம், ஆயுர்வேதம், அரசியல், வான்கோள்இயல், யுத்த முறைகள், மந்திர தந்திரங்கள் ஆகியவைகளை விளக்குவதாக அமையப் பெற்றது.

வேதம், பூர்வபாகம், உத்திரபாகம், என இரண்டு பிரிவுகளாகப் பிரிந் துள்ளது. சம்பிரதாயங்கள் செயல்கள் ஆகியவைகளைப்பற்றி, விதி வாக்யங்களாக கூறும் கர்மகாண்டம் பூர்வ பாகமாகும். உபநிடதங்களை கொண்ட வேதசாரம் என்ற ஞான காண்டம் உத்திரபாகமாகும். வேதத் திற்கு ஞானகாண்டமே நிர்ணயமாகவும், தலையாகவும் அமைந்துள்ளதால், இப்பகுதி "வேதாந்தம்" என்றும் வேத சிரசு அதாவது மறைமுடி என்றும் வழங்கப்படுகிறது. மறைமுடியிலிருந்தே தத்துவம், உறுதிப் பொருள்களின் விளக்கங்களை அறிய வேண்டியிருப்பதால், அவ்வப்பொழுது எழும் ஐயங் களை விளக்கி உண்மையை அறிய "பிரும்ம சூத்திரம்" என்ற நூலையும் அருளிச்செய்தவர் பாதநாராயணர் என்று வழங்கப்படும் கிருஷ்ணத்வை பாயனரே !

காத்தல் (ரக்ஷித்தல்) என்று பொருள்படும் "ச்ரு" என்ற வடமொழி வினைவேர் சொல்லிருந்து பிறந்தது சரீரி, சரணியன், சரண ஆகிய சொற்களாகும். உலகு தோன்ற காரணமானவனான ஸ்ரீமந் நாராயணனே காக்கும் பொறுப்பையும் ஏற்றுள்ளவன். அவனே பரன். உலகு, உயிர், உடல், ஆகியவைகளை தனக்கு சரீரமாக கொண்டவனாதலால், 'சரீரி' எனப்படு கிறான். காத்தலின் காரணமாக 'சரண்யன்' ஆகின்றான். சரண்யனைப் பற்றியே, உயிர்கள் உய்யவேண்டுமாதலால், வைணவம் ஏற்றுக் கொண்ட உய்வுபாயம், 'சரணாகதி' எனப்படுகிறது. இதனால் அறியப்படுவது பக வான் சரீரி, உலகும் உயிர்களும் சரீரம். இத்தகைய சரீரி, சரீர பாவனை யான சித்தாந்தம், இதர சித்தாந்தங்கள் ஏற்றுக் கொள்ளாத வைணவம் மட்டும் ஏற்றுக்கொண்டது என்பதினால் வைணவத்திற்கே உரித்தான ஒரு பிரதி தந்திர சித்தாந்தம் ஆகும் ! ஸ்ரீமந் நாராயணனே பரன். அவனே சரீரன், உலகிற்கு காரணமானவன் என்பதினால் அவனைப்பற்றி பேசும் பிரும்மசூத்திரம் சாரீரக சாஸ்திரம் என்றும் கூறப்படுகிறது.

வேதம் அனாதி. அதை யாரும் இயற்றவில்லை. அதற்கு கர்த்தா கிடையாது. அதை தனி ஒருவர் இயற்றியிருந்தால், இயற்றுபவரின் குண தோஷங்கள் குற்றங்களாக அமைய வாய்ப்புக்கள் உண்டு என்பதினால், வேதம் எவராலும் இயற்றப்பட்டதல்ல (அபௌருஷேயம்) முந்தைய கல்ப கால ஆரம்பத்தில், எவ்வகையில் நான்முகனுக்கு பகவான் உபதேசித் தாரோ, அதேபோல அடுத்த கல்ப தொடக்கத்தில், முன்பு உபதேசித்த கிர மப்படி, மறை பாகங்களை நினைத்து நினைத்து, சிறிதும் மாறுதலின்றி பக வான் திசைமுகனுக்கு உபதேசிப்பதால், வேதம், "ஆனுபூர்வி" என்று கூறப்படுகிறது. பகவானும் வாய்மொழியாகவே வெளிப்படுத்தினாரேயன்றி, இயற்றவில்லை. ஆதலால் வேதமான மறை வாய்மொழி, அதை ஓராண் வாய்மொழியாகவே ஓதப்பட்டே பெற்றுக் கொள்ள வேண்டும். இது எழு

தாக்கிளவி, அதாவது வரிவரியாக வரிப்பாட்டு மூலம் இதை பெற இய லாது. திருமங்கை ஆழ்வாரும் பெரியதிருமொழியில் "வாயோது வேதம்" (3-2-2) என்று உறுதிப்படுத்தியுள்ளார்.

தொன்றுதொட்டே நமது பாரதத்தின் தமிழ்நாட்டில், திருமால் தான் முழு முதற்கடவுள் என்பதற்கு பண்டை தமிழ் இலக்கியங்களே சான்று. அகத்தியரின் சீடரான தொல்காப்பியர், மலைகள், சோலைகள் சூழ்ந்த காடு சார்பான இடங்களில் திருமாலை தெய்வமாகக் கொண்டு வழிபட் டார்கள் பழந்தமிழ்ர்கள் என்று உறுதிபட கூறியுள்ளார். புராதான வைணவ தலங்களான திருமலை, திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, ஆகியவை கள் தொல்காப்பியரின் கூற்றுக்கு சான்றாக இன்றும் விளங்குகின்றது. இளங்கோவடிகளும், திருமலையில் நின்றானையும், அரங்கத்தில் கிடந்தா னையும், சிலப்பதிகார காப்பியத்தில் சிறப்பித்து பேசப்பட்டதிலிருந்தே, தமிழ்நாட்டின் ஆதி சமயங்களுள் வைணவமே தலையானது என்றும், திரு மாலே பரம்பொருள் என்றும் அறிந்திருந்தது என்று கூறத்தடையில்லை. மிகப் பழமையான வைணவத்தை, அழகும் மெருகும் ஊட்டி, சிறந்த முறை யில் வளர்த்தவர்கள், திருமால் திருவடிச் செல்வர்கள் எனப்படும் ஆழ்வார் கள். அவர்களுள் சிறந்தவரான மாறன் சடகோபன் கூறிய "நிற்கின்றதெல் லாம் நெடுமால்" என்பதை உணர்ந்த பின் ஸ்ரீமந் நாராயணனே பரம் பொருள், அவனைத்தவிர வேறு இல்லை என்றும் உணர்வு உறுதி கொண்டதில் வியப்பில்லை !

காலப்போக்கில் அறநெறிக்கோட்பாடுகள் (தருமம்) நலிந்து, இருள் மூடிய உலகை, தனது உபதேச் சொற்கள் மீட்க முடியாத நிலையில், தானே தனது மேன்மையை மறைத்துக் கொண்டு, மனித உருவில் இராமனாக வும், கிருஷ்ணனாகவும், திருமால் அவதரித்து உய்வித்தார். அப்படியும் அனாதிகாலந்தொட்டு வினைப்பயன்களின் விளைவாக, அகத்தின் இருள் அகலாத பல கோடி மக்களின் நலங்கருதி, தனது அம்சங்களை, திரு வடிச் செல்வர்களாக, நான்கு வர்ணங்களிலும் தோன்றச் செய்து, மக்க ளோடு கலந்துறவாடி, பிறவிப் பிணியிலிருந்து விடுபடும் வழியை உபதே சிக்கச் செய்தார். இவ்வகையில் தோன்றிய திருவடிச்செல்வர்கள். ஸ்ரீமந் நாராயணின் அனந்த கல்யாண குணங்கள் என்ற அமுதக் கடலில் ஆழங்கால்பட்டு, நல்முத்துக்களான பிரபந்த பாசுரங்களை இனிய தமிழ் மொழியில் வாரி வழங்கி மக்களை உய்வித்தார்கள் என்பதினால் ஆழ்வார் கள் என விளங்கினார்கள்.

திருமாலின் அங்கங்களே, ஆழ்வார்களாகத் தோன்றி, உபதேசித்த மையால், திருமாலின் வாக்கிலிருந்தே வெளிப்பட்டவைகளைப்போல, ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்களும் மிக மேம்பட்டவைகளாகும். வேதங் களின் கருப்பொருளையும், ஆழ்ந்த கருத்துக்களையும், பொருள் மாறாது பிரபந்த பாசுரங்களும், அவைகளின் சிகரமான திருவாய் மொழியும் உப தேசிப்பதால், இவைகள் "மறை" ஆயிற்று. இதன் காரணமாகவே,

ஆழ்வார்களின் அருளிச் செயல்களான "திவ்யபிரபந்தம்", "திரமிட வேதம்" என்றும் "திராவிடவேதம்" என்றும் வழங்கப்படுகிறது.

உலகத்தார் சிலருக்கு கூடாது என்று விதிக்கப்பட்ட வேதங்களைப் போலல்லாது, யாவருக்கும் பயன்படும் படி, வேதங்களின் கருப்பொருளை, தேனினும் இனிய தமிழ் பாக்களாகப் பாடியும், உணர்த்தியும், உபதேசித் ததால், திவ்யபிரபந்தம் தமிழ் மறையாயிற்று.

வேதங்கள் அனைத்தும் வடமொழிச் சொற்களால் உபதேசிக்கப்பட் டவைகள். (வடமொழியென்றால் நாட்டின் வடக்குப் பகுதியில் பேசப்பட்ட, பேசப்படும் மொழி என்று பொருள் படாது. சமஸ்கிருத மொழியில் "வட" என்ற சொல்லிற்கு ஆலமரம் என்று பொருள். ஆலமரம் மிக விரிவாக பரந்து வளரும் மரமானதால், அதேபோன்று மிக விரிவாக பரந்து வியா பித்த மொழி என்று பொருள்.) அதுவே சமஸ்கிருதமொழி அதனால் இம்மொழி உலகத்தாருக்கு பொதுவானது திவ்யபிரபந்தம் என்ற தமிழ் மறை தமிழறிந்த மக்களுக்கு குறிப்பாக வைணவத்திற்கும் உரித்தான ஒரு அசாதாரண நிதியாகும். இரண்டு மொழிகளிலும் உள்ள மறையிரண்டும் தனித்தனி பொருள் கொண்ட இரண்டு வேதங்களல்ல. ஒரே பொருளை உணர்த்தும் ஒரே மறை. இவை இரண்டையும் ஓதி உணர்ந்த வைணவர் கள் உபயவேதாந்திகள் என அழைக்கப்படுகின்றவர்கள்.

வேதம் தமிழ் செய்தான் என்றும், அருமறை தமிழ் செய்தான் என்றெல்லாம் கூறப்படுவது. வடமொழியிலான உபதேசச் சொற்களை, நம்மைப் போன்றவர்களின் நல்வாழ்விற்காக, தமிழ்மறையாக்கி, வாய்மொழி யாக உபதேசித்தருளிய மகான் தூயமாறன் சடகோபனாகும் !

இவர் தோன்றி வளர்ந்து வேதம் தமிழ் செய்த தலம் பொருனைத் துறையிலுள்ள குருகாபுரியாகும்.



# இயல் 3

# பொருனைத் துறை

தென்னகத்திற்கு எழுந்தருளிய குறுமுனி அகத்தியரும், அவரது மனைவி லோபாமுத்ராவும், பொதிகை மலை தாழ்வரையில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு, தமிழ் வளர்க்கும் பணியில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அக்காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந்த தவயோகிகளான மதங்கர், டங்கர், பிரமநந்தி, திரமிடாசார் ஆகியோர்கள் மறைவல்லுனர்களாகவும், தமிழ் அறிஞர்களாகவும் சிறந்து விளங்கியவர்கள். வேத வியாசர் அருளிய பிரும்ம சூத்ரம் என்ற நூலுக்கு வசன நடையில் தமிழில் உரை எழுதியவர் என்ற பெருமைக்குடையவர் டங்கர் என்று ஆன்றோர்கள் கூறுவர். அந்த காலத்தில் வாழ்ந்த தமிழ் அறிஞர் "காப்பியர்" என்பார். அகத்தியர் தமிழுக்கு, இலக்கணம் வகுத்த பேரறிஞர். இவர் பண்டை காலத்தவராதலால் 'தொல்' என்ற அடைமொழியிட்டு தொல்காப்பியர் என்று வழங்கப்பட்டார். அவர் இயற்றிய இலக்கணநூல் தொல்காப்பியமாகும்.

பூமியர் கோன் தென்னாடு முத்துடைத்து என்ற முது மொழிக்கிணங்க, முத்து வளத்தினை மிகுதியாகப் பெற்றிருந்த நாடு, வழுதிவள நாடாகும். நல்முத்துக்களை அணிந்த அகத்தியரின் இயல், இசை, நாடகம், என்ற செந்தமிழ் பாவைநல்லாள், பொலிவுற்று உலாவரும் நாடாக விளங்கிய தென்பாண்டி நாடு, நெல்லை சீமையை உள்ளடக்கியது. "பாண்டிய! நின்னாடுடைத்து நல்ல தமிழ்", என்று ஔவையாரால் போற்றப்பட்டு தமிழ் வளர்க்கும் பண்ணையாகத் திகழ்ந்தது நெல்லைச் சீமை !

பொதிகை மலையினின்று தாவிக்குதித்தோடிய மருவுநீர் தண்புனல், மலைச்சரிவுகளில் வீழ்ந்தும் பாய்ந்தும், ஓடியும், தவழ்ந்தும், ஓடையாகப் பெருகி, மருவுநீர், என்ற பெயருக்கேற்ப, மருவான தவணத்தின் மணத்தை ஏந்தியும், செம்பொன்னான தாமிரத்தின் சாரத்தைக் கொண்டும் பருத்த தெங்கின் பழங்களையும், தீஞ்சுவை மாங்கனிகளையும் உருட்டி வரும் தென்புனல் பொருநை, முத்தமிழ்பாவை நல்லாள் உலாவரும் நாட்டின் வளம் கொழிக்க, நெல்லை சீமையில் தாமிரபரணியாக ஓடுகிறாள்.

பொருநை ஆற்றின் தென்கரையில் வண்டாடும் சோலைகளார்ந்தும், மாடமாளிகைகள் சூழ்ந்தும் அழியாத்தொல் புகழ் கொண்டதுமான நகரில், மறைவழங்கிய மாறனின் மூதாதையரான "குருகன்" என்பவர் சிற்றரசாக கோலோச்சி வந்தார். குருகன் ஆண்டதால், அந்த நகர் குருகாபுரி என்று வழங்கப்பட்டது. மேலும் பிரளய வெள்ளத்தால் அழிந்த உலகம் மீண்டும் தோன்றிய போது, முதலில் தோன்றிய இடம் குருகூர் என்பதால் "ஆதிபுரி" என்றும் வழங்கப்பட்டது. ஒரு சாபத்திற்குள்ளான 'குருகு' என்ற வெண்சங்கு பூச்சி, ஆதிநாதப் பெருமானை ஆயிரம் ஆண்டுகள் வலம் வந்து பேறு பெற்றதாலும் குருகாபுரி என்ற பெயரைப் பெற்றது. மாறன்

என்ற நம்மாழ்வார் அவதரித்த தலம் என்பதால் "ஆழ்வார் திருநகரி" என்றும் பல பெயர்களால் வழங்கப்படினும், இன்று ஆழ்வார் திருநகரி என்றே வழங்கப்படுகிறது.

இந்நகரின் சிறப்பிற்கு காரணமாய் அமைந்த புராண வரலாறுகளில் சிலவற்றை இப்பொழுது நோக்குவோம்.

விந்திய மலைச்சாரலில் உள்ள ஒரு சிற்றூரில் மந்தன் என்று ஒரு அந்தணன், அவ்வூர் ஆலயத்தில் எடுபிடி வேலைகளை செய்து கொண்டு வாழ்ந்து வந்தான். மேற்குடியிற் பிறந்தும் கூடா நட்பின் காரணமாக பிறப் பொழுக்கம் போற்றிக் காப்பாற்றப்படவில்லை. இருப்பினும், குலமரபிற் கேற்க, கோவில் அரச்சகரிடம் வேதம் கற்றும், அது அவன்பால் ஒட்டாது கெட்டது. தண்ணீருக்கு தூய்மை படுத்தும் தன்மை இருப்பினும், தோல் பையில் இட்ட தண்ணீர் தோலை தூய்மைப்படுத்த இயலாது தானே கெடும்! அது போல குலதர்மம் தவறியவனிடமும், வேதம், ஓதுதல் ஒட்டாது. தானே கெடும். அதனால் அவனுக்கு வேதம் ஓதுவிக்க அர்ச்சகர் இசையவில்லை. இதை உணர்ந்த மந்தன், தான் கெட்டதற்கு வருந்தி, அதற்குகழுவாயாக, ஆலயத்தின் திருச்சுற்றுகளிலுள்ள புல் பூண்டுகளை களைந்து, சுத்தம் செய்து அவைகளை விற்று காலம் கழித்து வந்தான். அவனது காலம் முடியவும், அதே ஊரில் தாழ்ந்த குலத்தில் பிறந்து 'தாந்தன்' என்ற பெயரில் வாழ்ந்து வந்தான். இப்பிறவியில் குல ஒழுக்கம் கெடாது, இறை உணர்வோடு, ஊர்மக்களுக்கு தன்னால் இயன்ற உதவி களைச் செய்து வாழ்ந்து வந்தான். ஒரு தினம், அவனது கனவில் ஒரு முதியவர் தோன்றி, தென்னாட்டிலுள்ள ஆதிபுரிக்குச் சென்று, ஆதிநாதனை வழிபட்டு வந்தாயானால், பெறுதற்கரிய பேறுகிட்டும் என்று கூறியது போல உணர்ந்தான். அதன்படி தாந்தனும் குருகாபுரியை அடைந்து, ஆலய நந்த வனத்தை சுத்தம் செய்து கொண்டும், மலர்களை கொய்து மாலைகளாக தொடுத்து வழங்கியும், இன்னும் பல பகவத் கைங்கர்யங்களையும் செய்து கொண்டு பொழுதை நற்பொழுது போக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தான்.

இரண்யாக்ஷன் என்ற ஒரு அசுரனால் உப்புக் கடலில் அடி ஆழத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்த பூமாதேவியை, திருமால் ஏனத்துருவில், அவ னோடு போர் புரிந்து, அவனை அழித்து, தனது கோட்டால், பூமியை வெளிக்கொணர்ந்த பொழுது, முதலில் தோன்றிய பகுதியே, ஆதிபுரி என்று வழங்கப்பட்டது. இத்தலத்தில் எம்பெருமான் ஆதிநாதனாக எழுந் தருளி தரிசனம் கொடுக்கிறார் (சேவை சாதிக்கிறார்). மேலும், பூமாதேவிக்கு சரண்யனாக சரமஸ்லோகத்தை உபதேசித்து ஞானம் வழங்கியதாலும் "ஞானபிரான்" என்று புகழப்படுகிறார். இதன் காரணமாக, அரக்கர்களை வெற்றி கொள்வதற்கு உரிய சக்தியை வேண்டி பெறுவதற்கு இந்திரன் உள்ளிட்ட அனைத்து அமரர்களும், தாந்தன் வாழந்த காலத்தில், வந்தி ருந்தார்கள். பகவத் ஆராதனத்திற்குரிய மலர்களையும், திருத்துழாயையும் சேகரிக்க அமரர்கள் நந்தவனம் சென்ற பொழுது அவர்களுக்கு முன்ன

மேயே, அங்கு சென்ற தாந்தன், அனைத்து மலர்களையும் துழாயையும் கொய்து, மாலையாகத் தொடுத்துக் கொண்டிருந்ததைக் கண்டார்கள். உடனே அமரர்கள் வெகுண்டு தாந்தனை கடிந்தும், ஏசியும், அவனது குலங்கருதி அவமதித்தும் நடந்து கொண்டார்கள். ஆனால், தாந்தனோ, பதிலேதும் கூறாமல் தன் செயலிலேயே கண்ணாயிருந்தான். இதனால் தாங்கள் அவமதிக்கப்பட்டோம் என்று ஆத்திரமுற்று, தாந்தனை தாக்கச் சென்ற கணத்திலேயே, தங்களது பார்வையை இழந்தார்கள் !

குலத்தால் தாழ்ந்திருந்தும், பண்பால் உயர்ந்திருந்த தாந்தனை அவமதித்து தாக்கியதின் பயனாக பார்வையை இழந்த அமரர்கள், செய்வதொன்றுமறியாது, ஆலயத்திற்கு சென்று ஞானபிரானை சரணடைந்தார்கள். அப்பொழுது ஒரு அசரீரி குரல், "நீங்கள் அமரர்களேயாயினும், திருமால் அடியார் ஒருவரின் குலங்கருதி, அவமதித்து அவன் உள்ளத்தை புண்ணாக்கியதால், கண்பார்வையை இழந்தீர்கள். நீங்கள் உங்கள் செயலிற்கு மனம் வருந்தி தாந்தனையே சரணடையுங்கள். அவன் உள்ளம் உகந்தால் நீங்கள் இழந்த பார்வையைப் பெறக்கூடும்"! என்று ஒலித்தது.

பிறகு, அவர்கள் தாந்தனிடம் சரணடைய இழந்த பார்வையைப் பெற்றார்கள். அது சமயம் ஆதிநாதப் பெருமாளும் தோன்றி, தாந்தனின் மேனியை வருட, பெறுவதற்கரிய பேறான வீட்டைப் பெற்றான். அமரர்களுக்கும் ஆசி வழங்கி, அசுரர்களை வெல்லும் சக்தியையும் அளித்தானாம் !

இங்கு ஒரு முக்கியத்துவத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அமரர்கள் மனித இனத்திற்கு மேம்பட்டவர்கள். எனினும் அசுரர்களை வெல்வதற்கு வேண்டிய சக்தியைப் பெற, அதாவது ஒரு கைம்மாறு கருதி, பகவானை வேண்டி ஆராதித்தார்கள். ஆனால் தாந்தனோ, அவர்களது ஏச்சிற்கும் பேச்சிற்கும் பதிலளிக்காது, பகவத் கைங்கர்யமே தலையாய கடமை என்று, பகவானிடம் ஓர் மனத்தினனாக தனது செயலிலேயே ஈடுபட்டிருந்தான். முற்பிறவியின் ஊழ்வினை பயன்கள் காரணமாக, அவன் பெற்ற உடலினால் அவன் தாழ்ந்தவன் என்றாலும், ஆத்மஞானம் பெற்ற உள்ளத்தால் உயர்ந்தவன், அதை உணராது அமரர்கள் செயல்பட்டதால், அவர்களின் செயல் அவர்களையே தாக்கியது. அமரர்களும் பரதந்தரையர்கள் என்பதை உணராது செயல்பட்டதின் விளைவு இது.

பகவானே சர்வசேஷீ. நாமெல்லோரும் அமரர்கள் உள்பட அவனது சேஷபூதர்கள் என்ற எண்ணம் ஓங்க ஓங்க சுதந்தரமாக செயல்படும் தன்மையான ஆணவம், அதாவது நான், எனது, என்ற எண்ணங்கள் தேய்ந்து போகும். அவனது கழல்களே உபாயம் என்று பக்திக்கு உள்ளத்தையும், கைங்கர்யத்திற்கு உடலையும் உரிமையாக்கி வாழ்ந்தால் ஒழுக்கம், பண்பு, புலனடக்கம், சித்தித்து உறுதிப்பொருளான வீட்டைப் பெற முடியும் என்ற நம்பிக்கையுடன் வாழ்ந்த தாந்தனின் வாழ்க்கையே நமக்கு முன்னோடி!

பொதுவாக பாகவதர்களை குலங்கருதி அவமதிக்கக்கூடாது என்பது மரபு. மகாபாரதத்தைத் தமிழில் உரைத்த வில்லிபுத்தூராார் என்ற கவிஞர், மாறன் சடகோபன் நான்காவது வர்ணத்தில் பிறந்தவர் என்பதை அறிந்தவாராயினும், "தத்துவத்தின் எல்லைகளைக் கண்ட சதுர் மறை புரோகிதன்" என்றே பேசியுள்ளார். மேலும் எம்பொருமானின் அருளினால் ஆழ்ந்துணரும் அறிவைப் பெற்று, வேதம் என்ற ஆழ்கடலில் ஆழங்கால் பட்டு, மிக உயர்ந்த மறைப்பொருளை தெளிவாக ஓதி அருளிச் செய்த ஆழ்வார்களுள் தாழ்ந்த குலத்தவர்களும் உண்டு. அவர்களுக்கும், அவர் களை ஒத்த ஞானியர்களுக்கும் கதியாவது வாசுதேவ தத்துவமான வைணவம் என்ற கருத்தை மனதில் கொண்டால், தாந்தனையும் முனி வாகனரான திருப்பாணனையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். குரு காபுரியின் சிறப்பைக் கூறும் மற்றொரு வரலாற்றினையும் காண்போம்.

"கிராதன்" என்ற ஒரு வேடர் தலைவன், தனது ஊரிலும், அதைச் சுற்றியுள்ள கிராமங்களில் வாழும் மக்களைத் துன்புறுத்தி, பணம் பெற்று காலங்கழித்து வந்தான். ஒரு சமயம் தென்திசை நோக்கி பயணப்பட்டு செல்லுகையில், களைப்பின் மிகுதியால், ஒரு ஆலமரத்தடியில் படுத்து றங்கி களைப்பாறி, பிறகு பயணத்தைத் தொடர்ந்தான். அந்த ஆலடி பூமி, பரம வைணவ பாகவதனான தாந்தனின் இருப்பிடமாகச் சிலகாலம் இருந்ததால், அதன் பாதிப்பால் கிராதனின் தீய உள்ளம் நல்ல உள்ளமாக மாறி, துன்புறுத்தும் இயல்பை விட்டு பரோபாகார சிந்தனை பெற்று வாழத் தொடங்கினான். பல ஆண்டுகளுக்குப் பிறகு, அவன் காலம் முடியவும், அடுத்த பிறவியில் ஒரு அந்தணனாகப் பிறந்து "சங்கன்" என்ற பெயரில் வாழ்ந்து வந்தான்.

இந்நிலையில் சங்கனின் உள்ளம் ஒரு விபரீத ஆசையின் மேல் நாட்டங் கொண்டது. மும்மூர்த்திகளுக்கும் மேலான ஒரு பதவியை தான் பெற வேண்டும் என்ற விபரீத ஆசையின் விளைவாக கடுந்தவத்தை மேற் கொண்டான். சங்கனின் தவத்தின் உள்நோக்கத்தை அறியாத இந்தி ரன் தனது பதவியை அடையவே சங்கன் தவமியற்றுகிறான் என்று அஞ்சி, நாரதரின் உதவியை நாடினான். அதற்கேற்ப, நாரதரும், சங்கனைச் சந்தித்து, எந்த பலனை விரும்பி இப்படி ஒரு கடுந்தவத்தை மேற்கொண் டாயென வினவினார். மூன்று மூர்த்திகளும் எனக்கு அடங்கியவர்களா கவே இருத்தல் வேண்டும் என்ற ஒரே பலனை கருதியே இத்தகைய கடுந் தவத்தை மேற் கொண்டேன் என்று சங்கன் கூறவும், அதை செவிமடுத்த நாரதர் கடுங்கோபம் கொண்டவராய் அவனை கடிந்து கொண்டார். அட ! அறிவற்றவனே, மற்றவரை அடக்கி ஆளவேண்டும் என்ற உனது துர்மதியின் வாசனை உன்னை விட்டு அகலவில்லையே ! அனைவருக்கும் மேம்பட்ட வனும், கமலக்கிழங்கை நாபியில் கொண்டு, திசைமுகனைத் தோற்றுவித் தவனும், ஈரேழுலகங்களுக்கும் அப்பன், என் அப்பனுக்கும் அப்பன். அப் பெரியப்பனின் இருப்பிடமான கலங்கா பெருநகரமான வீட்டை அடைய

நோக்கு வைக்காமல், இப்படி ஏதோ உடலை வருத்திக் கொண்டு எட்டாத கொம்பைப் பிடிக்க ஆசைப்படுகிறாயே, அதமனே, உன்மனதில் ஊறிப்போன பழைய வாசனைகள் அகல, தெற்கே உள்ள லவண சமுத்திரத்தில் நீ ஒரு சங்குப்பூச்சியாகப் பிறப்பாய், என்று சபித்தார்.

சங்கனும் தன் பிழை பொறுத்தருள வேண்டும் என்று வேண்டி நிற்க, நாரதர், நீ சங்குப்பூச்சியாகப் பிறந்திடினும் பொருநை ஆற்றின் சங்க மத்தின் வழியாக, குருகாபுரி என்ற தலத்தை அடைந்து, அங்கு கோவில் கொண்டுள்ள ஞானபிரானான ஆதிநாதனை ஆயிரம் ஆண்டுகள் தின மும் வலம் வந்து வணங்கி வழிபடுவாயாகில் உன் வினைகள் அற்று வீடு பெறுவாய். பகல் பொழுதை குருகாபுரி ஆலயத்திலும், இராப்பொழுதை உன் இருப்பிடமான உப்புக் கடலிலும் கழித்து வா, என்று ஆசி கூறி அருளினார்.

சங்கனின் காலம் முடிந்ததும், நாரதரின் சாபத்திற்கேற்ப அந்த சீவன் சங்குப்பூச்சியின் உடலை ஏற்று தெற்கு கடலை அடைந்தது.

நாரதரின் கட்டளைப்படி, அந்த சங்கு தினமும் ஆதிபுரியை அடைந்து, ஆதிநாதனை வலம் வந்து வணங்கி வழிபட்டு, ஆலயத்தின் திருச்சற்றிலுள்ள ஒரு வகுள மரத்தடியில் வாழும் ஒரு அரவத்தோடு தோழமை கொண்டு, பகல் பொழுதை நற்பொழுதாக்கி இரவு கடலை அடைந்து வாழ்ந்தது. இவ்விதமாக ஒரு தினங் கூட தவறாமல் ஆயிரம் ஆண்டுகளைக் கழித்தது !

ஆயிரம் ஆண்டுகள் கழிந்ததும் நாரணன், நிலமகள் ஆய்மகள் சமே தராக கருடப்புள்ளேறி, கார்வானில் மின்னலாகத் தோன்றி, அன்னப்புள் வாகனன் அயனும், தூயவெண்மதி சூடிய விடையேறும் அரன், தோடு டைய செவியனும், நான் மறை முனிவர்களும், விண்ணவர்களும் சூழ, சங்கனுக்கு "வீடு" என்ற பெறுதற்கரிய பேற்றை அளித்தாராம் ! இடை யறாது ஆயிரம் ஆண்டுகள் ஓர்மனத்தினாக வழிபட்டதால் சங்கன் வீடு பெற்றான். அவன் தொடர்பு கொண்டிருந்ததால், பொருநையின் தண்புனல் "சங்க தீர்த்தம்" என்றும், அவன் கரையேறிய துறை "சங்கணித்துறை" என்றும் இன்றும் வழங்குகிறது.

மேலும், ஏனத்துருவில் உலகை மீட்க முதலில் தோன்றிய தலமாத லால் "ஆதிபுரி" என்றும், ஞானபிரான் கோவில் கொண்டமையால் "வரா ஹஷேத்திரம்" என்றும், ஆதிசேஷன் உறங்கா புளியாக வாழ்ந்ததால் "சேஷக்ஷேத்திரம்" என்றும், சங்க தீர்த்த வளத்தால் "தீர்த்த ஷேத்திரம்" என்றும், அமரர்களுக்கு தாந்தன் கண்பார்வை வழங்கியதால் "தாந்த ஷேத்திரம்" என்றும் ஐந்து காரணப் பெயர்கள் கொண்ட பஞ்ச ஷேத்திர மாக விளங்கியது இன்றைய ஆழ்வார் திருநகரி.

கங்கைக்கும் யமுனைக்கும் இல்லாத ஒரு தனிச்சிறப்பு பொருநை ஆற்றுக்குண்டு என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் கூறுகிறார் !

திருவாய்மொழி விளக்க உரை ஆசிரியரான, வடக்கு திருவீதிப்பிள்ளையின்

இரண்டாவது குமாரர் அழகிய மணவாளப் பெருமாள்நாயனார் ஆவர். இவரது மூத்த சகோதரர் பிள்ளை லோகாச்சாரியார் என்ற பிரபல வைணவ ஆச்சார்யாராகும் ! அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் மாறன் சட கோபனைச் சிறப்பித்துப் பேசும் ஒரு நூலை வெளியிட்டுள்ளார். மாறனின் பிறந்த தலப் பெருமை அவரது உள்ளம், அவரது அருளிச்செயல்கள் ஆகி யவைகளைத் தொகுத்து தமிழில் சூத்திரங்களாக 234 சூர்ணிகைகள் வழங்கியுள்ளார். கலியுகத்தில் மாறன் சடகோபனே முதல் ஆச்சார்யார் என்றளவில் "ஆச்சார்ய இதயம் (ஹிருதயம்)" என்ற பெயரிடப்பட்ட விளக்க உரை எழுதி சிறப்பித்துள்ளார். அந்த நூலிலிருந்து திரட்டிய, சில பகுதி களை இப்பொழுது காண்போம்.

வேதவியாசர் பிறந்த தலத்தையும், கிருஷ்ணன் அவதரித்த தலத்தையும், மாறன் பிறந்த தலத்தோடு ஒப்பு நோக்கி, சிறப்பித்து பேசும் சூத்திரத்தைக் காண்போம்.

"வேத வியாசர் பிறந்த இடமோ, மீன் வெறி நாற்றம் கொண்டது. கிருஷ்ணனின் பிறப்பிடமோ வெண்ணெய் முடை நாற்றம் வீசுவது. பகவத் தொடர்பு கொண்ட திருத்துழாய் பரிமளம் கமழப் பெறும் இடமான, சட கோபன் பிறந்த இடத்திற்கு ஈடாகுமோ ? மற்ற இரண்டு இடங்களும், ஆகமாட்டாதே !" என்ற பொருள் கொண்ட சூர்ணிகை. 79.

*"மீன நவநீதங்கள் சந்திக்குமிடமும் வெறிகொள்*
*துழாய் கமழமிடமும் தன்னிலொக்குமோ ?"*

அடுத்து ஆற்றின் துறைகளை ஒப்பிட்டு பேசும் பகுதியை காண்போம்.

வேதவியாசர் பிறந்த இடம் கங்கைகரை புண்யநதிதான், இருப்பினும் மீன் கூடைகளை எடுத்துச் செல்லும் ஒடத்துறை. ஊரோ மீனவர்களின் வலைச்சேரி, கண்ணன் பிறந்த ஆற்றுத் துறையோ, தாமச குணங் கொண்ட யமுனைக்கரை துறையோ காளிங்கனின் விஷ தூளிபட்டது. ஊரோ அறிவொன்றுமில்லாத ஆயர்குலத்தவர் வசிப்பது. இவை இரண் டைக்காட்டிலும் சிறந்ததல்லவா? ஆழ்வாரின் பிறப்பிடம் !

மருவின் மணம் கமழும் தண்புனல் பொருநைக்கரை, சுத்த சுவ பாவமான சங்கன் பேறு பெற்ற சங்கணித்துறை. ஊரோ நல்லார் நவிலும் குருகூர். ஆக வியாச கிருஷ்ணர்களுடைய ஆறு, துறை ஊர் இவை களைக் காட்டிலும் மாறன் பிறந்த ஆற்றுத்துறை, ஊர் ஆகியவை வைஷம்ய பேச்சிற்கு நிலமல்ல, என்று பொருள்படும் சூர்ணிகை 80

*"ஆற்றில் துறையில் ஊரிலுள்ள வைஷம்யம்*
*வாசாம கோசரம்".*

அறிவிற் சிறந்த பகவத் தொடர்பு கொண்ட பாகவதர்கள் வாழும்

தலம் என்பதினால், குருகூர், "நல்லார் நவிலும் குருகூர்" என்று வழங் கப்பட்டு வந்தது. இதை உறுதிப்படுத்தும் ஒரு வரலாற்று சம்பவத்தையும் நோக்குவோம் !

தாமிரபரணி ஆற்றின் வடகரையில் கருவூர் சித்தர் என்று ஒருவர் வாழந்து வந்தார். அவர் வளர்த்த நாய், தினமும் ஆற்றைக் கடந்து, குரு கூர் சென்று அங்கு எச்சில் இலைகளில் உள்ள மீதத்தை உண்டு விட்டு பிறகு திரும்பும். ஒரு தினம், குருகூர் சென்ற நாய் உரிய நேரத்தில் திரும்பி வராததால் சித்தர் ஆற்றங்கரைக்குச் சென்று நோக்கினார். அச்சமயம் ஆற்றில் புதுப்புனல் பெருகி ஓடக் கண்டார். பெருகி ஓடும் ஆற்று வெள்ளத்தில், சித்தரின் நாய், தட்டுத் தடுமாறி நீந்தி வந்தபோது, களைப் பின் மிகுதியில் ஆற்றில் அமிழ்ந்தது. அப்பொழுது நாய் அமிழ்ந்த இடத் திலிருந்து, மின்னல் போல ஒரு சோதி, கணபபொழுதே தோன்றி, மேலெ ழுந்து மறைந்ததைக் கண்ட சித்தர் வியப்புற்றார். தினமும் பாகவதர் களான வைணவ அடியார்களின் எச்சில் இலைகளில் மீந்திருந்தவை களை உண்ட கேவலம் ஒரு நாய்க்கே, இப்படி ஒரு பலன் என்றால், அவர் களோடு தொடர்பு கொண்டு வாழும் குருகூர் வாசிகளுக்கும் எத்தகைய பலன் கிட்டக்கூடும், என்று சிந்தித்த சித்தர், மனம் மாறி, குருகூர் சென்று ஆதிநாதனிடம் சரணடைந்து வாழ்ந்தாராம் !

மாறனைச் சிறப்பித்து அந்தாதி பாடிய கவியரசர் கம்பர், இச்சம் பவத்தை கருத்தில் கொண்டே சடகோபரந்தாதியில், இதை உணர்த்தும் ஒரு செய்யுளை இணைத்திருப்பாரோ? அந்த செய்யுள்,

*"நாய் போற் பிறர்கடை தோறும் நுழைந்தவர் எச்சில்*
*பேய் போல் திரியும் பிறவியினேனைப் பிறவியெனும்*
*நோய்போம் மருந்தென்னும் நுன்திருவாய்மொழி நோக்குவித்துத்*
*தாய்போல் உதவி செய்தாய்க் கடியேன் பண்டெண் சாதித்ததே".*

சிறப்பு மிக்க நல்லார் நவிலும் குருகூரை மேலும் சிறப்பிக்க தோண்றிய புண்ணியன் மாறன் சடகோபனின் குடிவழியும் மிக சிறப்பு வாய்ந்தது என்பதனையும் நோக்குவோம் !

குறிப்பு :

ஆழ்வார் திருநகரி தீர்த்த வாரிமண்டபத்தின் தூண் ஒன்றில், நாய் ஆற்றைக் கடக்கும் சிற்பம் அமைந்துள்ளது என்று வகுளாபரண சடகோபர் என்ற நூல் கூறுகிறது.



## இயல் 4

# மாறனின் குடிவழி

மாறனின் குடிவழி மூதாதையர்கள் ஒற்றர்களாகச் செயலாற்றுவதில் மிகச் சிறந்து விளங்கியதால் அவர்களுள் "குருகனார்" என்பவரை நெல்லைப் பகுதிக்கு ஒரு சிற்றரசாக, மதுரையை ஆண்ட மன்னனால் நியமிக்கப்பட்டிருந்தார். ஆதிபுரியைத் தலைநகராகக் கொண்டு குருகனார் ஆட்சி புரிந்ததால், ஆதிபுரி, 'குருகாபுரி' என்று வழங்கப்பட்டது என்று முன் இயலில் அறிந்துள்ளோம். இவர்கள், அரசு புரிவதையே தொழிலாகக் கொண்ட ஷத்திரியர்கள் அல்ல, நான்காம் வர்ணத்தைச் சார்ந்த வேளாண் குடிமக்களாவர் !

குருகனாரின் கொள்ளுப் பேரரான (பேரனின் மகன்) திருவழுதிவள நாடன் காலத்திலிருந்துதான் நெல்லைச் சீமை மிகவும் மேம்பட்ட நிலையை அடைந்திருந்தது.

பொறுமையே உருவானவள் என்று சிறப்பித்துப் பேசப்படும் பூமிதேவி, தன்னுள் மறைந்துள்ள பொக்கிஷங்களான, பொன், வெள்ளி, தாம்பரம், இரும்பு, கல்லெண்ணை முதலியவைகளை, உலக மக்களின் நன்மைக்கும், உபயோகத்திற்கும் அளிப்பது போல, தன்னை வளப்படுத்தி, அதனால் நவதானியங்கள், காய், கனி, கிழங்கு ஆகிய உணவுப் பொருள்களையும், அளிக்கின்றாள். மனித இனத்திற்கு இன்றியமையாதனவைகளான உண வுப் பொருள்களைத் தங்களது அயராத உழைப்பால் பெற்று வழங்கி, தாங் களும் வாழ்ந்து, உலகத்தாரையும் வாழவைக்கும் வேளாண்குடி மக்களைப் "பூவைசியர்" என்று அழைப்பது பழைய தமிழ் மரபு. மறைவாக்கின்படி, எம் பெருமானின் பாதங்களிலிருந்து தோன்றியவர்களான அம்மக்கள் பகவா னின் திருவடி தொடர்பு கொண்ட குடிமக்கள் என்பதும் ஓர் சிறப்பு.

திருவழுதி வள நாடன் ஆட்சியில் நாட்டின் பல வளம் பெருகி, குடி மக்கள், மிகழ்ச்சியுடனும் அமைதியுடனும் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தார் கள். அயனிடமிருந்து வரம் பெற்றிருந்த "துந்துமாறன்" என்ற ஒரு கொடிய அசுரன், பொதிகை மலையைத் தனது இருப்பிடமாகக் கொண்டு, நாட்டின் அமைதியைக் குலைப்பதற்கேற்ப, பல அக்கிரமங்களை செய்து வந்தான் அவ்வப்போது நகர்பகுதிக்கு வந்து மக்களைத் துன்புறுத்தி கால் நடை களையெல்லாம் கடத்திச் சென்று விடுவான். மக்களின் முறையீட்டைச் கேட்டும், வயோதிகனான அரசனால், தந்திரங்களும் மாயச் செயல்களை யும் கொண்ட துந்துமாரனை வெல்ல இயலவில்லை. அரசிளங்குமரனும் அறியாப்பாலகன். மக்கள் குறை தீர்க்க இயலாத நிலையில், இறையருளை வேண்டி நின்றான் மன்னவன்.

அரசனின் குடி வழியில் தோன்றும் ஒருவனால், அசுரன் அழிக்கப் படுவான் என்று சில நிமித்தங்கள் மூலம் கூறிய தெய்வ வாக்கினால் அரசன் சற்றே ஆறுதல் பெற்றிடினும், உடனடியாக மக்களின் துயர்

துடைக்க இயலவில்லையே என்ற வருத்தமே அவனது முடிவிற்கு காரண மாயிற்று. அவனுக்குப் பிறகு அரசிளங்குமரரான "அறந்தாங்கியார்" (தர்ம தரன்) பட்டத்திற்கு வந்தான். பெயருக்கேற்ப சாத்வீகராகவே வளக்கப்பட்ட தால், அவராலும் மக்கள் குறை தீரவில்லை. ஆதி நாதனிடம் சரணடைந்து ஒரு மகனைப் பெற்றதால், அவனுக்கு "சக்ரபாணி" என்றே பெயர் சூட்டி வளர்த்து வந்தார். இளம் வயதிலேயே போர் பயிற்சிப் பெற்று, பெயருக் கேற்ப ஆயுதம் தாங்கி சக்தியும் திறமையும் கொண்டு வளர்ந்த "சக்ர பாணியார்" அரசு பதவியேற்றதும், துந்துமாரனோடு போர் தொடுத்து அவனை அழித்து, மக்கள் துயர் துடைத்து வெகுகாலம் ஆண்டார்.

இவருக்குப் பிறகு மூன்று தலைமுறைகள் கழிந்து, "போர்க்கழியார்" பட்டமேறினார். இவரைப் பொற்காரியார் என்றும் வழங்குவதுண்டு. இவர் தனது உடல் நிலை காரணமாக சில ஆண்டுகளே அரசு புரிந்து, தனது மகன் "காரி மாறனிடம்" அரசு பதவியை ஒப்புவித்து விட்டு, ஓய்வு கொண்டார். "காரிமாறன்" என்றும் காரியார் என்றும் அழைக்கப்பட்ட அரசனுக்கு மகனா கப் பிறந்தவர்தான் இவ்வரலாற்று நாயகனான மாறன் சடகோபன்!

## வழுதி வள நாட்டாரின் குடிவழி

குருகனார்

மகன்

பேரன்

கெள்ளுப் பேரன்

வழுதிவளநாடன்

அறந்தாங்கியார் (தர்மதரன்)

சக்கரபாணியார்

அச்சுதர்

செந்தாமரைக்கண்ணார்

செங்கணார்

போர்கழியார் (பொற்காரியார்)

காரிமாறன் – உடையநங்கை

மாறன் சடகோபன்

பொற்காரியார், தனது மகன் காரிமாறனிடம் அரசை ஒப்பு
முன், அவருக்கேற்ற ஒரு நற்குணவதியை மணம் செய்வித்து,
அரசை ஒப்புவிக்க எண்ணங் கொண்டார். அதற்கேற்ப செயல்ப
வங்கி, தங்கள் குலத்திற்கேற்ப ஒரு அருங்குண செல்வியைத் தேடி
இடங்களுக்கும் புரோகிதர்கள் அனுப்பப்பட்டார்கள்.

தனது குலத்தைச் சார்ந்தவரும் தனது தகுதிக்கு ஒத்த
குணம், ஒழுக்கம், பண்பு அன்பு ஆகியவற்றால் தன்னோடு ஒ
கொண்டவரும், திருக்குறுங்குடிக்கு தெற்கேயுள்ள "திருவண்பரிச
என்ற ஊரில் வாழ்ந்த "தர்ப்பாசனர்" என்ற பெருநிலக்கிழாரின் அருந்
செல்வியே, தனது மைந்தனுக்கேற்ற நல்லியல் செல்வி என்பதை
கிதர்கள் மூலம் அறிந்த பொற்காரியார், தனது விருப்பத்தைத் தர்ப
ருக்குத் தெரிவிக்கச் செய்தார். இச்செய்தி அறிந்ததும், பொற்காரிய
குடிவழியில், உறவு கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சி கொண்ட தர்ப்ப
ரும், தனது சம்மதத்தையும் தெரிவித்தார். நாளும் கோளும் சாத
அமைந்த ஒரு தினத்தில், பொற்காரியர் தன் உற்றார் உறவினர்கள்
பெண்பார்த்து, திருமணம் நிச்சயிக்கத் திருவண்பரிசாரத்திற்குப் பயண
டார். அரசர் குலத்தினர்களின் வரவை எதிர்நோக்கியிருந்த தர்ப்பா
ஊர் எல்லையிலேயே அவர்களை வரவேற்று, தனது மாளிகைக்கு அ
துச் சென்று, அரசு குலத்திற்கு தக்கப்படி உபசரித்து, நலன் விசா
இன்சொல் மொழிந்தார். பிறகு பொற்காரியர் அவரை நோக்கி, அ
தங்களது அன்பார்ந்த உபசரிப்பும், இன்மொழிகளும், என் உள்ள
பெரிதும் கவர்ந்தது. தங்கள் குடும்பத்தோடு திருமண உறவு
கொள்ளும் விருப்பத்தோடு வந்த எனது அருமை மகன் காரிமாற
தங்களது நற்குண செல்வியான "உடையநங்கையை" திருமணம்
கொள்ள எங்களது மனம் பெரிதும் விரும்புகிறது. எங்களது இல்ல
களின் விருப்பமும் அதுவே என்று கூறி தர்ப்பாசனரிடம் பெண் கே

அந்த நற்செய்தியை அறிந்ததும், திருவண்பரிசாரத்துறையும்,
வாழ்மார்பனை தியானித்து, திருவையொத்த, தனது செல்வி உ
நங்கைக்கேற்ற மணாளன், குருகூர் பொற்காரியாரின் இளவல், எழி
காரிமாறனே என்பதனை உணர்ந்த தர்பாசனரும், குடும்பத்தார்
ஒரு மனத்தினர்களாக தங்களது விருப்பத்தைத் தெரிவித்தா
அதைத் தொடர்ந்து திருமணம் நிச்சயிக்கப்பட்டது.

அவ்வாண்டு சித்திரைமாதத்து திருவோண நன்னாளில் புண
நதிகளின் தீர்த்தம் கொணர்ந்து, உடைய நங்கைக்கு மங்கல நீ
மணமகனும், மணமகளும் மந்திரக் கோடி உடுத்தி, மாலைகள் அ
அந்தணச்சிட்டர்கள் மந்திரங்கள் ஓத, மத்தளம் கொட்ட, வரிச
நின்றூத, முத்துப்பந்தலில் காரிமாறன் உடைய நங்கையின் கழு
மங்கல நாண் பூட்டி கைத்தலம் பற்றினார்.

திருமணம் முடிந்து, சில தினங்கள் கழிந்து திருமண தம்பதி, தங்கள் சுற்றம் சூழ, ஓங்கி உயர்ந்த செங்கரும்பு தடவயல் சூழ் திருவண் பரிசாரத்திலிருந்து புறப்பட்டு, எழிலார்ந்த சோலைகளும் தண்புனல் ஏரிகளும் சூழ்ந்த திருங்குறுங்குடி நம்பியை தண்டனிட்டு வணங்கி பின்னர் மதி தவழ் மாட மாளிகைகள் சூழ்ந்த குருகாபுரிக்கு திரும்பினர். நகரத்து வீதிகளில் பூரண பொற்குடம் வைத்து, புறமெங்கும் தோரணம் கட்டி, முர சடித்து வேதங்கள் ஓத, கீதங்கள் முழங்க, எல்லையற்ற மகிழ்ச்சியுடன் மக்கள், திருமண தம்பதியை வரவேற்றனர்.

சேல்விழி உடைய நங்கை, புகுந்த இடத்தில், நற்பெண்டிர்களுக்கே உரித் தான "தெய்வம் தொழாஅள் கொழு நன் தொழு தெழுவாள்" என்பதற்கிணங்க, கற்புடை நல்லாளாக, கணவனை முதல் தெய்வமாகப் போற்றி பணிவிடைகள் செய்து, பிறகு ஆலயம் சென்று, பொலிந்து நின்ற பிரானையும், தினமும் கண வரோடு வணங்கி வழிபட்டு, தனது வாழ்க்கையை தொடங்கினாள்.

காலச்சுழற்சியில் வசந்தமும் சுழன்று கொண்டேயிருந்தது. எனினும் உடைய நங்கையின் இல்லற வாழ்க்கையில் வசந்தம் மலரவேயில்லை. இல்லறத்தை நல்லறமாக நடத்தியும், இல்லக் கிழத்தியான உடைய நங்கைக்கு "மங்கலம் என்பது மனைமாட்சி, மற்று அதன் நன்கலம் நன்மக் கள் பேறு", என்பதற்கிணங்க தான் இன்னும் உண்டாகவில்லையே என்ற குறை மனதை வாட்டிப் பிழிந்தெடுத்தது. முத்தும், மணியும் செல்வமும், நாடும் நகரமும் அன்புடை கணவரும் பெற்றிடினும், மதலையார் இல்லாத வாழ்வும் ஒரு வாழ்வாகுமா ! ஐங்குறும்பு அடக்கி கோடி அறம் செய்து மக்களைப் பெற்று இல்லறம் முழுமை பெற்று உய்யாத வாழ்வும் ஒரு வாழ்வாகுமா, என்றெல்லாம் எண்ணி மக்கள் செல்வத்தைப் பெறுவதற்கு ஏங்கித் தவித்தது, உடைய நங்கையின் நல்லுள்ளம்.

செல்வமும் சீரும் மிக்க பொற்காரியாரின் குடிவழி, வாழையடி வாழை யாக பெருகி வளர்ந்து வரும் இயல்பு, தன்னால் பொய்த்து விடுமோ என்று குறைப்பட்டு அஞ்சி உள்ளம் பதைத்தாள் நங்கை, எனினும் தனது உள்ளக் குமுறல்களை எந்நிலையிலும் வெளிப்படுத்தியதில்லை. அகத்தின் சாயலை, முகத்தில் காட்டாமல், புன்னகை தவழும் முகத்தோடு, மாளிகையில், வளைய வளைய ஒடி செயல்படுவாள். ஒரு குறையும் இல்லாது மகிழ்வுடனே இருப் பதாக தன்னைக் காட்டிக் கொள்வாள். தினமும் கணவனோடு ஆலயம் சென்று ஞானபிரானை வணங்காது எந்தச் செயலையும் செய்யமாட்டாள்.

நங்கைக்கு திருமணம் முடிந்து பல ஆண்டுகள் சென்று விட்டன. அன்று சித்திரை மாதத்து திருவோண நன்னாள். காரியார் தன்னைக் கைபிடித்த தினம், வழக்கம் போல கணவருடன் ஆலயத்திற்கு சென்றிருந் தாள். ஆலயத்திலும் அன்று மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. மனத்தில் பல எண்ணங்கள் எழ தான் தாய்மை அடைய வேண்டுமென்ற எண்ணமே மேலோங்கி ஆதிபிரானை மனமுருகி வேண்டி தரிசித்து நின்றபொழுது, கணீரென்று ஒரு குரல் "நங்கையே குறுங்குடி ஏகினால் குழவி ஈவோம்"

என்று ஒலித்தது போல உணர்ந்தாள். முகத்தில் வியப்பும் ஆர்வமும் பொங்க, கணவனை அர்த்த புஷ்டியுடன் நோக்க அவரும் அக்குரலைக் கேட்டதாக புன்னகைத்து கூறினார். பிறகு தனது தோழியை விசாரிக்க அவள் ஒலி எதுவும் கேட்க வில்லை என்று கூறவும், ஆதிபிரானின் அரு ளாசியே அப்படி ஒலித்தது என்றறிந்ததும், மகிழ்ச்சி எல்லை கடந்தது. முகத்தில் களை கொஞ்ச முத்துப் பற்கள் தெரிய கடகடவென்று சிரித்து, தோழியைக் கட்டிக் கொண்டு மகிழ்ச்சிக் கடலில் மிதந்தாள். ஐயோ, பொது இடத்தில் இப்படி நடந்து கொள்கிறோமே என்ற வெட்கம் பிடுங்க விருட் டென்று காரியாரை அழைத்துக் கொண்டு சிவிகையில் ஏறி, மாளிகைக்குத் திரும்பினாள். மாளிகையை அடைந்ததும், ஆடிப்பாடிய வண்ணம் தனது மாமனார் பொற்காரியாரின் தாள் வணங்கி ஆதிபிரானின் மங்கல மொழி களை கூறி, திருங்குறுங்குடிக்கு அழைத்துச் செல்லுமாறு வேண்டினாள்.

வழுதி வள நாட்டின் குடிவழி, தன்னால் குறைபடாது என்ற எண்ணம், ஆதிபிரானின் அருளாசியால் உறுதிப்படவும். உவப்பால் பூரித்த உடைய நங்கை ஒரு சுற்று பெருத்தே காணப்பட்டாளாம் !



# இயல் 5

## திருக்குறுங்குடி

ஆதிபிரானின் அமுத வாக்கின் படி உடைய நங்கையையும், காரி மாறனையும், மங்கை மார்பனான நம்பி எழுந்தருளியிருக்கும் திருக்குறுங் குடிக்குச் சென்று அருள் பெற்று வருமாறு, பொற்காரியார் ஆசிகள் வழங்கி வழியனுப்பி வைத்தார். உடைய நங்கையின் தந்தை தர்பாசனரி டமும் ஆசி பெற்று, பிறகு திருக்குறுங்குடிக்கு செல்ல முடிவு கொண்டு நங்கையின் பிறந்தகமான திருவண்பரிசாரத்திற்கு சென்றார்கள். அங்கு கோவில் கொண்டு எழுந்தருளி அருள்பாலிக்கும் திருவாழ் மார்பனை வணங்கி துதித்து, பிறகு தந்தை தாயிடம் ஆசி பெற்று, மறுதினம் திருக் குறுங்குடிக்குப் புறப்பட்டார்கள்.

வழிநெடுக, சாலையின் இருமருங்கிலும், பச்சைப் பசேலென்று எழிலார்ந்த குளனார் கழனிகள், தென்னஞ்சோலைகள், மரகதப் பச்சைப் பயிர்கள், செழித்து வளர்ந்தோங்கிய வாழை, கரும்புக் கொல்லைகள், குன்றின் முல்லை, குறுமணி நீர் கொழிக்கும் புறவு முதலான ஊர் வளப்பங்கள், நங்கையின் கண்களுக்கு விருந்தாகவும் மனதிற்கு ரம்மியமாகவும் இருந் ததாம். சாலையின் ஓரத்தை ஒட்டி, வாய்க்கால் வழியோடும் நீர், கூழாங் கல் பரப்புகளின் மேல் ஓடும்போது, எழும் சலசல வென்ற ஓசைக்குத் தக்க வாறு, சிவிகையினுள் பட்டுக் குஞ்சங்களும் குதித்தாடுகின்றனவாம். நங்கையின் மனமும், மருண்டமான்கள் துள்ளுவதைப் போல, துள்ளித் துள்ளி பூரிக்கின்றதாம் ! அதன் பாதிப்பு நங்கையின் கண்களில் தோன்ற ஆதிபிரானின் அருளாசியை எண்ணி எண்ணி புன்னகைக்கிறாளாம் ! மல்லிகை மொக்கு போல வெளேரென்ற முத்துப்பல் வரிசை, அதரங்களின் கீற்றுக்கிடையில் தோன்றியும் தோன்றாமலும் இருக்கும் புன்னகை, மனத் தில் கிளு கிளுப்பையும், உள்ளத்தின் ஆர்வத்தையும் வெளிப்படுத்துவதாக இருந்ததாம்!

வழியில், ஆங்காங்கே தங்கி, இளைப்பாறி, சித்திரை மாதத்து பௌர்ணமியன்று திருக்குறுங்குடி அடைந்தனர்.

திருக்குறுங்குடி என்ற ஸ்ரீவைணவ கலம். நான்கு நேரியிலிருங்க எட்டுமைல் தொலைவிலுள்ள [illegible]
தொலைவில் சிறு குன்று ஒன்[illegible]
ஒட்டி ஓடுகிறது. இத்தலத்தில் [illegible]
கின்றார். "வைஷ்ணவநம்பி" என[illegible]
வல்லி". பாஷ்யக்காரரான இராமநுஜரிடம் ஒரு சீடன் பே[illegible] வேதாந்தங்கள் கேட்டபடியால், பெருமாளுக்கு "ஸ்ரீவைஷ்ணவ நம்பி" என்று திருநாமம். பரமசிவனுக்கு பிரத்யக்ஷம். ஊர் ஆலயத்தில் திருக்கு றுங்குடி நம்பியாகவும், குன்றின் ஆலயத்தில் "மலைமேல் நம்பியாகவும்",

ஆற்றங்கரையில் "திருப்பாற்கடல் நம்பியாகவும்", நின்றும் இருந்தும் சேவை சாதிப்பது விசேஷம். கைசிக ஏகாதசி, துவாதசி ஆகியவற்றின் சிறப்பிற்கு காரணமான "நம்பாடுவானுக்கு" தரிசனம் கொடுக்க, கொடி மரம், பலிபீடம், பெரிய திருவடியான புள்ளரசன் கருவறைக்கு நேராக அமைந்திருந்து சற்றே விலகியுள்ளது போல அமையப் பெற்றதாம். குறள் வடிவனான வாமனனது க்ஷேத்திரம் என்பதால் திருக்குறுங்குடி என்று பெயர். நம்பியே நங்கைக்கு மாறனாக பிறந்ததால் மாறனான ஸ்வாமி நம்மாழ்வாருக்கு இத்தலத்தில் தனி விக்ரஹம் கிடையாது. இவைகள் இத்தலத்தின் சிறப்பு அம்சங்களாகும்.

காரியும் நங்கையும் சுற்றம் சூழ திருப்பாற் கடலில் நீராடி, குன்ற மாடங்கள் சூழ்ந்த திருவீதி வலம் வந்து, கோபுரதரிசனம் செய்து, கொடி மரத்தடியில் தண்டனிட்டு வணங்கி உட் செல்லும்போது, புள்ளரசன் கூப்பிய கரங்களுடன், நடைக்கு நேராக இல்லாமல், தள்ளி இருக்கும் காரணத்தை அறிய விரும்பினாள் நங்கை.

அரசு குடும்பத்தாரை, உரிய மரியாதையோடு ஆலயத்திற்குள் அழைத்துச் சென்ற கோவில் பட்டர், நங்கையை நோக்கி, "தேவி, கைசிகப் பண்ணமைந்த பாடலாலே பிராம்மணவேள்விக் குறைமுடித்த, உத்தம பாகவதோத்தமனான நம்பாடுவானுக்கு சேவை சாதிக்க திருவுள்ளம் பற்றி பெரிய திருவடியை சற்று விலிகியிருக்கும்படி பெருமாள் நியமிக்க கருட னும் அவ்வாறே நகர, எம்பெருமான் நம்பாடுவானுக்கு அருள் புரிந்தாராம் என்று கூறினார் பட்டர். இதை செவிமடுத்த நங்கை, நம்பாடுவானின் வரலாற்றினையும் அறிய ஆவல் கொண்டாள் !

நம்பாடுவானனின் வரலாற்றினை நாமும் அறிந்து கொண்டு மேலே தொடர்வோம்.

திருக்குறுங்குடிக்கு சற்று தொலைவிலுள்ள ஒரு கிராமத்தில் தாழ்ந்த குலத்தில் பிறந்த ஒருவன், பகவத் பரமான பாடல்களை, கைத்தாளம் கொண்டு பாடுவதில் வல்லவனாக திகழ்ந்திருந்தான். அவனை "பாடு வான்" என்றே அனைவரும் அழைத்தார்கள். வைணவ நெறிகளையே பின்பற்றி வாழ்ந்த பாடுவான், பிழைப்பிற்கு வயலில் கூலி வேலை செய்து பகல் பொழுதைக் கழிப்பான். பிறகு மாலைப் போழ்தில் திருக்குறுங்குடி சென்று, ஆலயத்திற்கு எதிரில், தன்னை அனுமதித்த தொலைவில் நின்று கொண்டு பகவத் பரங்களான பாடல்களை பாடி நம்பியை மகிழ்வித்த பிறகே, வீடு திரும்பி உணவு கொள்வான். இவன் ஏகாதசி விரதத்தைக் கைக்கொண்டவன். ஒவ்வொரு ஏகாதசியும், அன்னபானமின்றி, வேலை செய்து விட்டு, மாலையில் திருக்குறுங்குடிக்குச் சென்று இரவு முழுவதும், நம்பி உகந்த பாடல்களைப் பாடி மகிழ்வித்து துவாதசி காலையில் ஊர் திரும்புவான். இவ்விதம் பல ஆண்டுகள் ஏகாதசி வ்ரதத்தைத் தவறாமல் கடைப்பிடித்து வந்த பாடுவானுக்கு, ஒரு தினம் சோதனை ஏற்பட்டது.

அன்று கார்த்திகை மாதம் வளர்பிறை ஏகாதசி முன்னிருட்டு காலம், இருட்டுவதற்குமுன் குறுங்குடியை அடைய நடையும் ஓட்டமுமாக சென்று கொண்டிருந்த போது கண்களுக்கு புலப்படாத ஒரு உருவம், பாடுவானை திடீரென்று கட்டிப்பிடித்துக் கொண்டது. உருவத்தைக் காணமுடியா விட்டாலும், அதன் குரலை கேட்க முடிந்தது. அந்தக் குரல், பாடுவானை அதட்டியபடி, நான் பல நாட்களாக ஆகாரம் ஏதுமின்றி பசியால் தவிக்கி றேன். யாரும் எனக்கு கிடைக்கவில்லை. இன்று நீ கிடைத்தாய், உன்னை உண்ணப்போகிறேன் என்று கொக்கரித்தது. சற்றும் எதிர்பாராத வகையில் அந்த உருவம் தன்னைக் கட்டிப்பிடித்ததும், திடுக்கிட்டவனாக, ஆனால் அச்சம் கொள்ளாமல், தனது நிலையை விளங்கக் கூறி, மறுநாள் வீடு திரும்பும் போது, தன்னை உண்டு பசியாறலாம் என்று கூறினான். அதற்கு அந்த உருவம் சம்மதிக்கவில்லை. பலபேர் இப்படி என்னிடம் சிக்கிக் கொண்டு ஏதோ காரணம் கூறி, தப்பித்துப் போய்விட்டார்கள். நீயும் அப்படி தப்பித்துப் போகவே ஏகாதசி என்று பொய்க் காரணம் கூறுகிறாய். ஆதலால் நான் உன்னை விடப் போவதில்லை என்று கூறியபடியே, நம் பாடுவானின் கழுத்தை நெறிக்க முயன்றது. இதனால், மனம் தளராமல், அநேக சத்தியங்களை அதாவது ஒவ்வொரு பாபத்தைச் சொல்லி, நான் திரும்பி வராதிருப்பின், அந்த பாபத்தைப் பெறுவேன் என்று பதினெட்டு வாக்குறுதிகளை அளித்தான். அவைகளுள் பதினெட்டாவது மிகக் கொடிய பாபமாக இருந்ததால், பாடுவானை நம்பி போக விட்டது அவ்வுருவம்.

(ஸ்ரீமந் நாராயணனை, இதர தேவதைகளுக்குச் சமமாக எண்ணு வதே, பதினெட்டாவதாக கூறிய மிகக் கொடிய பாபம்!)

விடுவிக்கப்பட்ட பாடுவான், அவ்வுருவத்தை மானசீகமாக வணங்கி, மறுதினம் நெடுநாள் பட்டினியால் வாடும் ஒருவனுக்கு தனது உடலை உணவாக வழங்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சியில், துரிதமாக ஆலயத்தை அடைந்து பாடத் துவங்கினான். அன்றிரவு முழுவதும் பாடிய பாடல்களுள் பல, “கைசிகம்” என்ற பண்ணில் அமைந்தவைகள்.

பொழுது புலர்ந்ததைக் கூட அறியாமல் பாடிக்கொண்டேயிருந்த பாடுவானுக்கு அந்த துவதாசி தினத்திலேயே அருள் புரிய திருவுள்ளம் கொண்டான், ஸ்ரீவைணவ நம்பி. பாடுவான் தன்னை நேராகக் காண் பதற்கு வசதியாக, கருடப்புள்ளையும் கொடி மரத்தையும் சற்றே விலகச் செய்து, “பாடுவானே ! இரவு முழுவதும் நீர் பாடிய பாடல்களாலும் குறிப் பாக கைசிகப் பண்ணில் அமைந்த பாடல்களால் நாம் மிகவும் உகந்து மகிழ்ந்தோம். “இன்னும் சிறிது காலம் நீர் வாழ்ந்து, அடுத்த பிறவியில் உயர் குடியில் பிறந்து, இதே கைசிகப் பண்ணினால் அமைந்த இசையால் எம்மை மகிழ்வித்து வீடு பெறுவீர்” “நம்மை உகந்து பாடியதால், இன்று முதல் நீர் “நம்பாடுவான்” என்றே விளங்குவீர்”, என்று அடியவர்களுக் கெளியனான எம்பெருமான் அருள் ஆசி வழங்கினார்.

விடிய, விடிய பாடிக் கொண்டிருந்த பாடுவானுக்கு, தேனினும் இனிய மதுரமான தெய்வீக குரலில் ஆசிகள் வழங்கியதை செவிமடுத்ததும் இந்த அற்பனுக்காக கருடப்புள் விலகியிருப்பதையும் அறிந்து முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாட, அடியார்களுக்கு எளியவனான பரந்தாமா, நாயினும் கடையேனாகிய எனக்கும் இத்தகைய கருணையா ? வணங்குதற்குரிய பெரிய திருவடிகளையும் இந்த அற்பனுக்காக, விலகச் சொல்லி அருளாசி வழங்க எனக்கு சமமாக தாழ இறங்கினாயே ? என்னே உனது நீர்மை, என்று கண்ணீர் மல்க, நாத்தழுதழுக்க, தரையில் வீழ்ந்து தண்டனிட்டான். பிறகு, ஆனந்தக் கூத்தனாக செவிப்புலன், கண்புலன் பெற்றதின் பயன், இன்று காணுதற்கரிய தரிசனத்தையும், செவி செல்வத்தையும் பெற்றேன் என்று உகந்து, அந்த உருவத்திற்கு வாக்களித்தபடி அவ்விடத்திற்கு விரைந்தான்.

பொழுது விடிந்து சில நாழிகைகள் கழிந்தும் பாடுவான் திரும்பி வராததால், இவனும் நம்மை ஏமாற்றிவிட்டான் என்று தன் விதியை நொந்து கொண்டிருந்த அதே கணத்தில், நம்பாடுவான் "ஐயா, எனது வாக்கை நான் காப்பாற்றி விட்டேன், இனி நீர் எனது உடலை உண்டு பசியாறலாம் என்று கூறி நின்றான்.

தன் எதிரில் நம்பாடுவான் நிற்பதைக் கண்ணுற்றதும், அகமகிழ்ந்து, "பாடுவானே, இந்த அற்பன் யார் என்று அறிந்து கொள்ளாமலேயே, எனக்கு வாக்களித்து, அதன்படி நடந்து கொண்ட உத்தமனே, உன்னை நான் புசிக்க விரும்பவில்லை. நான் இதே ஊரில் ஒரு அந்தணனாக வாழ்ந்தவன். ஒரு வேள்வியில் மந்திரங்களை உரிய வகையில் உச்சரிக்க இயலாத காரணத்தால், அவ்வேள்வியினால் நிறைவு பெறும் தேவதை என்னை இந்நிலைக்கு உட்படுத்தியது. மற்றவர்களுக்கு புலப்படாமல் கோர உருவத்தோடு வாழும்படியான நிலைக்கு ஆளானேன். எவராயினும் தான் கடைப்பிடித்த ஏகாதசி விரத பலன்களை தானமாக எனக்கு வழங்கினால், அதுவே எனது நிலைக்கு கழுவாயாகும். தாங்கள் தவறாது ஏகாதசி விரதம் கடைப்பிடிப்பதால், அவைகளின் பலன்களை எனக்கு தானமாக வழங்கி, என்னை இத்துன்பத்திலிருந்து விடுவிக்க வேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டது.

அதன் நிலைக்கு இரங்கிய நம்பாடுவான், ஐயா, அனைத்து ஏகாதசி பலன்களையும் என்னால் தானமாக தர இயலாது. எனினும் இன்றைய ஒரு ஏகாதசியின் பலனை மட்டும் தானமாக அளிக்கின்றேன் என்று கூறி, அருகில் உள்ள நீர் நிலையிலிருந்து தாமரை இலையில் நீரை முகந்து, தாரை வார்த்து, அன்றைய ஏகாதசி பலனை தானமாக வழங்கினான் ! கண் இமைக்கும் நேரத்தில் தன் எதிரே ஒரு அந்தணோத்தமர் நிற்பதைக் கண்டதும் இருவரது மகிழ்ச்சியும் கரைபுரண்டது.

நம்பியின் கருணைக்கு நம்பாடுவான் பாத்திரமான அன்றைய ஏகாதசி தினம், கைசிகப் பண்ணமைத்து பகவத்பரங்களாக பாடிய அன்றைய

ஏகாதசி தினம் அனைத்து ஏகாதசி பலன்களையும் தன்னுள் கொண்டது என்றறியும் போது, அந்த ஒரு தினமாவது நாமும் கடைப்பிடிக்க வேண்டும் என்று உணருகின்றோமல்லவா? அந்த ஏகாதசியே கார்த்திகை மாதத்து வளர்பிறை ஏகாதசியான "கைசிக" ஏகாதசியாகும். ஸ்ரீவைணவர்களுக்கு, மார்கழி மாத வளர்பிறை ஏகாதசியான வைகுண்ட ஏகாதசியைக் காட்டி லும், சிறப்பு வாயந்தது கைசிக ஏகாதசி. குருவாயூரப்பன் ஆலயத்தில் கைசிக ஏகதசியையே வைகுண்ட ஏகாதசியாக கடைப்பிடிக்கப்படுகிறது என்று கூறுவர்.

திருவரங்கத்தில் கைசிக ஏகாதசி மிக சிறப்பாக நடைபெறும் ஒரு அரிய சேவையாகும். ராஜமகேந்திரன் திருச்சுற்றிலுள்ள அர்ச்சுன மண்ட பத்தில் அழகிய மணவாளப் பெருமான் ஏகாதசியன்று முன் இரவுலேயே எழுந்தருளி சேவை சாதிப்பார். அப்பொழுது கூரத்தாழ்வானின் திருக் குமாரராகிய ஸ்ரீபராசரபட்டர் குடி வழி வந்த பட்டர் ஒருவர் கைசிக பண்ணில் புராணம் படித்து அரங்கனை மகிழ்விப்பார். பிறகு கோவில் அரையர்கள் "அக்கும்புலியின்" (பெரிய திருமொழி 9-6-1), மற்றும் "எங்ஙனேயோ" (திருவாய்மொழி 5-5-1) ஆகிய பிரபந்த பாசுரங்களுக்கு, அபிநயம் பிடித்து வியாக்யானம் செய்வது ஒரு அரிய நிகழ்ச்சியாகும். (திருவரங் கத்தில் அரையர் சேவை ஒரு அற்புத நிகழ்ச்சி. இதன் விரிவு இயல் 23 ல் காண்க) கைசிக புராணம் படிக்கும் போதும், அரையர் சேவை நிகழும் போதும், இடை இடையே பெருமாளுக்கு நீராஜனம் (கற்பூர ஆரத்தி) சமர் ப்பித்து, விலையுயர்ந்த போர்வை சாற்றுவார்கள். அப்பொழுது பச்சை கற்பூர சிறு உருண்டை ஒன்று பெருமாள் திருவடிகளில் சமர்க்கிப்பப் படும். அரையருக்கு ஒரு வேலயன் (இரண்டு வெற்றிலையும் ஒரு பாக்கும்) வழங்கப்படும். இவ்வகையில், அன்றிரவு (300)முன்னூறு போர்வைகளுக்கு மேல் சாற்றி படியேற்ற சேவை கண்டு, சர்ப்பகதியில் கருவறைக்கு எழுந் தருள்வது ஒரு காணக் கிடைக்காத அரிய சேவையாகும்.

(படியேற்றம் என்பது, சுசும்னா நாடி வழியே சீவன் செல்லும் தத்து வத்தைக் குறிப்பதாகும். பச்சை கற்பூர உருண்டைகளையும், புஷ்ப இதழ் களையும் மேலே தூவியபடி தெளிக்க, பெருமாளை எழுந்தருளப்பண்ணும் ஸ்ரீபாதம் தாங்கிகள் தோளுக்கு இனியனை தோளிலிருந்து ஒரு அடி உய ரத் தூக்கி காட்டுவர். இது பரமபதம் அடைவதைக் குறிக்கும்.)

நம்பாடுவானின் வரலாற்றை செவியுற்றதும், உடைய நங்கைக்கு ஒரு புத்துணர்வு தோன்றி உடல் புல்லரித்தது. நம்பியை தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் துடிதுடிப்பு அதிகரிக்க, சன்னதிக்குள் அழைத்துச் செல்லப் பட்டார்கள். சங்கு சக்கரம் ஏந்திய கரங்களோடும் பொன்முடியோடும். மார்பினில் திருமருவோடும், தண்ணந்துழாய் மாலை தழுவ திருமடந்தை, மண்மடந்தை ஆகிய உபய நாச்சிமார்களோடும், தனது வடிவழகெல்லாம் வடித்துக் காட்டி, நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும், தாமரைக்

கண்ணனான நம்பியை, உடைய நங்கையும், காரியாரும் கண் இமையாமல் மெய்சிலிர்க்க தரிசித்து நின்றனர்.

"நீல மேக வண்ணனே, திருமகள் உறை மார்பனே, ஆழ்கடல் கடைந்தவனே, ஞாலம் உண்டுமிழ்ந்தவனே, உலகளந்தவனே, ஞான பிரானே, சரண்யனே, உனது திருவடி நிலைகளே உலகாளும் தகுதிக்கு உயர்த்திய கோதண்டனே, ஏழு தலைமுறைகளாக உனக்கே தொண்டு செய்து வாழும் அடியோங்களுக்கு, மக்கள் பேறு இல்லையென்றால், ஊழ்வினைகள் தான் காரணமா? அல்லது உனது அருளும் பொய்யா குமோ? உனது அடியார்களுக்கு, நல்வாழ்வினையே நல்கும் உன் அருள் எங்கள் குறையைத் தீர்க்க முடியாதா? என்று உள்ளம் கரைய மனமுறுகி வேண்டி திருவடி தண்டனிட்டனர்.

அடியார்களுக்கு எளியவனும், தம்மை நாளும் வணங்கி தொழு வார்க்கு, தம்மையே ஒக்க அருள்பாலிப்பவனும், வல்வினைகள் தீர்க்கும் திருமகள் வாழ்மார்பனும், மெய்யனுமான திருக்குறுங்குடி ஸ்ரீவைஷ்ணவ நம்பி, தனது பவளவாய் திறந்து, "நீதி மைந்தன் நாம் உமக்கு, பேதலியாது நீர் ஏகுவீர்" என்று திருவாய் மலர்ந்தருளினாராம் !

இங்கு ஒன்றை நாம் கவனிக்க வேண்டும். ஒருவர் மனத்தில் தோன்றும் எண்ண உணர்வின் அலைகள், எந்த சீரில் செயல்படுகின் றதோ, அதே சீரில் செயல்படும் உணர்வு அலைகளை கொண்டவரது மனத்தோடு தொடர்பு கொள்ள இயலும் என்பது விஞ்ஞானம். (TELEPATHY) உடைய நங்கையின் மன உணர்வு அலைகளை ஈர்த்த பகவானின் திருவுள்ளம் அவைகளுக்கேற்ப நிவர்த்தி அளிப்பது என்பது காலங்காலமாக மெய்ஞானம் கண்ட உண்மை என்பதை புரிந்து கொண்டால், திருக்குறுங்குடி நம்பியின் அருள் வாக்கினையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

"நீதி மைந்தன் நானுமக்கு" என்ற ஒலியை செவிமடுத்த உடைய நங்கையும் காரியாரும், நாரணன் நம்பியே மகனாகப் பெறப் பெற்றோமே என்று மட்டில்லா மகிழ்ச்சி கொண்டு, ஆனந்தக் கண்ணீர் மல்க, வெண்ணாழி துயிலும் மாலவன் அருள் புரிந்தான் என்று வாயாரப் புகழ்ந்து மனநிறைவுப் பெற்று, குருகாபுரிக்குப் பயணப்பட்டார்கள்.

திருமங்கை ஆழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்படாத வைணவ தலம் பாரதத்தில் ஒன்று கூட இல்லையோ என்று சொல்லும் படியாக பல திவ்ய தேசங்களையும் மங்களா சாசனம் செய்துள்ளவர். இமயத்தின் முடியான 'பத்ரி' என்ற பத்ரிகாச்ரமத்திலிருந்து தொடங்கி பாதயாத்திரை யாகவே குமரிவரை சென்று மங்களா சாசனம் செய்தவர். திருக்குறுங் குடிக்கு, நம்பியை மங்களாசாசனம் செய்ய விழைந்த பொழுது, நாட்டின் வளப்பத்தைப்பற்றி பேசுகிறார்.

முல்லைக்கொடிகள் படர்வதற்கு கொழுகொம்பு வளர்ப்பது மிக அவசியம். குறிஞ்சி நாட்டை ஆண்ட ஒரு சிற்றரசர் பாரி என்பார். ஒரு சமயம், முல்லைக்கொடி படர்வதற்கு ஆதரவு இல்லாது, தரையில் கிடந்து வாடி வதங்குவதைக் கண்டு மனங்கலங்கி, தனது தேரையே கொழுகொம் பாக்கி கேவலம், ஒரு மலர் கொடிக்கும் தனது அனுதாபத்தை தெரிவித்து, 'வள்ளல்' என்ற சிறப்புப் பெயரை பெற்றாராம். ஆனால் திருக்குறுங்குடி பூமிவளம், முல்லைக்கொடி வளரும் போதெல்லாம், அதற்கு ஆதரவாக ஒரு கொழு கொம்பையும் வளர்க்கும் வளம் பெற்றிருந்ததாம், என்று திரு மங்கை ஆழவார் தனது பெரிய திருமொழியில், "இளமுல்லை புல்கு குறுங் குடிக்கே" யென்னையுய்திடுமின்", (9.5.6)என்று கூறுகிறார். "இளமுல்லை புல்கு" என்ற அடைமொழி குறுங்குடிக்கு இட்டதற்கு காரணம், ஆதார மின்றி தரையில் கிடக்க வேண்டிய அவசியமில்லாமல், ஆங்காங்கே கொழுக் கொம்புகளும் படரும் வளம் கொண்ட நாடாம் திருக்குறுங்குடி என்பதை எடுத்துக் காட்டுவதற்காம்! இவ்வகையில் வளங்கொண்ட குறுங் குடிக்கு தன்னை அழைத்துச் செல்லுமாறு தனது மனதிற்கே வேண்டு கோள் விடுத்தாராம்.

*"கோல் தெடி யோடுங்கொழுந்ததே போன்றதே,*
*மால் தேடி ஓடும் மனம்"*

என்பதைப் போன்ற உள்ளம் கொண்ட திருமங்கை ஆழ்வார், திருக் குறுங்குடியிலிருந்தே திருநாடு அலங்கரிக்க எழுத்தருளினார் என்பதும் திருங்குறுங்குடிக்கு ஒரு மேன்மையான சிறப்பு அல்லவா ?



## இயல் 6

# உடைய நங்கை உண்டானாள்

இமயத்தில் பார்வதி பரமேசுவரர் தெய்வீக திருமணத்தைக் காண் பதற்கு, அனைத்துலகத்தார்களும் கூடியதால் வடபகுதி தாழ்ந்து தென் பகுதி உயர்ந்தது. அதை சமன் செய்ய அகத்திய முனிவரை தென்னாடு செல்லுமாறு அரன் ஆணையிட்டான். அகத்தியருக்கும் அவரது மனைவி லோபா முத்திரைக்கும், தென்னாட்டிற்குச் சென்று "திரமிடம்" என்ற ஒரு புதிய மொழியை வெளிப்படுத்த வேண்டும் என்பது வெகு நாளைய அவா. இருப்பினும் தெய்வீகத் திருமணத்தைக் கண்டு களித்த பிறகே செல்வ தாக திட்டமிட்டிருந்தார்கள். ஆனால், பரமசிவனின் ஆணையை அறிந்த பின்னும் செல்லாதிருப்பது நேர்மையல்ல என்று துணிந்து, தென்னாட்டிற் குப் புறப்பட்டார்கள். அவர்கள், தென்னாட்டில் கால் வைத்த கணத்தி லேயே, பாரதத்தின் பூமி சமன் அடைந்தது. அதன் பிறகு இருவரும் தென்னாட்டிலேயே தங்கி, புதிய மொழியை உருவாக்கும் தங்களது விருப் பத்தைச் செயல்படுத்த திட்டமிட்டனர்.

பாரதத்தின் தென் பகுதியிலுள்ள நாடுகளில், மிகச்சிறப்பு வாய்ந்த நாடு தமிழ் நாடு. அதில் தென்பாண்டி நாடான வழுதிவள நாடு மிக பெருமை வாய்ந்ததாகும். அப்படி ஒரு பெருமையைத் தேடி தருவது நாட்டின் எல்லைக்குட்பட்ட மலையடுக்கங்களுள் ஒன்றான பொதிகை மலைத் தொடரின், திருக்குற்றால மலைப்பகுதியாகும். நீர்வளம், நிலவளம், வனவளம் செழிப்புற்று விளங்கும் பொதிகை மலையினின்று பெருகிப் பாயும் தீஞ்சுவைப் புனல் பொருநை, மருத்துவ மூலிகைகளின் சாரத்தை யும், தவணத்தின் மணத்தையும் கொண்டு, நெல்லை சீமையில் பாய்ந்து ஓடுகிறாள். பலவகை காய், கனி வளம், நறுமண மலர்கள் மீது தவழ்ந்து வீசும் தென்றலும், உடல் நலத்தையும், உள நலத்தையும், பேணிக்காக்கும் இயல்பினை கொண்டிருந்தமையால், தங்குவதற்கோர் உரிய இடமாக அமையப் பெற்றிருந்தது. கண்களுக்கினிய இயற்கை எழிலும், மனோரம் யமான சுற்றுப் புறச் சூழலும் பெற்று, அமைதி தவழும் பொதிகை மலையை, லோபா முத்திரையும், அகத்திய மாமுனிவரும் தங்களது இருப் பிடமாகக் கொண்டதில் வியப்பில்லை !

தேவ மொழி என்ற பெருமைக்குரிய சமஸ்கிருத மொழி, காலங்கால மாக கிரந்த எழுத்துக்களை கொண்டதாகவே விளங்கியது. பிற்காலத்தில் தான், கிரந்த எழுத்துக்களுக்குப் பதிலாக தேவநாகரி எழுத்துக்கள் பயன் படுத்தப்பட்டு இன்று வழக்கில் உள்ளது. அகத்தியர் வெளிப்படுத்த விருப்பங்கொண்டிருந்த புதிய மொழியான "திரமிடம்" கிரந்த எழுத்துக் களின் அடிப்படையிலேயே தோன்றியதாக ஆன்றோர் பணிப்பர்.

கிரந்த எழுத்துக்களின் பின்னணியில்தான், அகத்தியர் "திரமிடம்" என்ற மொழியைத் தோற்றுவித்தார். ஆனால் க, ச, ட, த, ப என்று ஒவ் வொன்றிற்கும், வட மொழியைப் போல நான்கு தனி எழுத்துக்கள் அமைக் காமல் பொருளுக்கேற்ப, ஒலி பேதங்களை உருவாக்கி அமைத்தார். ஆத லால், திரமிடத்தில் நான்கு தனி எழுத்துக்கள் இல்லையாயினும் தனித் தனி ஒலி உண்டு. திரமிட மொழியே பிற்காலத்தில் "தமிழ்" என்றாயிற்று.

"ன்" என்ற எழுத்தை ஈறாகக் கொண்ட பதினெட்டு மெய் எழுத்துக் களையும், "ஔ" என்ற எழுத்தை ஈறாக கொண்ட "அ" எழுத்தை தவிர்த்த பதினொன்று உயிர் எழுத்துக்களையும், உயிருக்கும் உயிரான "அ" என்ற எழுத்தை தொடக்கத்திலமர்த்தி மொழியை வளர்த்தார் அகத்தியர்.

எழுத்து அழியாத் தன்மை கொண்டதால், அக்ஷரம் (அழியாதது) எனப்படுகிறது. 'அ' என்ற உயிருக்கு உயிரான எழுத்து, மற்ற எழுத்துக்கள் தோன்றுவதற்கு மூலகாரணமாக அமைந்துள்ள எழுத்தாகும். எப்படி யெனில் வட மொழி இலக்கணப்படி "அகாரம்" காத்தல் என்ற பொருள் கொண்ட "அவ்" என்ற வினைவேர் சொல்லிலிருந்து தேறுவதால் உலகை காப்பாற்றும் இயல்பினனான ஸ்ரீமந் நாராயணனைக் குறிப்பிடும். ஆக உல கம் தோன்றுவதற்கும், அதனைக் காப்பதற்கும் காரணனான பகவான் ஸ்ரீமந் நாராயணன் என்பதைப் போலவே, 'அ' என்ற எழுத்தும் இதர எழுத் துக்களின் உற்பத்திக்கும் ஒலிப்பதற்கும் ஆகின்றமையால், அது பகவா னைக் குறிப்பிடும் உயிருக்கு உயிரான மூல எழுத்தாக அமைப்பெற்றது!

உடலான சடப் பொருளைத் தாங்கி நிற்பதும், இயக்குவதும் உயிர் பொருள். அது போலவே மெய் எழுத்துக்களான சட எழுத்துக்களை தாங்கி நிற்பதும், இயக்குவதும் உயிர் எழுத்துக்கள். இவ்வெழுத்துக்கள னைத்திற்கும் மூலமான அதாவது உயிருக்கும், உயிரான எழுத்து 'அ' என்ற இறை எழுத்தாகும். சொற்கள் ஒலிப்பதற்கு உயிரெழுத்து மெய் யெழுத்தோடு கலப்பு, இன்றியமையாததால், உணர்வற்ற மெய்யெழுத்து உடலெழுத்து எனவும், உணர்வுள்ள எழுத்து உயிரெழுத்து எனவும், எழுத் துக்கள் தோன்ற காரணமான மூல எழுத்து இறை எழுத்து எனவும் வகைப் படுத்தி, அகத்திய மாமுனியான வண்டமிழ் மாமுனி மொழி வளர்த்தார்.

எவற்றின் தோன்றுதலும், நிலைபெறுதலும், ஒடுங்கலும், எதனிட மிருந்தோ, அது அவைகளின் "பிரகாரி", அவைகள் அதன் "பிரகாரம்". இவ்வகையில் பகவான் பிரகாரி, உலகியல் உயிர்களும், பொருள்களும் பிர காரங்கள். இந்த விதி எழுத்துக்களுக்கும் பொருந்தும். "அகாரம்" இரண்டு வகை எழுத்துக்களுக்கும் பிரகாரி. ஆதலால் அது இறை உணர்த்தும் இறை எழுத்து இதர மெய்யும் உயிருமான எழுத்துக்கள் பிரகாரங்கள்.

இவ்வகையில், வடமொழிக்கு ஒருவகையில் ஒப்ப, தேனினும் மதுர தமிழ்மொழியை, இறை எழுத்தான 'அ' என்ற எழுத்தை முன் வைத்து, உருவாக்கி இயல் இசை நாடகம் என்று மூன்று பகுதிகளாக "முத்தமிழ்"

என்ற பெயரில் வெளியிட்டார். தொல்காப்பியர் என்ற பெருமகனார், அகத்தியரிடம் சீடராக அமர்ந்து தமிழ் மொழிக்கு (திரவிட மொழிக்கு) இலக்கிய இலக்கணங்கள் வகுத்து மேம்படுத்தினார். இவ்வாறு வளர்க்கப்பட்ட தமிழ் தென்பாண்டி நாட்டில் வளம் பெற்று, வடவேங்கடம் வரை செழிப்புற்று வளர்ந்தது.

இவ்வரலாற்றின் முதல் இயலில் கூறியபடி, மறைகூறும் அறம், பொருள், இன்பம் என்ற உறுதிப்பொருள்களான (புருஷார்த்தங்கள்) முப்பால் அறத்தை மட்டும் உணர்த்த வல்லதாக அமைந்திருந்தது, வண்டமிழ் மாமுனி வளர்த்த தமிழ். ஆனால், மறையின் இறுதிபாகமான மறைமுடி (உபநிடதம்) கூறும் உறுதிப்பொருள்களின் நான்காவதான (பரமபுருஷார்த்தமான) "வீட்டுப்பால்" (மோக்கம்) என்ற அறத்தை பெறுவதற்கு இயலாது அமைந்திருந்தது ! இதற்கும் வழிகாண அகத்திய மாமுனிவர் திருமாலை வேண்டி தவத்தை மேற்கொண்டார் !

இங்கே, நாம் ஒன்றை புரிந்து கொள்ளுதல் அவசியம். இறை எழுத்தான அகாரத்தை தொடக்கமாகக் கொண்டே, திருவள்ளுவ பெருந்தகை பொது மறை என்று கூறப்படும். திருக்குறளை "அகரமுதலெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என்று முப்பால் அறமான அறம்பொருள் இன்பம் என்பவகைகளுக்கு தொடக்கமாக வழங்கினார். பொது மறை என்றால் மக்கள் அனைவருக்கும் பொது என்பதில்லை. ஏனெனில், கயவன், கள்வன், அதமன், முதலான தீயோர்களுக்கு இது ஏற்புடையதல்ல. முப்பால் அறத்தைச் சார்ந்து வாழும் மக்களனைவர்களுக்கும் பொது என்பதே தேர்ந்த பொருள். எனினும், முப்பால் அறத்தை சார்ந்து வாழும் மக்கள் அனைவருக்கும் நான்காவதான "வீடு" என்ற பால் உரித்தானதல்ல. சிலருக்கு மட்டுமே அதில் உரிமை உண்டு. அதனைக் கூறும் இயல்பினையும் தமிழ் மொழி பெற்றிருக்க வேண்டும் என்பதற்காகவே அகத்தியர் தவத்தை மேற்கொண்டார்.

அகத்தியருக்கு அருளாசி வழங்க திருவுள்ளம் கொண்ட எம்பெருமான், அவர் முன் தோன்றி "கடலுண்ட முனிவரே, எந்த பலனைக் கோரி இத்தவத்தை மேற்கொண்டீர்", என்று வினவினார்.

தனக்கு எதிரில் மாலவனைக் கண்டதும் அகத்தியர் தண்டனிட்டு வணங்கி, "அடியார்களின் வேண்டுகோள்களுக்கு அபயம் அளிக்கும் பங்கயற்கண்ணா, என்னால் உருவாக்கப்பட்ட திரமிடமான தமிழ் மொழிக்கு "முக்தி சோதி" வழங்க வேண்டும் என்று வேண்டினார். நாரணனும், முனிவரே, பொருநை ஆற்றங்கரையிலுள்ள குருகாபுரியில் யாம் "மாறனாக" அவதரித்து பாரெங்கிலும் மேன்மையுடன் விளங்க மறை பொருள் தமிழ் செய்வோம்", "இதனால் தமிழ் மொழியும் மறைமுடி (உபநிடதம்) பொருளை தன்னுள் கொண்டதாக அமைந்து சிறப்புப் பெறும்", என்று வாழ்த்தி அகத்தியரின் கோரிக்கையை நிறைவேற்றினார்.

காலச் சக்கரம் சுழன்றது.

அகத்தியருக்கு தாம் அளித்த வாக்கை செயல்படுத்த திருவுள்ளம் கொண்டார் பரமன்.

*"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்*
*நின்றால் மரவடியாம் நீள்கடலுள் என்றும்*
*புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும்*
*அணையாம் திருமாற்தரவு",*

என்று ஆதி சேஷனான அனந்தனின் தொண்டினின் சிறப்பை மேம்படுத்தி அருளிச் செய்த பொய்கையாழ்வாரின் பாசுரத்திற்கிணங்க, சர்வசேஷீயான எம்பெருமானுக்கு ஓயாது ஒழியாது தொண்டாற்றுதலே தனது கடமையாகக் கொண்டு செயல்படும் அனந்தனை அழைத்து எம் பெருமான் கூறினார்.

"அனந்தனே, த்ரேதா யுகத்தில், நீ தன்னிச்சையாக ஒரு அசையாப் பொருளாக மாறிய பொழுது, உனக்கு நானிட்ட சாபத்தை, நீ அறிவா யல்லவா ? அதை அனுபவிப்பதற்கேற்ற தருணம் வாய்த்துள்ளது. பூலோ கத்தில் தென்னாட்டில், பொருநை ஆற்றங்கரையில் அமைந்துள்ள குரு காபுரி ஆலயத்திற்குள், நீ ஒரு புளிய மரமாக வளர்ந்து, எனது வரவிற் காக காத்திரு", என்று ஆணையிட்டார்.

சர்வசேஷீயான ஸ்ரீமந் நாரயணனுக்கு சேஷமாகவே செயல்படும் அனந்தனும், தன்னிச்சையாகச் செயல்பட்டான் என்றால், பொய்கையாரின் கூற்றும், பொய்க்குமோ என்று ஐயம் உண்டாகிறதல்லவா? அதன் பின்ன ணியை நோக்குவோம்.

ஸ்ரீ வைணவத்தின் தலையாய கொள்கையும், எந்த இனத்தவர்களும் பேதமின்றி அனைவரும் பின்பற்ற தகுதி கொண்ட சரணாகதி தத்து வத்தை மிக விரிவாக போதிக்கும் ஆதிகாவியம் ஸ்ரீமத் இராமாயண மாகும். பரத்வத்தில் ஸ்ரீமந் நாராயணனே, உலகில் மனித உருவில் ஸ்ரீ இராமனாக அவதரித்து, அரசை அறநெறி வழுவாது பரிபாலித்து, மக்கள் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு இலக்கணமாகத் தானே வாழ்ந்து காட்டிய புருஷோத்தமன், தன் தம்பி இலக்ஷ்மணனுக்கே மரணதண்டனை அளிக்கும் ஒரு கட்டாயத்திற்கு உட்படுத்தப்பட்ட ஒரு நிகழ்ச்சியைக் காண்போம் !

பரத குமாரர்களான தக்ஷசீலன் புஷ்கலன் ஆகியோர்களுக்கும் லக்ஷமண குமாரர்களான அங்கதன், சந்திரகேது ஆகியோர்களுக்கும் முறையே காந்தாரம், சாருபதம் ஆகிய தேசங்களுக்கு அரசராகவும் இள வரசராகவும் முடிசூட்டிய பின் இராமர் லக்ஷமணர் இருவரும் அயோத் திக்கு திரும்பியிருந்தார்கள். அப்பொழுது, காலபைரவன், தன்னை அடை யாளம் காட்டிக் கொள்ளாமல், முனிவேடம் பூண்டு, இராமனிடம் ஒரு

முக்கிய செய்தியை வெளியிட்டு பேச வேண்டும் என்பதற்காக, தனது வரவை அறிவித்து, இராமனிடம் அனுமதி பெற்று வர லக்ஷமணனைக் கேட்டுக் கொண்டான். அவ்வாறே அனுமதி பெற்று முனிவேடத்திலிருந்த காலனை இராமனிடம் அழைத்துச் சென்றான். வந்தவரை தக்கவகையில் உபசரித்து, நலன் விசாரித்து, அவரது வருகைக்கு காரணம் வினவினார். முனிவரும் தான் கூறப் போகும் செய்தி, பரம ரகஸ்யமாக இருக்க வேண்டுமென்றும், அதை இராமனைத் தவிர மற்றவர் எவரும் அறியக் கூடாதென்றும், எதேச்சையாக யாரேனும் அறிய நேரிட்டாலும், அப்படி அறிந்தவர்க்கு மரணதண்டனை வழங்க வேண்டுமென்றும், ஒரு உறுதியை இராமனிடம் பெற்றுக் கொண்டு, தனது பேச்சை தொடங்கவிருந்தார். அதை ஆமோதித்த இராமர், லக்ஷமணனை வெளியேற்றி ஒரு முகூர்த்த காலம், யாரையும் உள்ளே அனுமதிக்காதிருக்கும்படி கட்டளையிட்டார்.

முனிவேடதாரி இராமனை நோக்கி, “ஸ்வாமி, அடியேன் காலன். பூவு லகில் தங்களது காலம் முடிந்து, ஸ்ரீ வைகுண்டத்திற்கு எழுந்தருளும் தரு ணம் நெருங்கி வந்து விட்டதை, தங்களிடம் தெரிவிக்க, பிரமதேவன் என்னை அனுப்பியுள்ளார். அதற்கேற்ப, தங்களது உத்தேசத்தை அறிந்து, செயல்படும்படி கூறியுள்ளார் என்று பேசிக் கொண்டிருக்கும் போது, துர்வாச மஹரிஷீயின் வரவை தெரிவிக்க லக்ஷமணன் உள்ளே வந்தார்.

காலன் திரும்பியதும், துர்வாசரை அழைத்து உபசரித்து அவரது கோரிக்கையை நிறைவேற்றிய பிறகு, அசந்தர்ப்பமாக உள்ளே வந்ததிற்கு லக்ஷமணனை கடிந்து கொண்டார் இராமன்.

லக்ஷமணன், அவ்விதம் நடந்து கொண்டது இன்றியமையாததாக போய்விட்டதென்றும், துர்வாசரை உடனே உள்ள அனுமதிக்காவிடில், ரகு குலத்தையே நாசம் செய்து விடுவேன் என்று கோபாவேசமாக கர்ஜித்தார். குலநாசத்தை தவிர்க்க, தான் ஒருவன் மரணதண்டனை பெறத் துணிந்து, இராமர் காலனோடு உரையாடிக் கொண்டிருந்தபொழுது, உள்ளே வர நேர்ந்து விட்டது என்று கூறி, தன் பிழை பொறுத்து, தனக்குரிய மரண தண்டனையை நிறைவேற்ற கட்டளையிடும்படி கேட்டுக் கொண்டாராம்.

கண்களை இமைகள் காப்பது போல இதுவரை கணப்பொழுது கூட தவறாமல், தனது குறிப்பறிந்து தொண்டாற்றி வந்த அருமை தம்பி லக்ஷ மணனுக்கு, தானே மரணதண்டனை வழங்கும்படி நேர்ந்து விட்டதே என்று கடுந்துயரத்திலாழ்ந்த இராமர் செய்வதொன்று மறியாது, மஞ்சத்தில் சாய்ந்து விட்டார்.

தனக்கு மரண தண்டனை விதிக்க, இராமனின் மனம் ஒரு பொழு தும் ஒவ்வாது என்றுணர்ந்த இளைய பெருமாள் தானே தண்டனையை நிறைவேற்றிக் கொள்ள துணிந்து, சரயூ நதிக்கரைக்குச் சென்று, தெற்கு நோக்கி பத்மாசனம் இட்டு இந்திரியங்களை ஒடுக்கி, மூச்சை அடக்கி ஒரு கற்சிலை போல அசையாது அமர்ந்து விட்டார். லக்ஷமணனின்

வைராக்யத்தைக் கண்ட இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் வியப்புற்று புஷ்ப மாரி சொரிந்தார்களாம் !

மஞ்சத்தில் சாய்ந்து ஆழ்ந்த யோசனையிலாழ்ந்திருந்த இராமர், சில வினாடிகள் கழித்து, நோக்கியபோது, எதிரில் லக்ஷ்மணனைக் காண வில்லை. குலகுருவை கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வரலாம் என்று வசிஷ்டரைக் காணச் சென்ற பொழுது, லக்ஷ்மணனின் துணிவை அறிந்த இருவரும் சரயூ நதிக்கரைக்குச் சென்று பார்த்தபொழுது, லக்ஷ்மணனின் உடல்மட்டும் தான் கற்சிலைப்போல இருந்தது. உயிரான அனந்தன் வெளியேறி விட்டான்.

லக்ஷ்மணனின் தன்னிச்சை செயல் சுவாதந்திரியமானது என்றள வில், அறநெறிக்கோட்பாடுகளுக்குட்பட்டதல்ல. அரசன்தான் தண்ட னையை விதித்து நிறைவேற்ற வேண்டும், அப்பொழுதுதான் தருமநெறி காக்கப்படும். தானே தண்டனையை நிறைவேற்றிக் கொள்வது குற்றம். அவசரப்பட்டு தன்னிச்சையாக செயல்பட்டமையால், சிறிது காலம் லக்ஷ் மணன் கற்சிலை போல ஒரு அசையாப் பொருளாக இருக்க வேண்டும் என்று சாபமிட்டார்.

அப்பொழுதிட்ட சாபத்தை, கலியுகத்தில் அனந்தனுக்கு, நினைவூட்டி, குருகாபுரியில் ஒரு புளிய மரமாக வளர்ந்து வாழும்படி கட்டளையிட்டார் பரந்தாமன்.

எம்பெருமானின் கட்டளையை சிரசாவகித்து பொருநை நதிக்கரை யிலுள்ள ஆதிநாதன் ஆலயத்தை அடைந்து, நாரணன் பணித்தபடி, அசையாப் பொருளான ஒரு புளியமரமாக வளர்ந்து, "திருப்புளியாழ்வார்" என்ற சிறப்பு பெயருடன் எழுந்தருளியிருந்தார்.

உபய விபூதிகளான நித்ய விபூதியையும், லீலாவிபூதியையும், தனது திருவிரல் கணையாழியைக் கொண்டு நிர்வாகம் செய்யும் விஷ்வச்சேன ராகிய சேனை முதலியாரின் அம்சத்தையும், கடல் கடைந்த பொழுது, திரு வுடன் தோன்றிய கௌத்துபம் என்ற செழுமணியின் அம்சத்தையும், அரு மறைகளை அந்தாதிகளாகவும் அவதரிப்பதற்கு நாரணன் திருவுள்ளம் கொண்டான்.

பகவானும் திருவுள்ளம் கொண்ட நாளான ஆவணித்திங்கள், பௌர்ணமி தினம், திருக்குறுங்குடி நம்பியின் அருளால், சில நிமித்தங் களைக் கொண்டு, உடைய நங்கை தான் உண்டாயிருப்பதை உணர்ந்து மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினாள்.

குறிப்பு : இப்பகுதி வால்மீகி இராமாயணம் உத்தரகாண்டம் 103, 104 சர்க்கங்களை தழுவியது.)

— ॐ —

## இயல் 7

# ஞான சூர்யன் உதயம்

தனக்கு உவமையே இல்லாத பகவானின் திருவடிகளையே சரண் என்று பற்றியவர்களுக்கு மனம் எப்பொழுதும் களிப்புடன் இருக்குமாம் ! அப்படி இறைவன் திருவடிகளை பெற இயாலதவர்களுக்கு மனக் கவலையை மாற்றுவதென்பது இயலவே இயலாதாம், என்று கூறியிருப்பவர் முப்பால் அறம் வளர்த்த திருவள்ளுவர் ஆகும்.

*"தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது".*

என்ற உண்மையை குறள் தோன்றுவதற்கு முன்னமேயே அறிந்திருந் தவள் உடைய நங்கை. மனக்கவலை தீர, திருக்குறுங்குடி நம்பியின் தாள்கள் பற்றினாள், அவனது அருளால் கருவுற்றாள்.

நாட்கள் செல்லச் செல்ல, நங்கையின் உருவத்தில் மாறுதல்கள் தோன்ற ஆரம்பித்தன. குறுங்குடி நம்பி, சேனையர்கோன், செழுமணி ஆகிய மூன்றின் அம்சங்களின் உருவாக, ஒரு பரம புருஷனை, தனது கர்ப்பத்தில் பயந்ததின் பயனாக, அதியற்புத சூலழகு பெற்று விளங்கி னாள். கன்னங்கள் மெருகேற்றிய தங்கம்போல, சற்றே வெளுத்தும், உப்பியும், அகன்ற சேல்விழிகளின் மருண்ட பார்வையும், கைப்பிடிக்குள் அடங்கக்கூடியதாக உண்டோ இல்லையோ என்று ஐயுறும் படி அமையப் பெற்றிருந்த இடையை, கருவுற்றிருந்த பொழுது உண்டென சொல்லும் படியும், பிறக்கப்போகும் குழந்தை. தங்களிடம் பால் பருகுமா என்று வாட்டம் அடைந்து சற்றே முகம் கருத்துள்ள தனங்களை கொண்டவளு மாக உடைய நங்கை காணப்பட்டாள். தாள் பற்றியவனையே பயந்து பெற்றெடுக்க, என்ன நோன்பு நோற்றாளோ என்று காண்பவர்கள் வியக் கும்படி இருந்ததாம், நங்கையின் தோற்றம்.

திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்தபடி, இலங்கேசுவரனின் பத்து தலைகளையும், ஐந்தும் ஐந்துமாக இரத்தம் சிந்தச் சிந்த கொய்தவனும் அருமறைகளால் உணருவனுமானவனை திருவயிறு வாய்த்த கௌசல்யா தேவியைக் காட்டிலும், உடைய நங்கையின் மணிவயிறு மிகச் சிறப்பு வாய்ந்தது என்று சொல்லும்படி இருந்ததாம் ! எப்படியெனில் மூன்று உல கங்களையும் உண்டுமிழ்ந்தவனையே, தன் உள்ளத்துள் கொண்டு, தானே அவனை விட பெரியவன் என்று கூறிய சடகோபனையல்லவா, நங்கை யின் மணி வயிறு பயந்தது !

"நித்ய விபூதி லீலா விபூதி என்பவைகளுள் பரவியிருப்பவன் நீ. ஆகையால் நீ பெரியவன். இவ்வளவு பெரியவனாக இருக்கும் நீ எனது செவிப்புலன் வழிபுகுந்து என் இதயத்தில் நித்யவாசம் செய்கிறாய். பெரி

யவனான உன்னை, என் செவி வழி கொணர்ந்து, உள்ளே நிறுத்திய ஆதாரப் பொருளான எனது உள்ளம் என்னுள் ஒரு பகுதியல்லவா ? அதனால் நான்தானே பெரியவன்", என்று சடகோபன் தான் அருளிச் செய்த பெரிய திருவந்தாதியில் கூறியுள்ளார். அப்பாசுரம்,

*"புவியும் இருவிசும்பும் நின்னகத்த நீ என்*
*செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய் அவிவின்றி*
*யான் பெரியன் நீ பெரியன் யென்பதனை யாரறிவார்*
*ஊன் பருகு நேமியாயுள்ளு".*

(பெரிய. திரு. 75)

மேலும் பகவானிடம் இணைபிரியா தோழமை கொண்டு விளங்கியவர் சடகோபனான மாறன். மனதை கொள்ளை கொள்ளும் அதியற்புதமான அழகன் பகவான். அவனை அப்படியே வாரி எடுத்து, விழுங்கி விட வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தாராம் மாறன். ஆனால் மாறனை முந்திக் கொண்டு, எம்பெருமான், தனது குணங்களையும், செயல்களையும், சடகோபனுக்கு காட்டி, அவரை ஒரு நீர் கொள்ளும் பாண்டமாக மாற்றி பிறகு, நீரோடு பாண்டத்தையும் பருகினானாம் ! திருவாய்மொழியில் சடகோபர் தனது பகவத் தோழமையை வெளியிடும் நயம் பாசுரத்தின் சிறப்பு. அப்பாசுரம்,

*"வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணில் என்று*
*ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம்*
*பாரித்து தான் என்னை முற்றப் பருகினான்*
*காரொக்கும் காட்கரையப்பன் கடியனே".*

(9.6.10)

பகவானுடன் நெருங்கிய தோழமையை வளர்த்துக் கொண்டு, பகவானைக் காட்டிலும் தானே பெரியவன் என்று கூறத் துணிந்த சடகோபனை மணி வயிறு வாய்க்கப்பெற்ற நங்கை, கௌசல்யாதேவியை விட சிறந்தவள்தானே ?

பேறுகாலம் நெருங்கியது. வான வெளியில் நீரை முகந்து அலையும் கருமேகங்களின் மூட்டம் காரணமாக, சில வினாடிகள் சடசடவென்று கனத்த சாரங்களாக மழைபெய்து ஓய்ந்தது. குருகாபுரியில் ஓர் யோகி தோன்றப் போகிறார் என்று உணர்த்துவதற்கு அறிகுறியாக, மழை பெய்தது என்று பெரியோர் கூறுவர் சிறிது நேரத்திற்குள் வானம் வெளி வாங்கி, புற இருளை அகற்றும் ஆதவன் தோன்றுவதற்கும், காரியின் மாளிகையில், மகிழ்ச்சி ஆரவாரங்களுக்கிடையில் அகஇருளைப் போக்கும் ஞான சூர்யன் தோன்றுவதற்கும் ஒத்ததாக இருந்ததாம் !

உலகிற்கு கீதோபதேசம் செய்த கண்ணன், ஆயர்குலத்தில் பிறந்தது போலவும், சரணாகதியின் மேன்மையை விளக்க, இராமன் ரகுகுலத்தில் பிறந்தது போலவும், மறையை தமிழ் செய்ய, மதிநலம் அருளப் பெற்ற மாறன் சடகோபன் வேளாளர் குலத்தில் தோன்றினான் போலும்.

பூமியின் பாரம் குறையவும் வைணவ ஆலயங்களில் நடைபெறும் நித்திய நைமித்திக விழா காலங்களில், சாத்திரத்திற்கேற்ப, தமிழ் மறைப் பாசுரங்களை ஓதுவதற்குரியவைகளாக்கவும், ஸ்ரீ பாஷ்யம் வழங்கிய யதி ராஜனான ஸ்ரீ இராமாநுஜரின் சிந்தையை தூண்டிய தேவனாகவும் சிறந்து விளங்கியவன், கலியுகம் பிறந்து முதல் ஆண்டில் 43 வது தின மான வைகாசி மாத சுக்லபக்ஷ பௌர்ணமியில், விசாக நக்ஷத்திரம் கூடிய வெள்ளிக் கிழமை நன்னாளில் உடைய நங்கைக்கு குழந்தை யாகப் பிறந்தான் !

குழந்தை பிறப்பதற்கு சில நாழிகைகளுக்கு முன், குருகாபுரியில் பொலிந்து நின்று சேவை சாதிக்கும் ஞானபிரானான ஆதிநாதன், தனது கருவறையை விட்டு வெளிப்போந்து, உடைய நங்கையின் பேறுகால அறைக்குள் சென்று, பிறக்கப்போகும் குழந்தைக்கு பூர்ண ஞானத்தை அளித்தான் என்று ஆன்றோர் கூறுவர்.

குழந்தை பிறந்து தாய்க்கும், சேய்க்கும் உள்ள தொடர்பான தொப்புழ் கொடி துண்டிப்பதற்கு முன், அஞ்ஞானத்தைத் தூண்டும் சக்தி கொண்ட பிரகிருதியின் பகுதியான வாயு என்ற சடத்தின் ஊறுதல் குழந்தை மேல் படக் கூடாது என்று, அந்த தெய்வாம்சம் கொண்ட குழ வியினிடமிருந்து, கோபாவேசமான ஒரு விசித்திர ஒலி எழுந்ததால், சட மான வாயு பயந்தோடி விட்டது என்றும் கூறப்படுகிறது.

மேலும், தாய் சேய் தொடர்பு துண்டிக்கும் முன்னரே தான தர்மங் களை செய்ய வேண்டும் என்ற மரபு வழுவாது, பூதானம், கோதானம், பூர் தானம், வித்தின் மாதானம் முதலிய தானங்களை, காரிமாறன் உரிய வர்களுக்கு வழங்கி மகிழ்ந்தார்.

இங்ஙனம், ஞானபிரானே தனக்கு ஞானம் அளித்த நிகழ்ச்சியை பிற்காலத்தில் தான் அருளிச் செய்த திருவிருத்தத்தில் அகச்சான்றாக தெரிவித்துள்ளார். அப்பாசுரம் (திருவிருத்தம் 45)

*"பெருங்கேழலார் தம்பெருங்கண் மலர்புண்டரீகம் நம்மேல்*
*ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம் ஒருவர் நம்போல்*
*வருங்கேழ்பவருளரே தொல்லைவழியாம் சூழ்பிறப்பு*
*மருங்கே வரப்பெறுமே சொல்லுவாழி மட நெஞ்சமே!"*

(ஞானப் பிரானை நான் அறியாதிருந்த அன்றே அகாலத்தில் எழுந் தருளி பிறழவைத்தார் என்பது குறிப்பு)

காரிமாறனுக்கு ஆண்குழந்தை பிறந்த நற்செய்தி நாடெங்கிலும், ப விற்று. காரியார் மாளிகையில், சங்குகளும், முரசுகளும், மங்கலவாத்யங் களும் முழங்கினவாம். மகளிர் தங்களது இல்லங்களில், வாயிற் பகுதி யில் வண்ண வண்ண கோலங்களிட்டு, குழுகுழுவாக கூடி ஆரவாரித் தும், ஆடியும், பாடியும் தங்களது மகிழ்ச்சியை அனுபவித்தார்கள். ஆ

வர்கள் அகமும் முகமும் மலர ஆரவாரித்து வியர்வை துளிகள் அரும்ப அனைவருக்கும் இனிப்புகளும் சன்மானங்களும் வழங்கியும், சந்தன குழம்பையும், நறுமணமலர்களையும் வாசனைப் பொடியையும், வீதிகளில் இட்டவாறே நகரை வலம் வந்து, எதிர்பட்டோர்களிடம், வாசனை திர வியங்கள் கலந்த நன்னீரைத் தெளித்தும் தங்கள் மகிழ்ச்சியை அனு பவித்தார்கள். குழந்தையைக் காண ஆவல் மிகுந்த மக்கள் கூட்டம் காரி யார் மாளிகையில் அலை மோதியது.

உடைய நங்கை ஒரு தெய்வீக குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்பிறவியால் கலியுங்கெடும் என்று கூறும் ஆழ்வார்களின் வரலாற்றுப் பாடலில், சேனையர் கோனே அவதரித்ததாக கூறப்படுகிறது. அப்பாடல்,

*“இரணிய பிரம்பினை ஏந்தும் பெற்றியன்*
*முரணுடைத் தானையர் முதல்வன் போந்துளன்*
*தரணியிற் கலியன் கடுமை தளர்த்திடும்*
*சரணிவான மக்கெனச் சாற்றுரா ரொருசார்”.*

தெய்வப் பிறவிகளைப் பலபுண்ணியவதிகள் ஈன்றெடுத்துள்ளார்கள். அவர்களுள் ஒருத்தியாக உடைய நங்கையையும் கருதக்கூடும் என்பதற்கு ஆதாரமாக “ஆச்சார்ய இதயம்” கூறும் சூர்ணிகைகளையும் காண்போம்.

இலக்குமிக்கு ஒப்பானவளாகக் கருதப்படும் தேவகி என்ற ஒருத்திக்கு, கண்ணன் குழந்தையாகப் பிறந்த சில வினாடிகளுள், அதே இரவில் ஆயர் குலத்தவளான யசோதை என்ற ஒருத்தியிடம் சேர்க்கப்பட்டவன்.

மச்சகந்தியான சத்தியவதிக்குப் பிறந்த பிறவி வேதங்களை தொகுத் தளித்த வேத வியாசர் என்ற அந்தணப் பிறவியான கிருஷ்ண த்வைபாயனர், ஐந்து வயது வரை அருவருப்பான மீனவச் சேரியில் வளர்ந்தவர்.

இவர்களைப் பெற்ற புண்ணியவதிகளைக் காட்டிலும், உடைய நங்கை சிறந்தவள் தானே ? என்ற ஆச்சார்ய ஹிருதயம் சூர்ணிகை 77 கூறுகிறது.

*“கிருஷ்ண, கிருஷ்ணத்வைபாய நோத்பத்திகள்*
*போலன்றே கிருஷ்ண த்ருஷ்ணாதத்வ ஜன்மம்”*

அடுத்து தாய்மையைப் பற்றி பேசும் சூர்ணிகையில், சில உயர்ந்த பிறப்புகளுக்கு காரணமாயிருந்த சில தாய்மார்களின் தாய்மை சிறப்பாக அமைந்தும், சில வகையில் குற்றம் காண இயலுமாம். ஆனால் உடைய நங்கையின் தாய்மை அப்படி இல்லை என்று கூறுகிறது சூர்ணிகை 78.

அது எப்படியெனில், திருவுக்கு ஒப்ப திகழ்ந்தவள் தேவகி. அவள் பெற்றெடுத்தது எம்பெருமானான ஸ்ரீ கிருஷ்ணனை இருப்பினும் பெற்ற குழந்தையை கண்களால் பார்க்காமலேயே பிரிவுக்கு ஆளாகி, அவனது பால்ய லீலைகள் எதையுமே காணக் கொடுத்து வைக்காத தாய்மை. அது,

திருவிலே னொன்றும் பெற்றிலேன்" என்று சொல்லும்படி பேறிழந்தவள் என்ற குற்றத்திற்காளான தாய்மையாகும்.

தேவகி என்ற ஒருத்திக்கு பிறந்தவன் யசோதா என்ற மற்றொருத்தியிடம் சேர்க்கப்பட்ட கண்ணன். கண்ணனின் பால்ய லீலைகளோ, மனித ஆற்றலுக்கு மீறிய செயல்கள். மாயா ஜாலங்கள், உரலோடு மரத்தை சாயத்தல், அடுத்தவர் இல்லங்களில் வெண்ணெய் திருடுதல், முதலிய செயல்களினால் உண்டான துன்பங்களை அனுபவித்தவள் யசோதை. கண்ணனை பெற்றெடுக்கா விட்டாலும், இந்த பொல்லாத பையனைப் பெற்றவளா சாதுவான யசோதா என்று ஊரார் கேட்கும்படியான தாய்மையை அல்லவா யசோதா பெற்றாள். அதனால் ஐயப்பாட்டிற்கு இடமளிக்கும் தாய்மையை ஏற்றவள் என்ற குற்றத்திற்கு இலக்கானவளாம் யசோதை.

வேதங்களை சீர்படுத்தி அளித்தும், மஹாபாரதம் இயற்றியும், பகவான் என்ற அடைமொழியைப் பெற்றவருமான வேத வியாசரை பெற்றெடுத்தவள் சத்யவதி. ஆனால் பெற்ற பிள்ளையால் வாழ்க்கையில் சுகம் ஏதும் அனுபவிக்க முடியாதபடி, பராசர முனிவரால் "புந: கன்யா பவிஷ்யதி" என்று சத்யவதி மீண்டும் கன்னியாக்கப்பட்டதால், தாய்மையே இல்லை என்று சொல்லும்படியான குற்றத்திற்குள்ளானவள் சத்யவதி.

உடைய நங்கையின் மைந்தன், பிற்காலத்தில் பகவத் சார்பாக, அநேக பாசுரங்கள் இயற்றி அருளிச் செய்துள்ளார். அவைகளுள் பல அகப் பொருள் பாசுரங்கள். அதாவது நாயகி நாயக பாவனையில் தன்னை தாயாகவும், தோழியாகவும், தலைவியாகவும், அகத்தில் பாவனைப் பெற்று பாசுரங்கள் அமைப்பதாகும். இவ்வகையில் தாயின் நிலையிலிருந்து "நங்கைமீர் நீரும் ஒரு பெண் பெற்று நல்கினீர் எங்ஙனே சொல்வேன் யான் பெற்ற ஏழையை", என்று பாடியவரை அல்லவா உடைய நங்கை பெற்றெடுத்தாள். இவ்வகையில், கீழே கூறப்பட்ட மூன்று தாய்மார்களின் தாய்மையும், மாறனைப் பெற்ற உடைய நங்கையின் தாய்மைக்கு ஈடாவார்களோ என்று வினவும் சூர்ணிகை 78.

*"பெற்றும் பேறிழந்தும், கன்னிகையானவளும்*
*எல்லாம் பெற்றாளாயும் தத்துக் கொண்டாள் என்பர்*
*நின்றாரென்னும்வளும் நெடுங்காலமும்*
*நங்கைமீரென்னுமவளுக்கு நேரன்றே"*

மக்கட் பேறு இல்லையே என்ற குறை தீர்ந்து, ஆண் குழந்தை பிறந்ததில் மிக்க மகிழ்ச்சி அடைந்தும், மனக்குறை தீரவில்லை. திருக்குறுங்குடி நம்பியின் திருவருளால் பிறந்தகுழந்தை பிறந்ததிலிருந்து அழுதல், அரற்றுதல், கைகால் அசைத்தல், பால்பருகல், கண்விழித்தல் ஆகிய மக்கள் இயல்புகள் ஒன்றுமே இல்லாது, போட்டது போட்டபடியே இருந்தது. ஆனால் மூச்சுக் காற்று மட்டும் இயங்கியும், வாட்டம் சிறிதுமில்லாமலும்,

மேனி அழகு குன்றாமலும் இருந்ததில் காரியாரும், உடைய நங்கையும் ஒருபுறம் அதிசயமும் மற்றொரு புறம் வேதனையும் கொண்டிருந்தனர்.

குழந்தையை அரண்மனை மருத்துவர்கள் பரிசோதித்துப் பார்த்தார் கள். தாதிமார்களும் தங்களாலியன்ற வரை முயன்றும், குழந்தையிடம் மாறுதல் ஒன்றும் காணாததிற்கு காரணம் புலப்படவில்லை.

வரங்கேட்டு பெற்ற குழந்தை, ஆடாது அசங்காது, அழாது, பால்ப ருகாது, இருந்ததை எண்ணி உடைய நங்கை பொருமினாள். கண்ணீர் விட்டாள், மார்பகத்தில் பால் சுரக்கும் போதெல்லாம் குழந்தையை அள்ளி எடுத்து, மார்போடு அணைத்து, எடுத்து விடும் போதெல்லாம் குழந் தையின் கடைவாய் வழியே வழிந்தோடுவதைக் கண்டு விம்முவாள், கேவு வாள், துக்கம் தொண்டையை அடைக்க தன்னைத்தானே தேற்றிக் கொள்வாள், தெய்வ அருளால் கிடைத்த அக்குழந்தை கனியமுதம் கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டாத கனிபோல ஆய்விட்டதே என்று காரி யாரும் விசனத்திலாழ்ந்தார்.

நாட்கள் ஓடியது. குலவழக்கப்படி பிறந்த பனிரெண்டாம் நாள், தொட்டிலிட்டு, பெயர் சூட்டும் வைபவம் நடந்தது. மாணிக்ககங்கள்கட்டி, வயிர இடைகட்டி, ஆணிப்பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டி லில், பூவிதழ்கள் பரப்பி, பொன்போல பிரகாசித்த சேயையிட்டு, தாலாட்டு பாடினார்கள். உடைய நங்கையும், தொட்டிலை அசைத்த வாறே பாடினாள்.

*"தண்தமிழும் வேதாந்த சாரப்பெரும் பொருளும்*
*மண்டலமும் விண்டலமு வாழப்பிறந்தானோ ?*
*மஞ்சாலி முத்தோ ? வயல் முத்தோ ? காந்தி எனச்*
*செஞ்சாலி சூழந்திருவழுதி நாடனோ ?*
*நாடி வலஞ்சூழ்ந்த சங்கராசனாம் சங்கமுனி*
*கோடிவலஞ்சூழும் குருகைப் பெருமானோ ?*

என்று பாடி தெய்வீகக் குழந்தையைத் தாலாட்டினார்கள்.

பிறகு குழந்தைக்கு, தங்களது குலப் பெயரான "மாறன்" என்ற பெயரையே இட்டார்கள். குழந்தை இயல்பிற்கு மாறாக இருந்ததற்கும் 'மாறன்' என்ற பெயர் பொருத்தமாக அமைந்ததும் ஒரு விசேஷம். மேலும், குழந்தை பிறந்த தருணத்தில் ஒரு விசித்திர ஒலி, கோபாவேசமாக ஒலித்து சடம் என்ற வாயுவை விரட்டியதினால், "சடகோபன்" என்ற பெயரும் இடப்பட்டது.



# இயல் 8

## பிறப்பின் சிறப்பு

உடைய நங்கையின் செல்வனைக் காண தினமும் பலவகைப்பட்ட மக்கள் கூட்டம், காரியார் மாளிகையில் நிரம்பி வழிந்தது. சுற்றத்தார்கள் உற்றார்கள், புலவர்கள் ஆன்மீக பெரியோர்கள் சான்றோர்கள் என்று பலர், இயற்கைக்கு மாறாக வளரும் குழந்தையைக் காண வருவார்களாம். ஆகாரம் எதுவுமே இல்லாமல் குழந்தை வாடாமல், வனப்பும் வாளிப்பும் பெருக, வளர்கின்ற அதிசயத்தைக் கண்டு, இது யோகியோ, தேவனோ அல்லது தெய்வாம்சம் கொண்டதோ என்று தங்களுக்கு தோன்றியவாறெல்லாம் கூறி வியப்புண்டார்களாம்.

பகவானின் பத்து அவதாரங்களும் மிகப் பெருமைக்குரியவைகள் ஆனால், அவைகளுள் பரசுராமராகத் தோன்றியது நேரடியான பகவத் அவதாரமன்று. அவரும் நம்மைப் போல ஒரு சீவரே. தனது தந்தையான ஜமதக்னியை, க்ஷத்திரியர்கள் அகாரணமாகக் கொன்றதால் கோபங் கொண்டு, இருபத்தோரு தலைமுறைகள் க்ஷத்திரியர்களை அழிக்க, அதற்குரிய வலிமை பெறுவதற்கு, தவம்புரிந்து, பகவானிடம் வேண்டி பகவானான ஸ்ரீமந் நாராயணனின் சக்தியை தன்னுள் அனுப்பிரவேசிக்குமாறு பெற்றுக் கொண்டவர். ஸ்ரீ இராமாவதாரத்தில் விஷ்ணு தனுசுவின் மூலமாக அந்த சக்தியைத் திரும்ப பெற்றுக் கொள்கிறேன் என்றும் கூறியிருந்தாராம். அதுவரை விஷ்ணுவின் அம்சமாக விளங்கியதின் காரணமாக, தெய்வாம்சம் கொண்டவர் என்ற வகையில், பரசுராமர் அவதாரமாகக் கருதப்பட்டார்.

இவ்வண்ணம் தோன்றுவது தெய்வாம்ச பிறவியாகும். அது போல மாறனின் பிறப்பும் மகா ஞானிகளுக்குக் கூட, ஒரு புதிராகவே இருந்ததாம் ! வர்ணகிரம முறைப்படி, முதல் யுகத்தில் அந்தணரான பரசுராமராகவும், இரண்டாவது யுகத்தில் சக்கரவர்த்தி திருமகனாக க்ஷத்திரிய குலத்திலும், மூன்றாவது யுகத்தில் மூன்றாவது வர்ணத்தைச் சார்ந்த தனவணிகரான வாசுதேவருக்கு மகனாகப் பிறந்து, பிறகு பால் வாணிபம் செய்து அதே குலத்தைச் சார்ந்த, யதுகுலோத்தமரான நந்த கோபருக்கு தத்துப்பிள்ளயாகத் திகழ்ந்த ஸ்ரீ கிருஷ்ணனான பகவானே, நான்காவதான இந்த கலியுகத்தில் நான்காவது வர்ணமான வேளாளர் மரபில் இப்படி மாறனாக பிறந்திருப்பாரோ ? என்று ஐயப்பட்டார்களாம்!

உலகில் அவாவற்று, சம்சார பந்தம் விடுத்து, வீடு பெற்ற முக்த சீவர்களுள் ஒருவர் பூவுலகில் தாம் பெற்ற அனுபவங்களை எடுத்துக் கூறி திருத்தி உய்விக்க, பகவானின் ஆணையைப் பெற்று இவ்விதம் உதித்திருப்பாரோ ? அல்லது சுவேத த்வீப வாசிகளுள் யாரேனும் ஒருவர்

பூவுலகில் உள்ளார்க்கும் நல்லுபதேசம் செய்ய இப்படி பிறந்திருப்பார் களோ? என்றெல்லாம் பலருக்கு ஐயம் உண்டாயிற்றாம்.

இப்படி காண்போர்களின் ஐயங்களையெல்லாம் துல்லியமாக ஆச்சார்ய இதயம் சூர்ணிகை 92 எடுத்துரைக்கின்றது. அது

*"அத்ரி ஜமதக்நி பங்க்திரத வசுநந்த சூதுவாதனனுடைய யுகவருண க்ரமாவதாரமோ, வியாசாதி வதா வேசமோ மூதுவர் கரை கண்டோர் சீரியரிலேயாருவரோ முன்னம் நோற்ற அநந் தன் மேல் புண்ணியங்கள் பலித்தவரோ வென்று சங்கிப்பார்கள்".*

குழந்தையைக் காணவந்த ஆன்றோர்கள், தங்களது ஐயங்களை எடுத்துக் கூறி, ஒருவருக்கொருவர் அளவிளாவிய பொழுது, கலியுகத் தில் நான்காவது வருணத்தில் பிறந்ததற்கு, வர்ணமுறை மட்டுமல்லாமல், வேறு ஏதேனுங் காரணமிருக்கக் கூடுமோ ? என்று ஒருவர் வினவிய பொழுது, அப்படியும் இருக்கக் கூடும், என்பதற்கு சான்றாக விளங்கும். ஆச்சார்ய இதயம் சூர்ணிகை (84) அது

*"வம்சபூமிகளை உத்தரிக்கக் கீழ்குலம் புக்க வராஹகோபாலரைப் போல இவரும் நிமக்நரை உயர்த்த தாழ இழிந்தார்".*

இதன் பொருள் : இரண்யாக்ஷன் என்று ஒரு அசுரன் தனது சாக சத்தினால் பிரளய நீரின் ஆழத்தில், நிலைகுலைந்து கிடத்தப்பட்டிருந்த பூமாதேவியை, பகவான், வராஹருபியாகி தாழஇழிந்து பூமாதேவியை உயர்த்தி நிலை நிறுத்தினார். யயாதி என்பவரின் சாபத்தால் அரசாளும் தகுதியை இழந்தவர்களின் குலமான யது குலத்தில், பகவான் கோபால னாகத் தாழப்பிறந்து அக்குலத்தை உயர்த்தினார் ! அவரைப் போலவே, மாறனும் அதோகதி அடைந்து கிடப்பவர்களை குலந்தாங்கும் அபிமானத் தால் விடுவித்து உயர்த்துவதற்காக, தாழ இழிந்த பிறவியோ? இப்பிறவி.

முதல் மூன்று வருணங்களும் உயர்ந்தது என்பதினால் அகங்காரத் திற்கு காரணமாகும்படி இருக்குமாம், ஆதலால் மாறன் நான்காவது வரு ணத்தில் பிறந்து "அபிமானதுங்கன்" என்ற பெயரை நாட தாழ இழிந் தாரோ என்றும் ஊகித்தார்களாம்.

திருமால் ரகு குலத்தில் இராமர் என்ற மனிதப் பிறவியை ஏற்றார். தந்தையையும், தாயையும் முன்னறி தெய்வங்களாக மதித்து நடந்தார். கானகம் புக காரணமாயிருந்த, சிற்றன்னை கைகேயிடம், தாயைக் காட்டி லும் மாறாத அன்பு கொண்டிருந்தார். குகனைச் சகோதரனாகக் கொண்டார். கேவலம் பறவை இனத்தைச் சார்ந்த சடாயுவிற்கு ஈமக் கடன் களைச் செய்தார். அற்ப பிராணியான ஒரு அணிலின் உதவியையும் உகந்து ஏற்றுக் கொண்டார். பரம வைரியான இராவணனின் தம்பிக்கு, அபயம் அளித்து, சரண்யனாகத் திகழ்ந்தார். அப்படி மனிதப் பண்புகளுக்

கேற்ப நடந்து காட்டிய ரகுகுலதிலகன், போரில் இராவணனை வென்று வெற்றி வாகை சூடி, ரகுவீரராக திரும்பும் போது சதுர் முக பிரமன் எதிர்ப் பட்டு, இராமரை வணங்கி "நீர் சாதாரண மனிதரல்ல, தேவாதி தேவனான, ஸ்ரீமந் நாராயணன் என்றுப் போற்றிப் புகழ்ந்தாராம்.

மனிதப் பண்பினை புகழந்து பேசுவது அகங்காரத்தை வளர்க்கும் இழுக்கு, என்று எடுத்துக் காட்டுவதற்காக, பூவுலகில் மனித தர்மத்தை கடைப்பிடித்து வாழ்ந்த தன்னை, பிரமன் புகழ்ந்ததை நிந்தையாகக் கொண்டு சினந்து அப்புகழ்ச்சியை ஏற்றுக் கொள்ளாமல்

*"ஆத்மானம் மானுஷம் மன்யே ராமம்*
*தசரதாத்மஜம்".*

என்று கூறினாராம் !

இதன் பொருள் (தசரதனுக்கு மகன் இராமன் ஒரு சாதாரண குடி மகனைத் தவிர வேறில்லை !)

ஆயர் குலத்தில் பிறந்து வளர்ந்த கிருஷ்ணன், ஆயர் குலத்தவர் களையும், ஆனிரைகளையும் தொடர்ந்து பெய்த மழையினின்று, குன்றை குடையாகப் பிடித்துக் காப்பாற்றினானாம். அப்பொழுது ஆயர்கள் கண்ணனை நோக்கி, "நீ என்ன தேவனா, யக்ஷனா, கந்தர்வனா என்றெல்லாம் ஐயப்பட்டு வினவியபொழுது "நான் அவர்களுள் யாரு மில்லை, உங்களில் ஒருவன் தான்" என்று கூறினாராம்.

பகவானே கடைப்பிடித்துக் காட்டிய, அவ்வுதாரணங்கள் தொண்டர் குலமே தொழு குலம் என்று துன்புற்றவர்கள், அடியார்கள், பாகவதர்கள் ஆகியோர்களுக்கு தொண்டாற்றுவதே, வாழ்க்கையின் நோக்கமாக அமை தல் வேண்டும் என்ற படிப்பினையை உணர்த்தும் வகையில் அமைந்தவை கள். பகவத் திருவடிகளைப் பற்றி, கைங்கர்ய பரராக இருக்க, படைப்பிற்கு அதிகாரியான பிரமனுக்குக்கூட பல காரணங்கள் தடையாக இருக்கக் கூடு மாம் ! பகவானின் திருவடி தொழாதிருப்பது சேஷத்வ விரோதியான அகங் காரத்தை வளர்த்து பந்த பாசங்களுக்கு உட்படுத்துமாம். ஆதலால் பகவத் திருவடிகள் பற்றி கைங்கர்யம் செய்ய அவனே உபாய உபேயம் என்ற நம்பிக் கையில் வந்த குடிவழிப்பிறப்பு, பரமபதத்திலும் தகுதி பெற்று விளங்குமாம்! அப்படி ஒரு குடி வழி தோன்றுவதற்கு மாறன் தாழ இழிந்தாரோ, என்று தாழ இழிந்தமையை கூறும் மற்றும் ஒரு சூர்ணிகை (81) அது.

*"தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜனிகன் போல பிரும்ஹ ஜன்மமும் இழுக்கென்பார்க்கு பண்டை நாவிற் பிறவி உண்ணாபடுத்தேசிறே".*

பொதிகை மலையில் வாழ்ந்து வந்த முக்காலமும் உணர்ந்த சில ஞானிகள், அந்த அதிசயக் குழந்தையைக் கண்ணுற்ற பொழுது,

அவர்களுக்கும் உண்டான சில ஐயங்களுக்கும், விடை காணும் சூர்ணி கையையும் நோக்குவோம்.

மாறனுடைய பிரபாவ விசேஷமே ஐயங்களுக்கு மூலம் என சொல்லப்படுகிறது. மாறன் பிற்காலத்தில் அருளிச் செய்த "புவியுமிருவி சும்பும் நின்னகத்த" என்ற பெரிய திருவந்தாதி பாசுரத்தில் (75) எம்பெரு மானைக் காட்டிலும் தானே பெரியவன் என்று வாதாடியதை ஏழாவது இயலில் அறிந்தோம். அப்படி பகவானை விட பெரியவனாக இருக்கத் தகுதி கொண்டவன் (அதாவது விபூதி யுக்தனான பகவானைக் காட்டிலும், விபூதி உட்பட்ட பகவானையும் சேர்த்து தன்னுள் அடக்கிய தானன்றோ பெரியவனாக இருக்க தகுதி பெற்றவன், என்ற பிரபாவமும்

இமையோர் தலைவனான எம்பெருமான் "அத்தாமத்தன்பு செய்து என்னாவி சேரம்மானுக்கு (திருவா 2.5.1)என்று மாறன் பிற்காலத்தில் அரு ளிச் செய்தபடி பரமபதத்தில் பகவானின் வியாமோஹத்தையெல்லாம் இங்கேயே அனுபவிக்கும்படியும், பிற்காலத்தில் தாமே பரவசராகப் பேசலாம்படி, எம்பெருமானை தன்வசப் படுத்துகிற திருவாய் மொழியை பாடுகிற நாவன்மை கொண்டிருந்ததால், இரண்டு உலகங்களிலும் தனக்கு ஒப்பார் எவரும் இல்லாதபடி இருந்த பிரபாவம்.

பகவானுடைய வடிவழகு, சீலம், குணம் ஆகியவைகளை சதாசர்வ காலம் நினைத்து நினைத்து அதன் விளைவால் உண்டான ஆனந்த மிகு தியால் நெகிழ்ந்து பகவானை நேரில் கண்டவர்களைப் போல நிலை பெற்றவராக இருந்த பிரபாவம் !

உலகத்தில் உண்டி உடை என்று உகந்து, யானே என்றும், எனது என்றும் அகங்காரங்கள் மமகாரங்களுக்குட்பட்டவர்களாக வாழும் நாட்டார்களைப் போலல்லாது, "நாட்டாரோடியல் ஒழிந்து நாரணனை தன்னினமே" என்று தனது சூக்தி விசேஷத்தாலே, சடத்தைத்துரத்தி சட கோபனானதும், இதர மதத்தவர்களின் கொள்கைகளை மறுத்து வெற்றி கண்டு, அவர்கள் தலைவணங்குமாறு அங்குசமிட்டு அடக்கி பராங்குசன் என்று சொல்லும்படியான பிராபவம்;

பகவானிடத்தில் அனைவருக்கும் பக்தியை உண்டாக்கி, தம்முடைய கண்களுக்கு இலக்கானவர்களின் சம்சாரபந்தத்திற்கு தான் யமன் என்று சொல்லும்படியாக இருந்த பிரபாவம், இதனால் பாபங்கள் அருகில் ஒட்டா திருந்தமையும்.

இரவு பகலென்றறியாது பகவானது அனுபவமே பொழுது போக்காக இருந்த பிரபாவம்.

பகவத் பக்தி கொண்டு செயல்படும் அறநெறி வாழ்க்கைக்கு விரோ

தியும், ஒவ்வாததுமான கலியுகம் ஒழிந்து, வைணவ நெறி தழைத் தோங்கும் கிருதயுகம் தொடங்கியது என்பதற்கு அடையாளமான ஒரு பிர பாவமும், அதிசயக் குழந்தையான மாறனைக் கண்ட மாத்திரத்தில், ஞானி களுக்கு உண்டான ஐயங்களுக்கு காரணமாம் என்று கூறும் சூர்ணிகை. (93) அது :

*"இதுக்கு மூலம்யான் நீயென்று மறுதலைத்து வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றி நிலையிடந்தெரியாதே தெய்வத் தினம் ஒருவகைக் கொப்பாக இனத்தலைவன் அத்தாமத்தன்பு செய்யச் சேர்ந்தமைக்கு அடையாள முளவாக உகந்துகந்து திமிர் கொண்டால், ஒத்து நாட்டியல்பு ஒழிந்து சடரையோட்டி மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு, நடாவிய கூற்றமாய்த் தீயனம ருங்கு வராமல் கலியும் நீங்கிக் கிதயுகம் பற்றிப் பட்டெழுத போது அறியாதிருந்த பிரபாவம்".*

இராமனான எம்பெருமானுக்கே ஆதவன் தோத்திரத்தை (ஆதித்ய ஹிருதயம்) அகத்தியமாமுனி உபதேசித்தார் என்பது மஹரிஷீ வால் மீகியின் வாக்கு. மேலும், பொதிகை மலையை இருப்பிடமாகக் கொண்டு "த்ரமிடம்" என்ற தமிழ் மொழியை வளர்த்தவர் அகத்தியர். குலசேகராழ் வாரால் "வண்டமிழ் மாமுனி" என்று சிறப்பித்துப் பேசப்பட்டவர். "அகத் தியன் இருக்கும் திக்கு யாவர்க்கும் புகலிடம்" என்று வால்மீகி முனி வரால் சிறப்பிக்கப்பட்டவர். இவ்வகை பெருமைகளோடு, ஞானிகளான, அகத்தியர், வால்மீகி, பராசரர் ஆகியோர் தங்குமிடங்களின் அருமை பெருமைகளை, அங்குள்ள நதிகளின் சிறப்புக்களோடு ஒப்பிட்டு உயர் த்திப் பேசுவதால், நதி தீரத்தில் வசிப்போர்க்கும், தீர்த்தம் பருகுவோர் களுக்கும் பக்தி அதிகரிக்கும் என்று கூறப்படுகிறது. இங்ஙனம் சிறப்பு வாய்ந்த காவ்ய கர்த்தாக்களான ஞானிகளைக் காட்டிலும், தாமிரபரணி தீரத்தில், பகவானால் மயர்வற மதிநலம் அருளப்பட்ட யோகியான மாறன் என்பார் தோன்றி சிறப்புற விளங்குவார் என்று, பாகவதம் அருளிய சுக மஹரிஷீ முன்னமே குறிப்பாக உணர்த்தியுள்ளார் என்பதைக் கூறும் ஆச்சார்ய ஹிருதயம்.,

*"தமிழ் மாமுனி திக்கு சரண்யமென்றவர்களாலே க்வசித் க்வசித்தென்று இவராவிர்பாவம் கலியுங்கெடும் போல சூசிதம்".* (91)

(அதாவது மாறன் சடகோபன், தான் அருளிச் செய்யப்போகும் திரு வாய்மொழியால் ஈர்க்கப்பட்ட இராமாநுஜர் போன்ற ஆச்சார்யார்கள் தோன்றி அதனால் கலியுகத்தில் இயல்பு மாறுபடும் என்பது சுகரின் சூசகம்) என்பது குறிப்பு.

ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் மஹரிஷீகளை விட, மயர்வற மதி நலம் அருளப் பெற்ற சடகோபனுக்குள்ள ஏற்றங்கள் பற்றி விளக்குகிறார், அழகிய மணவாள பெருமாள் நாயனார் தனது ஆச்சார்ய ஹிருதயத்தில்.

ரிஷீகள் அவரவர்கள் அனுட்டித்த தவரூபமான தர்மத்தின் சக்தியினால் பெற்ற ஞானத்தால் அறிய வேண்டியவைகளை, தெளிய அறிந்து, அதனால் மகிழ்ச்சியும் உள்ளத் தெளிவும் பெற்று, மடை திறந்தால் போல சுலோகங்களை வெளியிட்டார்களாம். அதாவது அவர்களது பரிபூர்ண ஞானம் "பகவத் பிராப்தி" என்ற அனுபவத்தை அளிக்கவில்லை என்பது குறிப்பு. ஆனால், பகவானாலேயே மதி நலம் அருளப் பெற்றமையால் மாறனுக்கு ஞானம் பரிபக்குவமாகி, பக்தி முதிர்ந்து, பகவானின் பிரிவாற்றாமையினால், ஞானமெல்லாம் உள்ளத்தில் அடி மண்டியாகி, தான் எண்ணியபடி, எம்பெருமானை அனுபவிக்க முடியவில்லையே என்று சோக முதிர்ச்சியினால், பாசுரங்கள் இயற்றும்போது, மேல்அடி எடுக்க முடியாமல், மூவாறு மாதங்கள் மோகித்தும், தெளிந்தும், தெளிந்த நிலையில், மேற்சொல் எடுக்க, மலையைப் புரட்டுவது போல கஷ்டப்பட்டு, பகவத் அனுபவம் கிட்டாத சோகத்தில் கலங்கி, அழுது, நா தழுதழுக்க ஈரச் சொற்களாலேயே திருவாய்மொழி பாசுரங்களை அருளிச் செய்தாராம். இவ்வகையில் சடகோபனுக்கு உண்டான வாசி, ரிஷீகளுக்குண்டான படியல்ல என்பதை விளக்கும் சூர்ணிகை (58). அது,

> *"தர்மவீர்ய ஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே*
> *மேலே தொடுப்பாரைப் போலன்றே அருளின் பக்தியாலே*
> *உள்கலங்கிச் சோகித்து மூவாறு மாஸம் மோஹித்து*
> *வருந்தியேங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிறவிவர்".*

அடுத்து, ஓதி உணர்ந்த, ரிஷீகள், விஷயாந்திரங்களில் விரக்தி இல்லாது, ஆசை முதலான பந்தங்களில் கட்டுண்டவர்களாகவே விளங்கினார்கள். ஆனால் மாறனோ, அவர்கள் போலல்லாது வீறு கொண்டு விளங்கினாராம் என்பதை விளக்கும் சூர்ணிகையின் பொருளைக் காண்போம்.

வேதங்களையும், அஷ்டாங்கயோகத்தினையும் கற்றுணர்ந்து, அவ்வழியில் பரமனை எத்தகையவன் என்று தெளிந்து, இப்படி சுயமுயற்சியால் கண்ட காட்சியில் விளக்கமின்மையினாலே இன்றளவும் போக விஷயங்கள், ஆசை என்று பல பல பாசங்களாலே கட்டுண்டு கிடப்பவர்கள் ஓதியுணர்ந்த ரிஷீகள். ஆனால் சடகோபனோ தன்னை, காண்கைக்கு உறுப்பாக, பகவான் கொடுத்தருளிய ஞான ரூபமான கண்ணாலே, அயன் அரன் முதலானோர்க்கும் அரியவனான சர்வேசுரனை மிகவும் விளக்கமாக உணர்ந்து, "இந்நின்ற நீர்மை இனியா முறாமை" என்று பகவானை கால் கட்டும்படி, தம் முயற்சியாலே கழிக்க

வொண்ணாத பிரபலங்களான உலகியல் பற்றுகள் அவன் அருளாலே அடி யோடு நீங்கப் பெற்றவர். சூர்ணிகை (59). அது,

*"ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றுத் தெளிந்தும் கண்டமை மைப்பாலே ஓதியுணர்ந்தவர் இன்று மாசாபாசபத்தர் ; அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே நேரே கார்செறிந்த நீராடி கட்கரிய அரும் பொருளைக் கண்ட போதே யாமுறாமை யென்னும் படி இவர்க்கு வன்பாசங்கள் நீங்கிற்று".*

இதனையடுத்து உணவு விஷயங்களிலும், மாறன், ரிஷீகளைச் காட்டிலும் விலக்ஷணமானவராகவே திகழ்ந்தாராம்.

ரிஷீகளுக்கு கனி, காய், கிழங்கு, சருகு, காற்று, தண்ணீர் ஆகிய வைகளே உடல் வளர்ச்சிக்கு ஆகாரங்கள் எம்பெருமான் பேரில் தான் கொண்ட காதலே வடிவெடுத்தாற் போல அமையப் பெற்ற சடகோப னுக்கோ, "உண்ணுஞ்சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலை எல்லாப் கண்ணன்" என்பதே பெறுதற்கரிய அனுபவமாக (தாரக போஷணம்) இருந்ததாம்! இதை விளக்கும் சூர்ணிகை (60) அது

*"அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாராசாதிகள், இவர்களுக்கெல்லாம் கண்ணனிறே".*

ரிஷீகளின் சித்தமும் சடகோபனின் சித்தமும் வாசி. அதாவது ரிஷீ களுக்கு ஆற்றாமை சொந்த பந்தங்களில், மாறனுக்கு ஆற்றாமை பக வானிடத்தில் எப்படியெனில் எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங்கண்ணீருமாய்க் கடலோடு, மலையோடு, ஆகாசத்தோடு வாசியற எங்குந்தேடி, நெஞ்சு கலங்கி "திருமாலே" என்று கூப்பிட்டு எங்கே காணக்கிடவேன் என்று எம்பெருமான் விஷயத்தில் மாறன் படுப் ஆற்றாமையாகும். ரிஷீகளின் வரலாற்றினைக் காணும் போது, அவர்கள் சம்சாரப்பற்று அறாதவர்கள் என்பது விளங்கும். எம்பெருமானின் அவ தாரமான இராமனுக்கு ஆச்சார்யாராக விளங்கிய வசிஷ்ட மஹரிஷீ தனது புத்திரன் இறந்த சோகத்தினால், மரணத்தை விரும்பி மலையி லிருந்து விழுவது, நெருப்பிலே குதிப்பது போன்ற தற்கொலை முயற்சி களில் ஈடுபட்டு தடுமாறினார் என்று அவர்கள் தோற்றுவித்த புராணங் களே கூறுகின்றனவாம் ! ஆக இப்படி, ரிஷீகளுக்கு புத்திரர்களிடத்தில் ஆற்றாமை, மாறனுக்கு ரிஷீகளுக்கும் இது வாசியாகும். இதை விளக்குப் சூர்ணிகை. (61)

*"அழநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்பும் துழாய் திருமா லென்று எங்கே காண்கேனென்னு மிவரலமாப்பு, அவர்களுக்குப் புத்திர வியோகத்திலே".*

ஆற்றாமையில் மாறனுக்குரிய வாசி கண்டது போல, ஞான விசேஷத்திலும் காண முடியும் என்று கூறும் சூர்ணிகை. (62) அது,

*"பல சாதன தேவதாந்தரங்களில் இவர்கள் நினைவு பேச்சிலே தோன்றும்".*

இதன் பொருள் : பகவானை அடைவதே பலனாகவும் அதற்கு கர்ம ஞான பக்திகளே உபாயமாகவும் பிரமன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்மியான எம்பெருமானே பற்றுதற்குரியவனாகையினாலே அந்த தேவதைகளும் அவனை அனுவர்த்திக்கக் கூடும் என்பது ரிஷிகளின் பேச்சு. கைங்கர்யமே புருஷார்த்தம் (பலன்) அதனைப் பெறுவிப்பது பிரபத்தி (சரணாகதி). இதர தேவதைகள் அனுவர்த்திக்க உரியரல்லர் என்பது மாறனின் அருளிச் செயல். ஆக ரிஷிகளின் பிரதிபக்தியினைக் காட்டிலும் மாறனது பிரதிபத்திக்கு வாசியுண்டு.

அடுத்து மாறன் சடகோபனின் தோன்றலின் சிறப்பு, அவர்களது குலத்தை உயர்த்தியதோடுமல்லாமல், பரோபகாரமாகவும் இருந்தது என்பதையும், ஆச்சார்ய ஹ்ருதயம் எடுத்துக் காட்டுகிறது.

ஜனக குலத்திற்கு மூத்த பெண்ணாக சீதா பிராட்டியார் பிறந்து, "ஜனகானாம் குலேகீர்த்திம்" என்பதற்கிணங்க குலத்திற்கு கீர்த்தி உண்டாக்கினாளாம்.

ரகுகுலத்தில் பிறந்த பரதன் மூத்தவர் இருக்க, இளையவர் முடி சூடிக்கொள்வது தகாது என்ற குல மரியாதையை நடத்திக் காட்டினார். இராமனின் பிரிவால், சடை புனைந்து, மரவுரி அணிந்து, கண்ணீர் ஆறாகப் பெருகி உண்டான சேற்றில் தரைக்கிடை கிடந்து, குலத்திற்கு முன்பு இல்லாத ஏற்றங்களை உண்டாக்கினார்.

வசுதேவ குலத்திற்கு கடைகுட்டியான கண்ணன் பிறந்து, காரணமின்றி, சிறைப்பட்டிருக்கும் தாய் தந்தையின் கைகால் விலங்கை அறுத்திட்டான்.

இம்மூன்று நிலைகளையும் மாறன் சடகோபன் ஒருவரே ஏற்று செயல்பட்டார் என்பது ஒப்பு நோக்கப்படுகிறது. தாம் பிறந்த ஊருக்கு "மலி புகழ் வண் குருகூர் சடகோபன்" என்றும், தாம் பிறந்த குடிக்கு "ஏற்கும் பெரும் புகழ்வண் குருகூர் சடகோபன்" என்றும்; பிறந்த ஊருக்கும், குடிக்கும் புகழை உண்டாக்கினார். இதனால் பிராட்டிக்கு ஒப்போ என்ற சங்கை.

தாம் பகவானுக்கு அடிமை (சேஷன்) என்பதில் "குடிக்கிடந்து ஆக்கம் செய்து" என்று குல மரியாதை தப்பாதபடி, பகவானைப் பிரிந்த வருத்தம், உள்ளத்தை அழுத்த "கங்குலும் பகலும் கண் துயிலறியாது கண்ண நீர் கைகளாலிறைத்து இட்ட காலிட்ட கைகளாயிருந்த இக்குடிக்கு முன்பு

இல்லாத ஏற்றத்தை உண்டாக்கினார். இதனால் பரதனோ என்ற சங்கைக்கு ஒப்பு.

*"அறுவர் தம் பிறவி அஞ்சிறையே"*

என்ற தனது திவ்ய பிரபந்த அப்பியாச முகத்தாலே தனனோடு அன் வயமுடையாருடைய சம்சார பந்தம் என்ற சிறையை அறுத்துப் போந் தாராம். இதனால் ஸ்ரீகிருஷ்ணனோ என்ற சங்கைக்கு ஒப்பு.

இவ்வகையில் ஒப்பு நோக்கப்பட்ட மூவர் செய்ததை இவரொத்தரே செய்ததால், அனைத்தும் சீவ ஸ்வரூபத்திற்கு அனுகூலமானதால் பரோப காரமும் ஆயிற்று. இதை விளக்கும் சூர்ணிகை (82) அது,

*"ஜனக தசரத வசுதேவ குலங்களுக்கு மூத்த பெண்ணும் நடுவிற் பிள்ளையும் கடைகுட்டியும் போலே இவரும் பிறந்து புகழுமாக்கமுமாக்கி அஞ்சிறையு மறுத்தார்".*

மாறன், சடகோபனின் பிறப்பால் உலகத்திற்குண்டான நன்மைகள் பேசப்படுகிறது ஆச்சார்ய ஹிருதய சூர்ணிகையில்.

நலந்திகழ் நாதமுனிகள் சடகோபரை ஒரு சூர்யனாக உருவகப்படுத் தியுள்ளார். எப்படியெனில் திருவாய்மொழி ஆயிரம் என்கிற ஆயிரங் கிரணங்களை உடையவர் சடகோபர். திவ்ய ஆயுதங்களுடன் திருமகள் நாதனை "கண்கள் சிவந்து பெரிய வாய்" என்ற பாசுரத்தின்படி, திருவுள் ளத்தில் கொண்டவர் மாறன். வேத வித்துக்கள் அனைவரும் கேட்ட போதே, தாமிருந்த தேசத்தை நோக்கி வணங்கும்படியான வைபவத்தைக் கொண்டவர், மாறனான சடகோபர். இவ்வகையில், மாறனை சூர்யனாக உருவகப்படுத்திய, நாதமுனிகளின் சுலோகத்தின் கருத்துக்களே, கீழே குறிப்பிடப்பட்டவைகள். அதனால், நாதமுனிகளின் கூற்றுப்படி, மாறன் "வகுள பூஷண பாஸ்கரன்" என சொல்லத்தக்கவர்.

இவரைத் தவிர மூன்று சூர்யர்கள் உலகிலுண்டு. தினமும் காலையில் உதித்து மாலையில் மறையும் பிரசித்தமான சூர்யன் ஒருவர். வெங்கதி ரோன் குலத்திலுதித்த தசரத குமாரன், அம்புகளாகிற கிரணங்களால், பரம வைரியான இராவணாதி கடலை வற்றச் செய்த "ராமதிவாகர" என்ற ராமசூர்யன் இரண்டாமவர். சகல லோகங்களாகிற தாமரைப்பூ மலரும்படி தேவகி என்ற கீழ் திசையில் உதித்த "அச்சுதபானு" என்ற கிருஷ்ண சூர்யன் மூன்றாமவர். இந்த மூன்று சூர்யர்களுக்கும் ஆகாத செயல்கள் வகுள பூஷண பாஸ்கரனால் உதயமாயினவறே ஆயிற்று.

"கதிரவன் குணதிசை சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றது" என்ற திருப்பள்ளியெழுச்சி பாசுரப்படியே, பிரசித்த சூர்யன் உலகின் வெளி இருளை மட்டும், போக்கிக் கொண்டு உதிப்பவன். உலகத்தவர் களின் அக இருள் அவனால் நீங்காது. அக்நியாலும், சூர்யனாலும் வெளியிருள்

மட்டுமே விலகும் என்பது அனைவரும் அறிந்தது. விஷ்ணுபக்தர்கள் என்ற சூர்யர்களால் புற இருள் அக இருள் இரண்டுமே ஒழியும். இங்கு மாறன் என்ற சூர்யனால் அக இருள் அகன்றது.,

இராம திவாகர் ராக்ஷசர் என்ற கடலை வற்றச் செய்தார். ஆனால் சம்சாரக் கடலை வற்றச் செய்ய இயலவில்லை. ஆனால் சடகோபனோ "பறவையேறும் பரம்புருடா, நீ என்னைக் கைகொண்டபின். பிறவியென் னுங் கடலும் வற்றி பெரும் பதமாகின்றதால்" என்ற அருளிச் செயலால் சம்சாரக் கடலை வற்றடித்த சூர்யனாகத் திகழந்தவர்.

'அச்சுதபானு' என்ற கிருஷ்ண சூர்யன், அகில உலகமான தாம ரையை மலரச் செய்தானல்லாது இருதய தாமரையை (ஹிருதய புண்ட ரீகம்) மலரச் செய்யவில்லை. அருளிச் செயலான "போதிற் கமலவன் நெஞ்சமும்" மலரப் பெற்றது சடகோப சூர்யனால்.

அஞ்ஞான இருளைப் போக்கி சம்சாரக் கடலை வற்றடித்து, சம்சாரி சீவர்களின் இருதய தாமரையை மலரச்செய்தவன் வருண பூஷண பாஸ்கரரான மாறன் சடகோபன் என்பது சூர்ணிகையின் தேர்ந்த பொருள், அந்த சூர்ணிகை, (83).

> *"ஆதித்ய ராமதிவாகர அச்யுதபானுக்களுக்குப் போகாத*
> *உள்ளிருள் நீங்கி, சோஷியாத பிறிவிக் கடல் வற்றி, விகசியாத*
> *போதிற்கமலம் மலர்ந்தது வகுளபூஷண பாஸ்கர தோயத்திலே"*

தேனினும் இனிய மதுரமான நீரைக் கொண்ட நதிகளின் பிரவாகம், கீழ் நோக்கிச் சென்று எதற்கும் உதவாத உப்புக்கடலில் சங்கமிக்கின்றது. ஆனால் தேனினும் இனிய மதுரமான தமிழ் சொற்கள் கொண்ட பாசுரப் பிரவாகம் மேல் நோக்கிச் சென்று உறுதிப்பொருளான வீட்டை அடையச் செய்து பிரபத்தி வெள்ளமான ஸ்ரீவைணவ தத்துவத்தைக் சிறப்பித்தது.

அநேக நீர் சுழிக்களோடும், பூமி பரப்பின் மேடு பள்ளங்களைச் சார்ந்தும் ஓடும் தாமிரபரணியான பொருநைத் துறையில் மாறன் சட கோபன் தோன்றி, பல மொழிகளுள் சிறந்த செந்தமிழ் மொழியில் ஆயி ரத்திற்கும் மேற்பட்ட பாசுரங்களிட்டு திருமாலை வழிபடுதல் மட்டுமே முக்திவழி என்று தலைகட்டினார். ஞானம் கருமம் முதலிய வழிகளால் வீடு என்ற பேற்றை பெற முடியும் என்பது, இதர மதங்களின் கொள்கைகளா யிருப்பினும், அவைகளை மறுதளித்து ஸ்ரீவைணவம் காட்டிய பிரபத்தி என்ற சரணாகதி வழியே முறையானதும், நேரானதுமான வழியாகும் என்று சடகோபன் நமக்கு உணர்த்துகிறார் என்று கூறியிருப்பது இராம காவியத்தை தமிழில் பாடிய மகாகவி கம்பராகும்.

சடகோபனின் காலத்திற்கு பின்பட்டவர் கம்பர். இராம காவியத்தை திருவரங்கத்தில் அரங்கேற்றிய பிறகு, சடகோபரின் பிரபந்த பாசுரங்

களில் ஆழ்ந்து, அவைகளைச் சிறப்பிக்கும் வகையில் அணிகலனாக "சட கோபர் அந்தாதி" என்ற பெயரில், பாடல்கள் இயற்றி தமிழுலகத்திற்கு வழங்கியுள்ளார். சடகோபரைப் போலவே கம்பரையும் ஒரு வைணவராக கருதுவதில் தப்பில்லை. இராமகாவியம் பாடியவர் என்பதினாலே, சடகோ பரின் சிறப்பிற்கு அந்தாதி பாடியவர் என்பதினாலோ, அவரை ஒரு வைணவராக கருத இயலாமற்போனாலும் அவரது பெயரான கம்பர் திரு மாலைக் குறிப்பிடும் வைணவப் பெயராகும்.

பிரஹல்லாதனுக்கு அருள் வழங்கத் தூணிலிருந்து தோன்றினார். எம்பெருமான் தூணப்பன் என்று பல பெயர்களால் வழங்கப்படுவதுண்டு. தூணிலிருந்து தோன்றியதால் தூணப்பர் ஆனார். தூண் என்பது தமிழ். அதற்கு வடமொழி "ஸ்தம்பம்" மணிப்பிரவாளமாக கம்பம் என்பதாகும். அத னால் கம்பர் என்ற சொல் தூணப்பராக தூணிலிருந்து தோன்றிய திருமாலை குறிப்பது என்பது மறுக்க இயலாதது என்றளவில் கம்பர் ஒரு வைணவர்.

சடகோபர் அந்தாதியின் சிறப்பு பாக்களை பிரிதொரு இயலில் காணலாம்.



## இயல் 9

# நங்கையின் செல்வன்

மாறன் சடகோபனின் பிறப்பின் மேம்பாட்டை, ஆன்றோர்களும் சான்றோர்களும், ஞானிகளும் போற்றிப் புகழ்ந்து, பகவத் அவதாரங் களான இராமன், கிருஷ்ணன் ஆகியோர்களுடன் ஒப்பு நோக்கி, வருங் காலத்தில் சான்றோனாகித் திகழ்ந்து, ஒப்பற்ற உன்னத நிலையை எய்து வார் என்று நேரில் காண்பது போன்று தங்களது உள்ளக்கிடக்கையை வெளியிட்டும், உடைய நங்கை உகந்தாள் இல்லை ! தெய்வாம்சம் வாய்ந்த குழந்தை என்று ஆன்றோர்கள் சொல்லக்கேழ்ப்பதும், ஆகாரம் எதுவு மின்றி, குழந்தை வனப்பும் வாளிப்புமாக ஆரோக்யமாக வளர்வதும் நங்கைக்கு எவ்வகையிலும் ஆறுதல் அளிக்கவில்லை. மக்கட்பேறு இல்லை என்ற குறை தீர்ந்தது என்றாலும், இயற்கைக்கு மாறாக அப்படி ஒரு பால கனை பெற்றெடுத்தோமே என்ற வேதனை அவளது உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்தது.

குருகாபுரி வாழ் மங்கை நல்லார்கள் அதிசயக் குழந்தையைக் காண வந்த வண்ணம் இருந்தார்கள். அவர்களுள் தங்களது இளங் குழவிகளை ஒக்கலில் இருத்தி வந்த சில மங்கையர்களைக் கண்ணுறும் போதெல்லாம் உடையநங்கை நெஞ்சு வெடித்து விடும் போல விம்மு வாளாம். பிறகு சடுதியில், இது என்ன அசட்டுத்தனம், என்று தேறி அவர்களை இன்முகத்துடன் வரவேற்று, நலன் விசாரித்து குழந்தையைக் காண்பிப்பாள். முழுமதியை ஒத்த முகத்தை உடைய நல்லாள். அம்மங் கையர்களை நோக்கி பாலுண்ணாமல் கிடத்தியபடியே கிடக்கும் குழந் தையை இம்மூவுலகில் எங்நேனும் கண்டதுண்டோ ? பிறந்து இவ்வளவு நாட்களாகியும், அசைவற்று கிடக்கும் அதிசயப் பிறவியை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா ? என்று அழுகையும் சிரிப்பும் கலந்த குரலில் வின வுவாளாம். அவர்கள் சென்றதும் குழந்தையை வாரி எடுத்து, மார்போடு, அணைத்து ஐயோ! இப்படி ஆகிவிட்டதே என்று விம்முவாள். இயற்கைக்கு மாறாக பிறந்து விட்டதே என்று அரற்றுவாள், அழுவாள், அணைத்து கொஞ்சுவாள், முத்தம் கொடுப்பாள் கண்களுக்கு மைதீட்டுவது போல வாயைக் குமைப்பாள், துக்கம் பீரிட்டுக் கொண்டு வரும், செய்வதறியாது வெறிச்சோடு நோக்குவாள். மார்பகத்திலிருந்து பீரிடும் பாலை, குழந்தை பருகாமல் கடைவாய் வழியே வழிந்தோடி ஆடைகள் நனையும். அதைக் கண்டு சோகிப்பாள். தான் பெற்ற குழந்தை ஆகாரமின்றி இருக்கும் போது, தனக்கு மட்டும் உணவு என்ன வேண்டிக் கிடக்கிறது என்ற விரக் தியால் பட்டினி கிடப்பாள். தோழிமார்கள் எவ்வளவு ஆறுதல் கூறியும் அவள் மனம் சமாதானமடையவில்லை.

பிரசவித்த பச்சை உடம்பு இன்னமும் தேறாத நிலையில் உண்ணா மலும் உறங்காமலும் உடைய நங்கை இருப்பது காரியாரின் உள்ளத்தைப் பாதித்தது. அவ்வப்போது நங்கைக்கு ஆறுதல் கூறி அவளை உண்ணச் செய்வார். ஆழியான் அருளால் நமக்கு மகப்பேறு கிட்டியது. அதுவும் அப்படி இயற்கைக்கு மாறாக வாய்த்தது என்றால், அதற்கும் அவனிடந் தான் தீர்வு காண வேண்டும். என்று நங்கையிடம் கூறவும், அவளும் முக மலர்ந்து, "ஸ்வாமி, அதுவே உகந்த செயல் என்று கூறினாள்". ஆதிபிரா னின் அருளால், நம்பியே சேயாக வந்துள்ளான் என்றால், அவனது கழ லடிகளில் சேயைக் கிடத்தி, வேண்டி நிற்போம். பகவான், மீண்டும் இரங்கி நமக்கு அருள் புரியக் கூடும்; என்று கூறி காரியாரின் ஆலோ சனைக்கு இணங்கினாள்.

குழந்தைக்கு பதினாறாவது நாளில் நாளும், கோளும் நலமாக அமைந்திருந்ததால், ஆன்றோர்களின் உசிதப்படி, சங்கங்கள் முழங்க, மங்கல வாத்யங்கள் இசைக்க பேரிகைகள் கொட்ட, ஊர்வலமாக குழந் தையை ஆதிநாதன் ஆலயத்திற்கு எடுத்துச் சென்றார்கள்.

பொலிந்து நின்ற, கார்முகில் வண்ணனான ஞானபிரான் திருமுன், குழந்தை மாறனைக் கிடத்தி வேண்டினார். காரியாரும், உடைய நங்கை யும் கூப்பிய கரங்களோடு, இறைவனை தொழுது நிற்க, அர்ச்சகர் விசா கத்திலுத்தித்து மாறனுக்கு அருள்புரிய ஆயிரம் நாமங்கள் அர்ச்சனை செய்தார். ஆலயத்தில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. அர்ச்சனை முடிந்து, கற்பூர ஆரத்தி காட்டி, தீர்த்த பிரசாதம் வழங்கினார்.

பிறகு, உடைய நங்கை, பெருமாளை வணங்கி, "மாயவனே ! மாலே மணிவண்ணனே! விண்ணோர் தலைவனே! ஏழைபங்காளனே ! வெண்ணை உண்டவாயனே! உலகுண்டு உமிழ்ந்தவனே ! தீராத விளை யாட்டுப் பிள்ளையாக யசோதா பிராட்டியை மகிழ்வித்தவனே! அடியார் குறை தீர்த்து அருள்பாலிக்கும். மெய்யனே ! அருள் கூர்ந்து எங்களுக்கு மக்கட்பேறு அளித்தாய் ! அளித்தும் பெற்ற பயனை நாங்கள் பெறா வண்ணம் இயக்கமின்றி கிடக்கும் குழந்தையாக அமைந்து விட்டதே ! நீயின்றி இப்பிரபஞ்சத்தில் ஒரு அணுவும் அசையாது ! உனதருளாலே கிட்டிய இப்பாலகனும் அசையாதிருக்க காரணம் எங்களது வினைப்பயன் களா ? அல்லது உனது மாயமா ? தலைமுறை தலைமுறையாக எங்கள் குடி வழி செல்வங்களுக்கு துணையிருந்து காப்பாற்றிய உனது அருள் பார்வை இக்குழந்தையின் மீதும் என்று கூறும்போது, சொல் எடுக்க முடியாமல், நாதழதழுக்க இறைவனை பிரார்த்திக் கொண்டிருந்த உடைய நங்கை ஆயாசமிகுதியினால், காரியார் மேல் சாயவும், கண்களை பறிக் கும்படியான ஒரு ஒளிக்கதிர் கருவறையிலிருந்து பளிச்சிட்டு குழந்தை மேல் படர்ந்து மறைந்தது. கண் இமைக்கும் நேரத்திற்குள் நடந்த அந்த நிகழ்ச்சியை யாரும் பார்க்க இயலவில்லை. ஆனால் அப்பேரொளி பாய்ந்ததை காரியாரும், நங்கையும் கண்டார்கள். அதே கணத்தில்

யாவரும் பார்த்துக் கொண்டிருந்த பொழுது, இயக்கமின்றி கிடந்த குழந்தை அசைந்து, கவுந்து, பிறகு மண்டியிட்டு, தவழ்ந்தது ! பதினாறு தினங்கள் ஆகாரம் ஏதுமின்றி செம்மையாக வளர்ந்திருந்த சேய், தட்டுத் தடுமாறி தவழ்வதைக் கண்ட உடைய நங்கையின் மகிழ்ச்சி ஆரவாரம் எல்லையைக் கடந்தது. ஆதிநாதன் அருள்புரிந்தான், ஆதிநாதன் அருள் புரிந்தான், என் தவம் பலித்தது, என்று உள்ளம் குளிர்ந்து உரத்த குரலில் தனது உவகையை வெளிப்படுத்தினாள். பலதரப்பட்ட மக்கள் முன்பு, தான் அந்நாட்டு அரசி என்பதனையும் மறந்து ஆரவாரித்ததை எண்ணி வெட்க முற்றாள். பத்து மாதம் சுமந்து பெற்றவள் அல்லவா அந்தப் பேதை. புதல் வன் தவிழவும் நங்கையின் எல்லை கடந்த மகிழ்ச்சி வெட்கமறியவில்லை !

> *"தண்டனிட விட்ட திருத்தாய் மனங்குளிர கண்டு கண்டு*
> *காரியார் கண்கள் களிகூற காதசையத் தோளசையக்*
> *கையசைத் தாளசையத் தாதசையப் பூவசையத் தாரசைய*
> *மெய்யசைய"*

குழந்தை தவழ்ந்து சென்றது.

அனைவரும் பின் தொடர, கருவறையிலிருந்து குழந்தை தவழ்ந்து, அர்த்த மண்டபம் கடந்து திருச்சுற்றின் வட பகுதிக்குச் சென்றது. அங்கு ஓங்கி வளர்ந்திருந்த புளிய மரத்தடியில், தெற்கு நோக்கி பத்மாசனமிட்டு அமர்ந்தது. இடது கையை மடியில் இருத்தி, வலது கையால் ஞான முத்திரை கொண்டு, கண்களை மூடி தியானத்தில் ஆழ்ந்தது.

மகன் தவழ்ந்து சென்றதை, கண் இமைக்காமல் முத்துப் பற்கள் தெரிய மகிழ்ச்சியுடனும் வியப்புடனும் பார்த்துக் கொண்டிருந்த உடைய நங்கை, பாலகன் மரத்தடியில் அமர்ந்ததும், அள்ளி எடுக்க முயன்றாள். அவளால் இயலவில்லை. சேயை அசைக்கக் கூட முடியவில்லையே என்ற ஆதங்கத்தில் மனம் பொருமினாள். காரி மாறனும், சீராய் அணைத்து எடுத்துப் பார்த்தார், அவராலும் இயலவில்லை. அரண்மனைப் பெண்கள் ஒருவர் பின் ஒருவராக எடுத்துப் பார்த்தும் அனைவரும் சேர்ந்து முயற் சித்தும் சேயை எடுக்க முடியவில்லை. மரம் அசைந்தாலும், மலை அசைந் தாலும், மகன் அசையான் என்பதை அறிந்த காரி மாறனும், உடைய நங்கையும் திக்கிட்டு நின்றார்கள்.

உடைய நங்கையின் களிப்பு, சில கண நேரம் மட்டுந்தான் என் பதனை, அவளால் எப்படி அறியக்கூடும்? அசைவே இல்லாதிருந்த குழந்தை தவழக் கண்டதும், அளவுக்கு மீறிய மகிழ்ச்சியை கொடுத்து, அதனை உடனேயே பறிப்பதில் ஆதிநாதனுக்கு இவ்வளவு ஆனந்தமா? யாரோ அறிவர் ? அவனின் திருவிளையாட்டை !

உடைய நங்கையின் நிலை, விவரிக்க இயலாதபடி இருந்தது. தாரை தாரையாக கண்ணீர் சோர உடலும் உள்ளமும் வாடி நிற்கக் கூட முடியா

மல் தளர்வுற்று, விம்மலும் பொருமலும் கேவ, குரல் நலிந்து மரத்தையும், ஆலய கல் தூண்களையும் நோக்கி நீங்களாவது இரங்க மாட்டீர்களா என்று கதறியதைக் கண்ட காரிமாறன் மனைவியை தேற்றினார். கண வனின் அணைப்பில் சற்றே தேறியவளாய், அவனைத் தவிர யார் இரங்க வல்லார், என்று எண்ணியபடியே மகனை அணைத்தவாறே, புளிய மரத் தடியில் தானும் உட்கார்ந்து விட்டாள்.

அரண்மனை வைத்தியர்கள் அழைக்கப்பட்டார்கள். சோதிடர்கள் வந்தார்கள். மாந்திரீகர்களும் தங்களது திறமையைக் காட்ட வந்தார்கள். ஆனால், எதுவும் பலனளிக்கவில்லை. ஒளிவீசும் மாறனின் முகத்தை கண்ணுற்ற அவர்களனைவரும் ஒரே குரலில் எங்கள் சக்திக்கு அப்பாற் பட்டதாக தோன்றுகிறது. மந்திரங்களோ, தந்திரங்களோ, மூலிகைகளோ எதுவும் பலனளிக்க வல்லது அல்ல, என்று கூறி திரும்பினார்கள். யோகி கள் தவசிகள் சித்தர்கள் இப்படி பலரின் முயற்சிகளுக்கும், மாறனின் நிலை ஒரு புதிராகவே இருந்ததாம் !

பாலகனோடு, மரத்தடியில் தானும் உட்கார்ந்து பித்துப் பிடித்தவள் போல, அழுவதும் சிரிப்பதுமாக இருந்த நங்கையின் உள்ளம் தளர்வுற்றது.

திருக்குறுங்குடி நம்பியின் அருளால் பிள்ளைப்பேறு உண்டாயிற்று. ஆனால் இயக்கமின்றி கிடந்த குழந்தைக்கு இயக்கத்தைக் கொடுத்து தவிழும்படி செய்தது ஆதிநாதனின் அருள். பதினாறு நாட்களே பிராய மான ஒரு குழந்தை தவழ்வதும், மரத்தடியை நோக்கிச் சென்று அமர்ந்த தும் வியப்பூட்டும் ஒரு காணக் கிடைக்காத அதிசயம். ஆகாரம் ஏதுமில் லாமலே தளதளவென வளர்ச்சியடைந்த அப்பாலகன் கண்களை திறந்து கனிந்து நோக்கி, பவள வாய்திறந்து அம்மா என்றழைப்பது எப்பொ ழுதோ ? என்று ஏங்கியதாம் அவ்வுள்ளம். பொது இடத்தில் இப்படியெல் லாம் நடந்து கொள்கிறோமே என்ற நினைவு சிறிதுமில்லாமல், குழந்தை யைக் கட்டி அணைத்து முத்தம் கொடுத்து, மாறனே, உனக்காகவே செய்த பொன்னால் ஆன சிறு தேர், சிறு பறை, பொற்பந்து கொண்டு விளையாடி என்னை மகிழ்விப்பது எப்பொழுதுடா தளர் நடை நடந்து, சப்பாணி கொட்டி எப்பொழுதுடா நான் காணப் போகிறேன் என்று ஏங்கி தவித்தது. அந்த தெய்வாம்சம் கொண்ட குழந்தையைப் பெற்றெடுத்த தாய் உள்ளம் !

மனைவியின் நிலை கண்டு காரியாரும் கண் கலங்கினார். பொது வாக தாயின் பிள்ளைப் பாசம் வெளிப்படையாகத் தெரியும். ஆனால் தந்தையின் நிலை அவ்வாறல்ல. அதனால் தந்தைக்குப் பாசம் இல்லை, என்று கூறி விட முடியாது. துக்கத்தை உள்ளே அடக்கிக் கொள்ளும் ஆற்றல் தந்தைக்கு இருப்பதால், அதை வெளிக்காட்டாது, மனைவிக்கு தக்க ஆறுதல் மொழிகளைக் கூறி, அரண்மனைக்கு உடைய நங்கையை அழைத்துச் சென்றார்.

நாட்கள் செல்லச் செல்ல நங்கையின் மனம் தெளிவடையத் தொடங்கியது. தினமும் ஆலயத்திற்குச் சென்று மகனின் பக்கத்தில் அமர்ந்து, நாளின் பெரும் பகுதியை கழித்து பிறகு மாளிகைக்கு திரும் புவதை வழக்கமாகக் கொண்டாள்.

ஆண்டுகள் ஓடிற்று. தியான நிலையிலிருந்த குழந்தை, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணம் போல் பருவ முதிர்ச்சி அடைந்து பால கனாக காட்சி அளித்தான். உணவே இல்லாமல் வளர்ந்த பாலகன், நாள டைவில் மேனி அழகு பொலிந்தும், தளதளவென வளர்ந்தும், முகத்தில் ஞான சௌந்தர்யம் பிரகாசிக்கவும், மோன நிலையிலேயே அமர்ந்திருந்த பாலகன், கட்டிளங்காளை பருவம் அடைந்தான்.

கல்லினுள் தேரைக்கும் வாழ்வு அளிப்பது போல, ஆதிநாதனின் கடைக்கண் பார்வையே இந்தப் பொலிவுக்கும் வளர்ச்சிக்கும் காரணம் என்பதை உணர்ந்த உடைய நங்கை, மைந்தனின் முகப் பொலிவு கண்டு மெய்சிலிர்த்தாள்.

மனிதப் பிறவியை அவதிக்குள்ளாக்கும் தன்மை கொண்ட பிராகி ருதியின் கூறான சடவாயுவின் தொடர்பு தன் மேல் ஊராதிருக்க ஒரு ஒலியை எழுப்பி, துரத்தியதையும், அதன் காரணமாக மாறனுக்கு சட கோபன் என்ற பெயரிட்டதையும் நினைவு கூர்ந்தான் உடைய நங்கை. தண்ணீரையே தனது இருப்பிடமாகக் கொண்டு வளரும் தாமரை இலை, தண்ணீரின் தொடர்பு அற்று இருப்பது போல, பிராகிருத உலகில், அதன் தொடர்பற்று விளங்கும் மாறன் சடகோபன் ஒரு ஞான யோகியைப் போல காணப்பட்டது. உடைய நங்கைக்கு ஆறுதல் அளித்தது. தளதளவென்ற மேனிப் பொலிவு, முகச்சாந்தி, இளங்காளைப் பருவம் ஒன்று சேர, திருப் புளியின் அடியில், இயற்கையாகவே அமைந்திருந்த குகையைப் போல் அமைப்பு கொண்ட இடத்தில் (பிலத்தில்) தியான நிலையில் அமர்ந்திருந் தது, ஆலயத்திற்கு வருவோர்களனைவர்களின் கவனத்தை ஈர்த்தது. ஒரு ஒப்பற்ற ஞான யோகியை பெற்றெடுத்தோம் என்று உடைய நங்கையின் உள்ளமும் தெளிவுற்று பெருமை அடைந்தது.

ஒளிப்பிழம்பாகத் திகழும் ஞான சூர்யனுக்கு முன், கதிரவன், வரு ணன், வாயு ஆகியோர்களின் செயல்கள் பொய்த்துப் போகும்படி அசை யாப்பொருளான திருப்புளியாக பெருமாளின் சாபத்தினால் வந்துதித்த அனந்தாழ்வான், திருக்குறுங்குடி நம்பியான மாறனுக்கு, தனது சேஷத்வ கைங்கர்யத்தை மேற்கொண்டான்.



# இயல் 10

# மாறனைப் பேசவைத்த பேரறிஞர்

பொதிகை மலையினின்று பெருகி, அகத்தியர் வளர்த்த முத்தமிழை யும், தன்னுள் சுரக்க பாய்ந்தோடும் தாமிரபரணி கரையில், குருகாபுரியை அடுத்து அமைந்துள்ள தலம் திருக்கோளூர் ஆகும். அவ்வூரில் கோயில் கொண்டெழுந்தருளி அருள்பாலிக்கும், "வைத்த மாநிதிப் பெருமானுக்கு" கைங்கர்யம் செய்து வந்த சோழிய குல (பூர்வசிகை) வைணவரான விஷ்ணு சேனர் தம்பதிக்கு, துவாபரயுகத்தில் ஒரு ஈசுவர வருஷத்திய சித்திரை மாதத்து சித்திரை நன்னாளில் ஒரு ஆண் மகவு பிறந்தது. வைகுண்ட லோகத்து கைங்கர்ய பரரான சேனையர் கோனின் உதவி யாளர் கணேசன் என்ற குமுதருடைய அம்சமும், பெரிய திருவடிகளின் அம்சமும் இணைந்து, அக்குழந்தை தோன்றியதாக ஆன்றோர்கள் பணிப்பர்.

சூர்யோதத்திற்கு முன் அவன் வருகையை அறிவிப்பதற்கு அறி குறியாக அருணன் உதிப்பது போல, பிற்காலத்தில் குருகூரில் மாறன் என்னும் ஞான சூர்யன் தோன்றப் போவதற்கு அறிகுறியாக இருந்ததாம்; அக்குழந்தையின் பிறப்பு.

இளமையிலேயே தன் தந்தையிடமும் ஆன்றோர்களிடமும், வேத சாத்திரக் கல்வி பயின்றும் செவிக்கினிய செந்சொற்கவிகள் பண்ண மைத்து பாடவும் பயின்று சிறந்து விளங்கினார். வேத விற்பன்னராகத் திகழ்ந்த இவரின் இயற் பெயர் தெரியவில்லை. நான்கு வகை கவிகள் பாடுவதில் வல்லவராகத் திகழந்தமையினால், இவரை "மதுரகவிகள்" என்றே அழைத்தனர். அக்காரணப் பெயரே, அவரது இயற் பெயராகவும் வழங்கியது. கவிகள் நால்வகைப்படும். அவைகள் "ஆசுகவி", "சித்ர கவி", "விஸ்தாரகவி", மதுரகவி", எனப்படும். இனிமையான குரலில் கணீரென்று பாடும் திறன் பெற்றிருந்ததால் அவரை "மதுரகவி" என்று வழங்கியதும் பொருத்தமாக அமைந்தது.

வேதாந்தத்தின் கல்வி பயின்றதின் விளைவாக, இளம் பருவத்திலி ருந்தே. திருமால் பக்தி வளரப் பெற்று, உலகியல் அவா அறுத்து யோக நிஷ்டையில் அவா கொண்டு விளங்கினார். ஞானத்தில் மேம்பட்ட ஆன் றோர்களையும், சான்றோர்களையும் சந்தித்து கலந்துரையாடி ஞானத்தை நன்கு வளர்த்துக் கொண்ட போதிலும், ஏதோ ஒன்றைப் பற்றிய ஞானம் இன்னும் பெறவில்லை என்று உள்ளுணர்வு உணர்த்தியது. "கற்றது கைம் மண்ணளவு, கல்லாதது உலகளவு", என்ற முதுமொழிக்கிணங்க, ஞானம் முழுமை பெற பாரதம் முழுவதும் யாத்திரை மேற்கொண்டார். இமயத்தின் முகடு வரை சென்று, பல ஆண்டுகள், உத்திர கங்கா தீரத்தில், காய், கனி, கிழங்கு, சருகு ஆகியவைகளை உண்டு வாழ்ந்து, பல ஞானி களோடு அளவளாவியும், தவங்கிடந்தும், திருமால் திருவருளுக்கு பெறு

நெறிகாட்டும் ஒரு ஞானியை அடைந்தாரில்லை. இறுதியில் சரயு நதிக் கரையில் உள்ள அயோத்தியை தனது இருப்பிடமாகக் கொண்டு ஒரு யோகி போல் வாழ்ந்தும், ஏதோ ஒன்றை தாம் அறியும் வாய்ப்பு இன்னும் உண்டாகவில்லையே என்ற குறை மனதை நெருடிக் கொண்டே இருந்தது. தனது ஊரை விட்டு தொலைதூரம் வந்து பல ஆண்டுகள் கழிந்து விட்ட தால், அவ்வப்பொழுது ஊரின் நினைவு வரும் போதெல்லாம் சரயு நதிக் கரையில் தெற்கு நோக்கி நின்றவாறு வைத்த மாநிதிப் பெருமானை தியா னித்த வண்ணம் நேரம் போவது தெரியாமல் பல நாழிகைகள் இருப்பார்.

ஒரு தினம் மாலை நேரத்தில், தென்திசை நோக்கிய பொழுது, ஒரு திவ்ய சோதிப் பிழம்பு வானுற ஓங்கி பிரகாசித்ததைக் கண்ணுற்று திடுக் கிட்டார். அது இன்ன ஒளி என்று இனங்காண இயலாது, காட்டுத் தீயோ, நாடு நகரம் பற்றி எரிகின்ற தீயோ, என்று ஐயுறும்படி இருந்ததாம், அதன் பிரகாசம். மறுதினம் காலையில் நோக்கிய போது அச்சோதி புலப்படவில் லையாம் ! அன்று மாலை தென் திசை நோக்கிய பொழுது, மீண்டும் அப்பேரொளி பல சூர்யர்கள் பிரகாசிப்பது போன்று தோன்றிற்றாம் ! தொடர்ந்து தினம் மாலையில் சோதி தெரிவதும், காலையில் மறைவதுமாக இருக்கக் கண்ட மதுரகவிகள், அதன் விவரத்தை அறிய இதர மக்களை விசாரித்தளவில், மற்றவர்கள் எவர்க்கும் அந்த சோதி புலப்படாததை அறிந்து வியப்புற்றார். அப்பேரொளியின் மூலத்தை அறிய ஆவல் கொண்டவராக, தென் திசை நோக்கிப் பயணப்பட்டார். இரவில் ஒளியை இலக்காகக் கொண்டு நடப்பதும், பகல் வேளைகளில் ஓய்வு கொண்டும், பல நாட்கள் தாம் கடந்து வந்த வடநாடு, நடுநாடு முதலிய நாடுகளில் உள்ள தலங்கள் எதற்கும் ஒளிக்கும் தொடர்பில்லை என்பதை கண்டறிந்தார்.

களைப்பு மேலிட்டும், அதைப் பொருட்படுத்தாது, திருமலையை அடைந்ததும், அதற்கும் தெற்கே சோதி தெரிந்தது. சோதியின் மூலத்தை அறியும் ஆவல் அதிகரிக்க அதிகரிக்க, மதுரகவிகளின் பயணமும் துரிதப்பட்டது.

உபய காவேரியை மாலையாக அணிந்து ஞானத்துயில் புரியும் அரங்கனின் சோதியாகத்தான் இருக்கக் கூடும் என்று ஐயுற்று, அரங் கத்தை அடையவும், சோதி அதற்கும் தெற்கே தோன்றி மதுரகவிகளை ஈர்த்தது. ஸ்ரீவில்லிப்புத்தூரிலும் அதற்கு மூலம் இல்லை என்பதை அறிந் ததும், அங்கிருந்து சில தினங்கள் பிரயாணப்பட்டு, தனது ஊரான திருக் கோளூருக்கே மாலை நேரத்தில் திரும்பி வந்தார். அன்றிரவில் தென் திசையை நோக்கிய பொழுது, சோதி தெரியவில்லை, நாற்புறமும் சுற்றிப் பார்த்த அளவில் வடதிசையில் சோதி தெரியவும், அதே இரவில் பிர யாணப்பட்டு குருகாபுரி அடையவும், சோதி ஆதிநாதன் ஆலயத்திற்குள் அடங்கியது என்பதை அறிந்தார்.

வியப்பும் திகைப்பும் கொண்ட மதுரகவிகளுக்கு, பொலிந்து நின்ற ஞான பிரானே, சோதி ரூபமாக தன்னை தன் ஊருக்கே திசை திருப்பி விட்டதற்கு காரணம் எதுவாயிருக்கும், என்று யோசித்தார். ஏதோ ஒன்றை அறிய விரும்பியது, உனதருகிலேயே இருக்க இமயம் வரை அதைத்தேடி அல்லல்பட்டாயே என்று தன் உள் உணர்வு கேட்பது போல இருந்ததாம். அண்மை காலத்தில் இந்த ஆலயத்தில் ஏதேனும் ஒரு அற்புதம் நிகழந்திருக்கக்கூடும் என்பதனையே, அந்த சோதி ஆலயத்தினுள் அடங்கியதால் உணர்த்துவது போல இருந்ததாம். சோதி எதுவாயிருக்கும் என்ற எண்ணமே மனத்தை ஆட்கொள்ள, தூக்கமின்றி இராப் பொழுது கழிந்தது.

பொழுது புலர்ந்ததும், சங்கணித்துறையில் நீராடி, அனுட்டானங்களை முடித்துக் கொண்டு எதிர்பட்டவர்களிடம் ஏதேனும் அற்புதம் அண்மையில் இவ்வூரில் நிகழந்ததா என்று வினவினார். எதிர்பட்டவர்களனைவரும் ஒரே முகமாக மதுரகவிகளை நோக்கி, “பெரியவரே, எங்கள் அரசி உடைய நங்கை ஒரு குலக்குமரனை ஈன்றெடுத்தாள். அவன் வாய் திறவான், மலர் கண் விழியான், முகம்பாரான், பாலுண்ணான், மாறன் சடகோபன் என்ற பெயர்களுடையான், பிறந்த பதினாறாவது தினத்தில், ஆதிநாதன் ஆலயத்தில் கிடத்தி இறைவனை வேண்டவும், தவிழ்ந்தான். தவழ்ந்து சென்று ஆலயத்தின் திருச்சுற்றிலுள்ள, மிகப் பெரிய அளவில் வளர்ந்திருந்த ஒரு புளிய மரத்தடியில் பத்மாசனம் இட்டு அமர்ந்து விட்டான். பதினாறு ஆண்டுகள் கழிந்து விட்டது. இன்னமும் கண் திறவாது யோகத்திலுள்ளான் என்று கூறினார்கள்.

விவரங்களை செவிமடுத்த மதுரகவிகளுக்கு, இச்செய்தி வியப்பையும் திகைப்பையும் அளித்தது. தனது இளம்வயதில், ஆதிநாதன் ஆலயத்திற்குள் புளியமரம் இருந்ததாக கண்டதில்லை. மிகப்பெரிய அளவில், அது எங்ஙனம் இப்பொழுது வளர்ந்தது என்ற திகைப்பும், ஆகாரம் ஏதுமில்லாமல், குழந்தைப் பருவ முதல் குமாரப்பருவம் வரை யோக நிஷ்டையில் அமர்ந்துள்ள ஒரு வினோத அரசிளங் குமரனின் அபூர்வ சக்தி பற்றி வியப்பும், மதுரகவிகளுக்கு உண்டாயிற்றாம். அந்த அற்புத, யுவயோகியை உடனே காண வேண்டும் என்ற தனது ஆவலை அரசர்க்கு தெரிவிக்கும்படி அங்குள்ளோர்களை கேட்டுக் கொண்டார்.

மதுரகவிகளின் ஆவலை அறிந்த காரியும், நங்கையும், வந்திருக்கும் பெரியோரின் முயற்சியால் மாறனிடத்தில் ஏதேனும் மாறுதல்கள் விளையுமோ என்ற ஆவல் மேலிட்டவர்களாக, பிரதானிகளோடு, சங்கணித்துறைக்கு விரைந்து ஊசி நுழையாத உரோமச் சடைமுடியரான மதுரகவிகளை வணங்கி, அவரை ஆலயத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

கூடாரம் அடித்தது போன்று அடர்ந்து பரந்து வளர்ந்திருந்த புளிய மரத்தடியில் யோக நிஷ்டையில் அமர்ந்திருந்த மாறனை மதுரகவிகளுக்கு காண்பித்த உடைய நங்கை, “முனிவர் பெருமானே ! பதினாறு

ஆண்டுகள் இவ்வண்ணமே உளன் என் மகன். ஞானிகளும், சித்தர்களும், மருத்துவர்களும், ஆன்றோர்களும், மந்திரவாதிகளும், பண்டிதர்களும் முயன்றும் பலன் ஏதும் காணவில்லை. தங்களது முயற்சியால் இந்த மதலை பேசக்கூடும் என்ற நம்பிக்கை என் மனதில் ஊசலாடுகிறது". "ஸ்வாமி", "தங்களது கருணையால், என கனவு நினைவாகி, எங்களது அரசை தங்களுக்கு காணிக்கையாக்கும்படி, எங்களை மகிழ்வியுங்கள், என்று பணிவுடன் வேண்டிக் கொண்டாள்.

ஆனால் அங்கு குழுமியிருந்த மக்கள் பலருக்கு, மாறன் பேசுவான் என்ற நம்பிக்கையே எழவில்லை. மதுரகவிகளின் கண்களில் தோன்றிய ஒரு பொலிவு, உடைய நங்கையின் வாடிய உள்ளத்திற்கு புத்துணர்வு ஊட்டியது போலிருந்ததாம்.

திருப்புளியின் அடியில் பத்மாசனம் இட்டு, ஞானமுத்திரை கொண்டு, கண்மூடி மோனத்தவத்தில் ஆழ்ந்திருக்கும் சடகோபனின் புஜங்களில் சங்கு சக்கர இலச்சினைகள் பொறிக்கப்பட்டிருப்பதைக் கவனித்து மதுரகவிகள் காரியாரையும் நங்கையையும் குறிப்பாக நோக்க, அவர்களும் குறிப்பறிந்து, பெரியோரே, சில மாதங்களுக்கு முன் தான், இந்த இலச்சினைகளை நாங்கள் கண்டோம். அது எப்படி இடப்பட்டது என்ற விவரங்களை அறியோம் என்றார்கள். இச்செய்தி மதுரகவிகளை இன்னும் வியப்பில் ஆழ்த்தியது. அண்மையிலிருந்து சடகோபனின் மேனியை வைத்த கண் வாங்காமல் கூர்ந்து நோக்கினார். பிறகு சிந்தையில் ஆழ்ந்தார். பிராகிருத உலகில் பிறந்தும், அதன் தொடர்பு அற்ற திருமேனியைப் போல, பொலிவுடன் விளங்குவதைக் கண்டார். இந்தப் பொலிவும் அண்மையில் தோன்றியதாக கூறப்பட்ட சங்கு சக்கர இலச்சினை களோடு இணைந்து சோதியாக ஒளிர்ந்த பிரகாசம் தான், தன்னை அயோத்தியிலிருந்து, வழிநடத்தி, இங்கு கொண்டு வந்து சேர்த்திருக்க வேண்டும். இதற்கு தெய்வீக நோக்கம் ஏதேனும் இருக்கும் என்றே அவரது உள்உணர்வு உரைத்தது.

மதுரகவிகளை தென்திசைக்கு ஈர்ப்பதற்கு சில மாதங்களுக்கு முன்பு, எம்பெருமானின் திருவுள்ளப்படி, முதல் பந்தி ஆச்சார்யார்களுள் மூன்றாவதாகத் திகழ்ந்த சேனையர் கோன், குருகாபுரிக்கு எழுந்தருளி, பெருமாள் அம்சமும், தனது அம்சமும் கலந்து அவதரித்த, மாறன் சட கோபனுக்கு சங்கு சக்கர இலச்சினைகளைப் பொறித்து மந்திரார்த்தங் கலை உபதேசத்தருளி, அனுக்கிரகித்து திரும்ப வைகுண்டத்திற்கு எழுந் தருளியது பகவத் சங்கற்பம் !●

பகவானால் மதிநலம் அருளப்பட்ட சடகோபனின் தெள்ளிய ஞானம், பதினாறு ஆண்டுகள் முடியும் தருவாயில், முழுமையாக மலர்ந்து, அதன் பொலிவு முகத்தில் சுடர் விட அனந்தாழ்வானான திருப்புளியடியில் வீற்றிருந்த ஆழ்வார் லோகாபிராமமாக வாழும் மக்களை திருத்தி

நல்வழிப்படுத்த, தாம் அறிந்ததை யாருக்காவது உபதேசித்து, ஆவன செய்ய வேண்டும் என்ற தனது விருப்பம் ஈடேறுங்காலம் நெருங்கி விட்டதை உணர்ந்தாராம் !

பாண்டவர்களுக்காக, தூது சென்ற கண்ணனை பகவானென உணர்ந்த விதுரர் அவனது திருவடிகளையே உபாயமாகப் பற்றி பேறு பெற்றார். அதே யுகத்தில் பிறந்த மதுரகவிகளும், சரயூ தீரத்தில் இருந்த பொழுது, விதுரர் செய்ததைப் போன்று செய்திருக்கமுடியும். ஆனால் மதுர கவிகளின் உள்ளமோ பாகவத சேஷத்வ கைங்கர்யத்தில் நாட்டம் கொண்டுள்ளது. என்பதனை உலகிற்கு எடுத்துக்காட்ட திருவுள்ளம் கொண்ட கண்ணனே, அவரைத் திசைத்திருப்பி, ஆழ்வாருக்கு கைங்கர் யம் செய்து, ஆழ்வாரின் மறைதமிழ் செய்யும் விருப்பத்தை செயலாற்ற செய்திருக்கக் கூடுமே !

எப்படியாகினும் மதுரகவிகள் ஆழ்வாரை அடைந்தது, தாய் பசுவை விட்டுப் பிரிந்த கன்று நெடுந்தூரம் சென்று, பல இடங்களில் தாயைத் தேடி அலைந்து, எங்கும் காணாது தவித்து, பிறகு எதேச்சையாக தாயி டம் சேரந்தது போல இருந்ததாம் ! மாறனின் திருமேனியில் பகவா னையே கண்டார் மதுரகவிகள். ஆனால் திருமேனி கருநீலமாக இல்லை, சங்கு சக்கரங்கள் பொருத்திய இரண்டு கரங்களை மட்டும் கண்டார், மற்ற இரண்டை காணவில்லை, நாபிக்கொடியும் இல்லை, திசை முகனும் தென்படவில்லை. பாரளந்த உருவமாகவும் இல்லை, ஆலந்தளிரில் அடங்கிய வடிவமாகவும் இல்லை. எனினும் என்னை உய்விக்க வந்த ஞானயோகியான, முச்சோதியினும் முழுச்சோதியான இந்த உருவம் என் மனதை கொள்ளை கொண்டது. இந்த வடிவமே இனி எனக்கு பகவான். இவரைத் தவிர வேறு தெய்வம் என் உள்ளத்தில் இல்லை என்று சிந்தை தெளிந்தவராக மாறன், சடகோபனையே ஆச்சார்யாராகவும், தெய்வ மாகவும் ஏற்று, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து தண்டனிட்டார்.

மதுரகவிகளின் செயல்களை கண்ணுற்ற நங்கை வியப்புக்குள்ளா னாள். தனது மகனைக் காட்டிலும் பல ஆண்டுகள் மூத்தவராக இருக் கும் மதுரகவிகள், மாறனை தண்டனிட்டு வணங்கியது, ஏதோ அற்புதம் நிகழப்போகிறது என்பதை, அந்த தாயுள்ளம் உணர்ந்தது.

ஆம் நங்கையின் எதிர்பார்ப்பு, வீண் போகவில்லை, ஒரு அற்புதம் நிகழத்தான் செய்தது.

மூச்சுக்காற்று மட்டும் இயங்கிக் கொண்டிருக்கும் மாறனுக்கு உணர்வு உண்டோ? செவிப்புலன் இயங்குமா? என்றெல்லாம் அறிய விரும்பினார். மதுரகவிகள் அருகில் கிடந்த ஒரு பெரிய பாறங்கல்லை எடுத்து, மாறனுக்கு அருகாமையில் ஒலிவரும்படி கட்டாந்தரையில் உயரத் தூக்கி கீழே போட்டார். கல்விழுந்த ஓசை கேட்டு மாறன் மலர் கண் மலர்த்தி, மதுரகவிகளையும், பிறகு தன் பெற்றோர்களையும் குளிர்ந்து நோக்கி புன்னகைத்தார்!

இதுகாறும் உடைய நங்கையின் உள்ளம் எதற்காக வாடி வதங்கி யிருந்ததோ, அது நிகழப்பெற்ற அக்கணத்திலேயே, புத்துயிர் பெற்று, பூரித்து அதன் சாயல் முகத்தில் மலர, தன் அருந்தவப் புதல்வன் தன் முகம் நோக்கி, புன்னகைத்ததில், ஆனந்தப் பொங்க, அந்தப் பேதையின் உள்ளம், துள்ளிக்குதித்து, சிறகடித்து, இமயத்தின் உச்சிக்கே பறந்தது! மகனைக் கட்டித்தழுவ ஆர்வங்கொண்டு சென்ற நங்கையை, அப்படி ஒன்றும் செய்ய வேண்டாம் என்று கையமர்த்திய மதுரகவிகளை, கண் களில் ஆனந்தகண்ணீர் தளும்ப அடிவணங்கி நின்றாள்.

கண்விழித்து நோக்கிய மாறனின் திருவடி தொழுது, தன்னை ஒரு சீடனாக அபிமானித்து தனது ஐயத்தைப் போக்குமாறு, ஒரு விசித்திர வினாவை மதுரகவிகள் கேட்டார். அது.

*"செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால்*
*எத்தை தின்று எங்கே கிடக்கும்"?*

என்பது வினா.

வினாவை வினவிய கணத்திலேயே, ஞானயோகியான மாறன். தனது மோனவாய் திறந்து கணீரென்ற குரலில், மதுரகவியாரே, உமது வினாவிற்கு பதில் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்", என்று கூறினாராம்.

பிறகு இதே வினாவை வேறு வகையில் பொருள்படும்படி, சற்றே மாற்றிக்கேட்டார் மதுரகவிகள் அது,

*"சிறியவற்றில் பெரியது அடங்கினால்,*
*எதை அனுபவமாகக் கொண்டு எங்கு சேரும்"?*

வினாவை வினவிய கணத்திலேயே, பதிலும் "அகாரவாச்யனை அனுபவித்து அவன் பக்கலிலே சேரும்" என்று கணீரென்று கூறினாராம்.

மாறனின் மதுரமான குரலைக் கேட்ட உடைய நங்கை, செவிகளின் பயனை பெற்றதாக உணர்ந்தாள். எல்லாவகையான ஒலிகளையும், செவி ஏற்றுக் கொண்ட போதிலும். சிலவகை ஒலிகளே மனதிற்கு உகப்பு அளிப்பவைகள். இருப்பினும் செவிப்புலன்கள் பெறும் பெருஞ்செல்வம் மறை ஒலிகளை கேழ்ப்பதினால் மட்டுமே, என்று முந்தய இயலில் கூறிய படி, மறை ஒலியின் முன்னோடியாக மாறனின் வாக்கு எதிரொலியாக ஆலய முழுவதும் பரவி ஒலித்த வண்ணம், ரீங்காரம் இட்டுக் கொண்டே இருந்ததாம்.

தங்களது மைந்தன் கண்விழித்துப் பார்த்தது, புன்னகைத்தது, மதுர மான குரலில் பேசியது ஆகிய அனைத்தும், காரியார் தம்பதியை மகிழ் ச்சிக் கடலில் மூழ்கச் செய்தது. இருவரும் மதுரகவிகளை தண்டனிட்டு வணங்கி, "பெரியவரே, எங்களது மைந்தனை கண் விழிக்கச் செய்து, பேசவைத்த புண்ணியரே, உலக ரீதியாக அவனை வாழவும் வைக்க

வேண்டும் என்று கோரி, தனது விரலிலிருந்து, முத்திரை மோதிரத்தை கழட்டி, மதுரகவிகளின் பாதங்களில் வைத்து, "இனி, இந்நாட்டை அ சாளும் உரிமை பெற்றவர் தாங்களே, தயை செய்து ஏற்றுக் கொள்ள வேண்டும், என்று வேண்டி நின்றனர்.

ஆனால், மதுரகவிகளோ, மோதிரத்தை, திரும்ப காரியாரிடே அளித்து, "மதிப்புக்குரியவர்களே, அரசு பதவியெல்லாம் எனக்கு ஏ புடையவனல்ல, உங்களுக்கு மைந்தனாக தோன்றியவர், லோகாபிரா மான ஆசைகளை மாற்ற வந்த நம்பியாகும். கலியின் இயல்பு தொடர திருக்க, வேதத்தை தமிழில் மறையாக வெளிப்படுத்தத் தோன்றியவ அப்படி தோன்றுவதற்கு காரணமான மணி வயிறு வாய்க்கப் பெற் உடைய நங்கையே, உலக மக்கள் உய்ய வழிகாட்ட வந்த மாறன் ச கோபன் என்ற தெய்வீகப் பிறவியை ஈன்ற புண்யவதி தாங்கள் என் பெயரும் புகழும் நாடழிந்தும் நிலை பெற்று நிற்கும். ஒப்புயர்வற்ற ஒ மகனை ஈன்றோம், அவனை லோகோபகாரியாக உலகிற்கு அளித் புண்ணியம் கொண்டோம், என்ற திருப்தியோடும் மகிழ்வுடனும் வாழு கள். இதுகாறும் ஈ, எறும்பு தொந்திரவு இல்லாமல், கண்களை இமை காப்பது போல, உங்கள் மைந்தனை கண்காணித்து இவ்வுலகிற்கு பே தவி புரிந்துள்ளீர்கள். இனி அவரைக் காப்பது எனது கடமைய பொறுப்பும். இனி உங்களது கடமை முடிவடைந்தது என்று பெருமித கொண்டு மனந்தளராது அரசு புரியுங்கள்", என்று ஆசிகள் வழங் அனுப்பினார். தனது பெற்றோர்களை புன்னகைத்த முகத்தோடு குள நோக்கி மதுர கவிகளின் கூற்றை ஆமோதிப்பது போல இருந்தது மாறனின் பார்வை ! எம் பெருமானுக்கொப்ப ஒரு பிள்ளையை பெற்றெடுத்தோம், உலகம் உய்ய அவனை உலகிற்கு வழங்கினோ என்று பெருமை கொண்டு இருவரிடமும் பிரியா விடை பெற்று மாளிகை திரும்பினார்கள்.

மதுரகவிகளின் வினாவிற்கும் மாறனின் பதிலிற்கும் பொரு என்னவென்று தெரிந்து கொள்வோம்.

முதல் கேள்வி :

செத்தது என்றால் — சடப்பொருளாலான மனித உடலை குறிப்ப
வயிற்றுள் — உடலிற்குள்
சிறியது பிறந்தால் — அணுவளவே உள்ள சீவன் தொடர்பு கொண்டால்
எத்தை தின்று எங்கே கிடக்கும் — எதை அனுபவித்து எங்கே இருக்கும் (கேள்

பதில் : அத்தைத் தின்று அங்கே கிடக்கும் அவ்வுடலின் சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டு அதை தாங்கி நிற்கும்.

இரண்டாவது கேள்வி :

சிறிய வயிற்றில் — அணு அளவே உள்ள சீவனுக்குள்
பெரியது அடங்கினால் — ஞானம் மலர்ந்து விபு அளவானால்,
எதை அனுபவமாகக் கொண்டு எங்கே சேரும்

பதில் : அகார வாச்யனான அதாவது ஓங்காரத்தின் முதல் எழுத்தான 'அ' என்ற எழுத்தால் குறிப்பிடப்படும். எம்பெருமானை ஸ்ரீமந் நாராயணனை அனுபவ போக்யமாகக் கொண்டு, அவனது திருவடிகளைப் பற்றி பெறும் பேறு எய்யும். (பதில்)



# இயல் 11

# தோல்வழியே நல்வழி

சக்ரவர்த்தியின் திருமகனான ஸ்ரீஇராமன் விபவத்தில் அவதார மாயினும், பரத்தில் ஸ்ரீமந் நாராயணன் என்பதை நன்கு உணர்ந்திருந்த சத்ருக்கனன், தனக்கு மூத்தவனான பரதனையே தெய்வமாகக் கொண்டு, வேறு தெய்வம் அறியாது, தொண்டாற்றி பாகவத சேஷத்வ கைங்கர்யத் தின் மேன்மையை விளக்கும் வகையில், பாகவதபக்தியில் சிறந்து விளங் கியவன். மேலும் புற எதிரிகளை அடக்கி ஆண்டவன் மட்டுமல்லாது, அக எதிரிகளான அவா, அழுக்காறு, காமம், குரோதம் முதலானதுகளையும் வென்று தனது பெயரான சத்ருக்னன் என்பதற்கேற்ப நடந்து காட்டிய வீரன்.

சத்ருக்னனைப் போலவே, தான் பெற்ற ஆச்சார்யாரான மாறன் சட கோபனைத் தவிர, வேறு எந்த தெய்வத்தையும் அறிந்ததில்லை என்று கூறுமளவிற்கு பாகவத பக்தியில் சிறந்தவராக விளங்கியவர் மதுரகவிகள்!

"உண்ணுஞ்சோறும், பருகுநீரும், தின்னும் வெற்றிலையும்" அனைத் தும் கண்ணன். என்று எம்பெருமான் ஒருவரைத் தவிர, மற்ற எதிலும் ஈடுபாடு கொள்ளாதிருந்தவர் மாறன். மாறன் அருளிய திவ்ய பிரபந்த பாசு ரங்களை முறையாக உபதேசம் பெற்று பட்டோலை கொண்டு, அவைக ளுக்கு இனிய பண்ணமைத்து, கைத்தாளம் கொண்டு நன்கு இசைக்கும் வல்லுனராகத் திகழ்ந்தவர் மதுரகவி. மாறனின் அனுபவமிக்க பாசுரங் களை அனுசந்திப்பதையே, நற்பொழுது போக்காகக் கொண்டு தனக்கு சேஷீ சடகோபனே என்று குணக்ருத்யமான தாஸ்யத்தையே சிரமேற் கொண்டு, வாழந்து காட்டியவர் மதுரகவிகள். சடகோபனைத் தவிர வேறு தெய்வமில்லை என்று ஓர்த்தமனத்தினராக, அவர் மேல் கொண்ட பக்தி காதலே, சடகோபன் விஷயமாக பதினொன்று பாசுரங்கள் அருளிச் செய்து, உபகரிக்க தூண்டு கோலாக அமைந்திருக்கக் கூடும்.

அந்த பாசுரங்களே "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற திரு மொழியாகும்.

மதுரகவிகளுக்கு கிட்டிய அனைத்து திவ்ய பிரபந்த பாசுரங்களும், நாட்டு மக்களுக்கு கிட்டாமல் காலத்தால் அழிந்து போன நிலையில், ஸ்ரீவைணவ ஆச்சார்யார்களுள், மேம்பட்டவராக, பிற்காலத்தில் திகழந்த ஸ்ரீமத் நாதமுனிகளுக்கு, மதுர கவிகளின் திருமொழியே அனைத்து பாசு ரங்களையும் பெறுவதற்கு காரணமாக அமைந்ததாம். "பாகவத பக்தியில் சிறந்து விளங்கிய மதுரகவிகள் எனது உள்ளத்தில் ஆவிர் பவிக்கட்டும்", என்ற ஸ்ரீமத் நாதமுனிகளின் வாக்கு இங்கே நினைவு கூர்வது பொருத்தம்!

*“வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த மாறன்*
*சடகோபன் வண்குருகூர் ஏறெங்கள் வாழ்வா மென்றேத்தும்*
*மதுரகவி யாரெம்மை ஆள்வா ரவரே யரண்”.*

ஆழ்வாரான சடகோபனின் திறத்தின் குணங்களுக்குத் தோற்றும் அடிமைப்பட்டவர் மதுரகவிகள். அதனால் பாகவத பரராக விளங்கினார். வேறு தேவு அறியேன் என்ற மதுர கவிகளின் வாக்கு, பகவத் பக்தி தாழந்தது என்று பொருள் படாது.

மதுரகவிகள் அருளிச் செய்த பிரபந்த பாசுரங்கள் அனைத்தும் ஆச்சார்ய பக்தியை மக்களிடம் விளைவிக்கும் வித்தாகவே அமையப் பெற்றது. அவர் ஆச்சார்ய பக்தியை நன்கு உணர்ந்தவர். ஆகையால் சட கோபன் திருவடிகளிலேயே நெடுங்காலம் தொண்டாற்றி அவருடைய அருளுக்கு இலக்கானவர். சடகோபன் செய்தருளிய உபகாரத்திற்கு, அவரை வாயார புகழ்ந்து, தனது உள்ளடக்கிய பக்திக்கு வடிகாலாக “கண்ணி நுண் சிறுத்தாம்பு” என்ற பிரபந்தத்தை அருளிச் செய்து, சட கோபனின் வைபவத்தை அனுபவித்துப் பேசுகிறார். பகவான் ஆராதிப் பதற்கு மிக எளியவன்தான் இருப்பினும் அவ்வெளியவனை ஆராதிக்க இழிந்த மாறன் சடகோபனுக்கு 1200 பாசுரங்கள் தேவைப்பட்டதாம்! ஆனால் சடகோபனை ஆராதிக்க தனக்கு பத்தே பாசுரங்களே போது மானதாக இருந்ததாம்! எவ்வளவு நயம்பட பேசியுள்ளார்.

வேதங்களை தமிழ் மறையாக அருளிச்செய்த சடகோபனை ஆச்சார் யாராகக் கொண்டு அவருடைய பிரபந்தங்களை உலகில் பரப்ப திருமாலினும் சிறந்தவர் திருமாறன் என்ற எண்ணமே வலுப்பெற்ற வராகத் திகழந்த, மதுர கவிகளின் மாண்பு போற்றுதற்குரியது, என்பதை வெளிப்படுத்தவே, எம் பெருமானே, மதுரகவிகளை திசை திருப்பியிருக்க கூடுமே!

கருங்கல்லைத் துளைத்துக் குழியாக்கி அதில் நீரை தேக்குவது போல, மிக மந்தமான தனது நெஞ்சில் வேதாந்த விழுப் பொருள் களனைத்தும் நன்கு தேங்கும்படி, அமைத்து கொடுக்கும் ஒரு சிறந்த ஆச்சார்யாரின் திருவடி தொழுது, உய்ய அவா கொண்ட மதுரகவிகளை திசை திருப்பியது எவ்வளவு பொருத்தம்.

“உற்றேன் உகந்து பணி செய்து உனது பாதம் பெற்றேன்”, என்று சொல்லும்படியான நிலையப் பெறுவதற்கு நெடு நாட்கள் ஆயிற்றாம் சட கோபருக்கு, ஆனால் மதுரகவிகளுக்கோ, மாறனின் திருவடிகளை உபாய மாக பற்றிய கணத்திலேயே, தேவுமற்றறியேன் என்று சொல்லுமளவிற்கு, உள்ளம் தெளிவு பெற்று விளங்கினாராம்.

மதுரகவிகள், தாம் உபதேசம் பெற்ற திவ்விய பிரபந்தங்களை, பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயாணம் செய்து கொண்டு, “தேவு

மற்றறியேன்" என்று திருக்குறுங்குடி நம்பியான சடகோபனின் கழல் களைப் பற்றி, பகவத் பக்தியிலும், பாகவதபிரதி பக்தியே பரமாநுஷ்டான மாகக் கொண்டு, கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பிரபந்தத்தைப் பாடி உபகரித்தது மட்டுமல்லாமல், மாறனின் திருவாய்மொழி, வேதத்திற்கு சமம் என்ற ஒப்புதலை திருவரங்கம் அரங்கனிடமிருந்தே பெறுவதற்குத் துணையாயிருந்தவர், ஆச்சார்ய பக்தி சிரேஷ்டரான மதுரகவிகள்.

மதுரகவிகள் ஆச்சார்ய பக்தி விசேஷமாக அருளிச்செய்யப்பட்டது "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பிரபந்தம். பகவத் பக்தி பிரேமை யினால், பகவத் பரமாக அருளிச் செய்யப்பட்ட திவ்ய பிரபந்த பாசுரங் களோடு, ஆச்சார்ய துதிபாடும் பாசுரங்களையும் இணைக்கக் கூடுமோ? என்று ஐயம் கொண்டவர்களுக்கு வைணவ ஆச்சார்யரான "ஸ்ரீமணவாள மாமுனிகள்" கூறும் சமாதானம்,

*"வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல் சீர்த்த*
*மதுரக்கவி செய்கலையை ஆர்த்த புகழ் ஆரியர்கள்*
*தாங்களருளிச் செயல் நடுவே சேர்வித்தார் தாற்பர்யம் தேர்ந்து".*

என்று உபதேச ரத்தினமாலையில் கூறுகிறார்.

இதன் பொருள் :

*சேஷீத்வத்தின் உயர்வை ஓம்காரத்தின் நடு எழுத்து உணர்த்து வது போல, நற்முத்துக்களாலான ஒரு மாலையில், சுடர் விடும் ஒரு இரத்தினக் கல்லையும் சேர்ந்து மாலையாக்கினால், முத்துக் களின் சிறப்பு அதியற்புதமாக சுடர்விட்டு பிரகாசிக்குமல்லவா? அது போல பகவத் பரங்களால் தொடுத்த பாசுரங்களின் நடு வில், ஆச்சார்யபரமாக தொடுத்த ஒரு பிரபந்தம், பிரபந்தங்க ளின் சோபையை நன்கு பிரகாசிக்க செய்யுமல்லவா?*

சடகோபன் பகவத் பக்தி என்ற மேற்படியில் நின்றவர். மதுரகவி களோ பாகவத பக்தி என்ற அடிப்படியில் நின்றவர்.

அடியார்களுக்காகவே அவதரிக்கும் சுலபனான சரண்யனை விடுத்து, மறை தமிழ் செய்த, மாறன் சடகோபன் திருவடிகளையே பற்றி உள்ளம் தெளிந்த மதுரகவிகள் விளங்க காட்டி அருளிய வழியான, ஒரு நல்லாச்சார்யாரின் தொடர்பினால் பெற்ற வழியான, பாகவத நிஷ்டைக்கு மேற்பட்டதொன்று கிடையாது. அதுவே தொல்வழியான நல்வழி, என்று பொருள்படும் ஒரு பாசுரத்தில் "கவிதார்கிக சிம்மம்" என்ற விருது பெற்ற வைணவ ஆச்சார்யாரான ஸ்ரீநிகமாந்த மகாதேசிகன் "அதிகார சங்கிர கம்" என்று தொகுப்பில் கூறியுள்ளார். "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற

பிரபந்த பாசுரங்களின் பொருளையும் உள்ளடக்கிய ஸ்ரீவேதாந்த தேசிகரது பாசுரம்.

> *"இன்பத்தில் இறைஞ்சுதலில் இசையும் பேற்றில் இகழாத*
> *பல்லுறவில் இராக மாற்றில் தன்பற்றில் வினை விலக்கில் தக*
> *வோக்கத்தில் தத்துவத்தை உணர்த்துதலில் தன்மையாக்கில்*
> *அன்பர்க்கே அவதரிக்கும் மாயன் நிற்க அருமறைகள் தமிழ்*
> *செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி தோன்றக்*
> *காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே".*

ஆக தொல்வழியே நல்வழியாகும், என்பதை மதுரகவிகளின் துணிவும் ஆகும்.

கம்பர் பெருமானும் சடகோபரின் அருமை பெருமைகளை நன்கு ணர்ந்து "சடகோபரந்தாதி" இயற்றுவதற்கு மதுரகவிகளின் பிரபந்தத்தையே வழிகாட்டியாகக் கொண்டாராம் என்று "பிரபன்ன சாரம்" கூறுகிறது.

அது! மன்றே புகழந்திருவழந்தூர் வள்ளல் மாறனை முன் சென்றே மதுரகவிப் பெருமாள் தென் தமிழ் தொடையில் ஒன்றே பதிகமுறையேத் தான் பொன்னடியுற்று நின்றான் என்றே பதிகம் பதிகமாக இசைத் தனனே".



# இயல் 12

# அருமறை தமிழ் செய்தான்

அருமறை தமிழ் செய்தான் மாறன் என்றால் வேதத்தை தமிழில் மொழி பெயர்ப்பு செய்தாரா?; வேதமந்திரங்களை பொருள் மாறாமல் தமிழில் ஆக்கித் தந்தாரா? வேதத்தில் கூறப்பட்ட முக்கிய பகுதிகளின் பொருளுக்கு தக்கவாறு, தமிழில் பாசுரங்களாக தொகுத்தளித்தாரா? வேதத்தின் இரு பிரிவுகளிலும் (கர்மகாண்டம், ஞானகாண்டம்) வெவ்வேறு முறைகளில் சொல்லியிருப்பது போல, தமிழ் பிரபந்தங்களிலும், தனித் தனி முறைகள் கையாளப்பட்டனவா?, என்றெல்லாம், பல ஐயப்பாடுகள் தோன்றுவது இயல்பு. "அருமறை தமிழ் செய்தான்" என்பதற்கு வேதங் களில் கூறப்பட்டுள்ள முக்கிய சுருதிகளில் பொதிந்துள்ள, ஆழ்ந்த கருத் துக்களைத் தொகுத்து, பாசுரங்களாக, ஐயத்திற்கிடமில்லாமல், தமிழில் வழங்கியுள்ளார், என்பதே தேர்ந்த பொருளாகும்.

வேத மந்திரங்களுக்கு ஏற்ற வகையில் பொருள்படும்படி, எவ்வாறு மாறன் பாசுரங்களிட்டருளினார், என்பதனை, ஒன்று இரண்டு உதாரணங்களை கொண்டு பார்ப்போம்.

(1) வேதம் (புருஷசூக்தம்)

எல்லாவற்றிலும் (சேதன - அசேதனம்) உள்ளும் புறமும் வியாபித்திருப்பவன் ஸ்ரீமந் நாராயணனே, என்று பொருள்படும் மந்திரம்.

*"அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய*
*நாராயண: ஸ்தித"*

இதை விளக்கும் திருவாய் மொழி பாசுரம் : (1–1–10)

*"கரந்தசிவிமந் தொறும் இடந்திகழ்*
*பொருடொறும் கரந்தெங்கும் பரந்துளன்"*

(2) வேத மந்திரம்

ஸ்ரீமந் நாராயணன் பிரும்மாவுக்கும், சிவனுக்கும், இந்திரனுக்கும் கர்மவச்யனார் மட்டுமல்லாது, அந்தர்யாமியாகவும் உளன் என்று பொருள்படும் மந்திரம்.

*ஸபிரஹ்மா ஸசிவ ஸேந்திர:*
*ஸோக்ஷர: பரம் ஸ்வராட்*

இதை விளக்கும் திருவாய்மொழி பாசுரம் :

..... ...... ........ .......
*அவனே அவனும் அவனும் அவனும்* (9–3–1)

இவ்வகையில் உபநிஷத் மந்திரங்களனைத்துக்கும் பொருளாகும்படி அமைந்தது திருவாய் மொழி

வேதங்களுல் கூறப்பட்டுள்ள சுருதிகள், சில அபேதமாகவும் அதாவது வேறுபாடு அற்றவனவாகவும் மற்றும் சில பேதமாகவும் அதாவது வேறுபாடு உள்ளவனவாகவும் இன்னும் சில பேதத்தையும் அபேதத்தையும் பொருத்துவனவாகவும் அமைந்துள்ளன!

உதாரணமாக, "நீயே அந்த பிரும்மம்"; "நானே பிரும்மம்"; "சீவ பிரும்ம பேதமில்லை", என்றெல்லாம் பொருள்பட கூறப்பட்டுள்ளது. அபேத சுருதிகளாகும்.

"எல்லாம் அவனிடமிருந்தே தோன்றி அவனாலேயே நிலைப்பெற்று, பிறகு அவனிடமே ஒடுங்குகின்றன"; "சேதன அசேதனங்களிலிருந்து வேறுபட்டவன் அவன்; அவன் ஏவுபவன், சீவர்கள் ஏவப்படுபவர்கள்; என்றெல்லாம் பொருள்படும்படி கூறியுள்ளது பேதமாகக் கூறப்பட்டவைகள்!

உடலைக் குறிப்பிடும் சொல் ஆன்மா வரை செல்லும் இயல்பு கொண்டது. எப்படியெனில் சீதை அழகி என்ற சொற்றொடரில், அழகி என்ற சொல் சீதையின் உடலை குறிப்பிடுவது மட்டுமல்லாமல், சீதை என்று உணரப்பட்ட ஆன்மாவையும் குறிப்பிடும். மேலும் தொடர்ந்து, ஆன்மாவைத் தாங்கி நிற்கும் ஆன்மாவான பரமாத்மாவையும் குறிப்பிடும். இதனால் அறியப்பெறுவது; சீதை என்று உடலை குறிப்பது, சீதை என்று ஆன்மாவைக் குறிப்பது, சீதை என்றே ஆன்மாவுக்கும் ஆன்மாவை குறிப்பிடும் வகையில், மூன்று பொருள்களின் தொடர்பு, பேதம், அபேதம் ஆகிய இரண்டினையும் இணைக்கும் பாலமாக அமைந்துள்ளது. அவ்வகையில் பொருள் கொள்வதே கடக சுருதிகள் அதாவது பொருத்தப்படும் சுருதிகள் என்ற நிலையில், மாறன் மறைப்பொருளை நன்கு பொருத்தப்பட்டவகையிலேயே (விசிஷ்டாத்வைத சித்தாந்திற்கேற்ப) தமிழில் அளித்துள்ளார்.

இதனால் தமிழில் மறைகளை ஈன்ற முதல் தாய், என்று மாறன் சடகோபனை சிறப்புற்றுப் பேசி போற்றுகிறது வைணவ உலகம்.

மாறன்பால் வற்றாத பக்திக்காதல் கொண்ட மதுரகவிகளின் வினாக்களுக்கு, தனது மோனவாய் திறந்து பதிலளித்த பிறகு, சடகோபர் மதுரகவிகளை நோக்கி, "சித்திரையில் வந்துதித்த சித்திரையோனே, எம்பெருமானின் நான்கு ரூபங்களான பரம் வியூகம் விபவம் அந்தர்யாமி என்பவைககளுக்கு முறையே வேதம், பாஞ்சராத்ரம், இதிகாசம் ஸ்முருதி ஆகியவை தோத்திரங்களாகின்றன. கல், கட்டை, உலோகம், ஆகியவைகளிலான சிலா வடிவமான அர்ச்சையில், வேதார்த்தங்கள் பொதிந்த தமிழ் மறையும் தோத்திரமாகின்றது. கலியுகத்தில் எட்டெழுத்து திருமந்திரமும், திவ்ய பிரபந்தமும் பகவானின் திருவுள்ளத்திற்கு ப்ரீதியான அனுகூலங்களாகின்றது. நான் மறைகளுக்குட்பட்டவைகளை, நான்கு பிரபந்தங்

களாக, எனது வாய் மொழியாக தாங்கள் செவிமடுத்து, பட்டோலை கொண்டு, மக்கள் உய்ய பிரகாசப்படுத்துவீராக என்று கூறி, உபதேசிக் கலானார்.

அவ்வகையில் உபதேசிக்கப்பட்ட அருளிச் செயல்கள் நான்காகும். அவைகளுள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய மூன்று பிரபந்தங்களும் "இயற்பா" என்ற வகையிலும், நான்காவதான திருவாய் மொழியை பிரபந்தம் என்ற வகையில் பண்ணிசைத்த பண்ணார் பாடல்களாகவும் அருளிச் செய்யப்பட்டவைகள்.

முதலாவதான திருவிருத்தம் ருக்வேதத்தின் சாரமாக நூறு பாசுரங் கள் கொண்டது. இரண்டாவதான திருவாசிரியம் யஜுர் வேதத்தின் சார மாக ஏழு பாசுரங்கள் கொண்டது. மூன்றாவதான பெரிய திருவந்தாதி அதர்வண வேதத்தின் சாரமாக எண்பத்தி ஏழு பாசுரங்கள் கொண்டது. இவை மூன்றும் "இயற்பா" என்ற தலைப்பில் அடங்கியவை. நான்காவ தான திருவாய்மொழி சாம வேதத்தின் சாரமாக, பிரபந்தங்கள் என்ற தலைப்பில் அடங்கும்.

*"இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே பண்ணார்பாடல்*
*பண்புரையிசை கொள் வேதம் போல",*

என்ற ஆச்சார்ய ஹிருதயம் சூர்ணிகை (50) கூறுவது இங்கே நினைக் கிற்பாலது.

மேலும் வேதங்களான தமிழ் மறை சடகோபனின் வாய் மொழியாக பாசுரங்களாக வெளிப்பட்டமையால் முன்னம் முன்னம் ஆலயங்களில் சேவிப்பதற்கு (ஓதுவதற்கு) உள்ள பெருமையை தமிழ் மொழி எய்தியது. அப்படிக் கூறியவர் ஸ்ரீவைணவ ஆச்சார்யாரான ஸ்ரீவேதாந்த தேசிகன்.

மாறனின் அருளிச் செயல்களுள் முதல் பாசுரத்தில் "பொய்" என்ற சொல்லில் தொடங்கி இறுதி பாசுரத்தில் "உயர்ந்ததே" என்ற சொல்லால் முடித்ததை ஆராயப்புகின், அழியும் இவ்வுலக வாழ்க்கையான ஜீவனத்தை நல்ல வகையில் பயன்படுத்தி வாழ்ந்தால், நிரந்தரமான உயர்வாழ்வான உஜ்ஜீவனத்தை அடையப் பெறும் வல்லமை கொண்டது, திவ்ய பிரபந்த மான திரமிடவேதம் என்பது தேறும்.

சடகோபன் அருளிச் செய்த முதல் அருளிச்செயல் "திருவிருத்தம்" ஆகும். செய்தி என்றும், விருத்தாந்தம் என்றும் பொருள் கொண்ட "வ்ருத்தம்" என்ற வடமொழிச் சொல்லின் திரிபே விருத்தமாகும், அருளிச் செயலின் உயர்வை காட்டும் வகையில் "திரு" என்று அடைமொழியிட்டு திருவிருத்தம் என பெயர் கொண்டது.

பிரகிருதி தொடர்பு கொண்ட இவ்வுலகில் சீவர்களின் வாழ்க்கை, துன்பங்கள் நிறைந்ததாகவே, இருக்குமாதலால், உறுதிப் பொருள்களுள்

இறுதியான வீடு என்ற பேற்றை பெறுவதற்குரிய வழிகளை அருளுமாறு பகவானிடம் விடுக்கும் வேண்டுகோளான விண்ணப்பமே இதில் பேசப் படுகிறது.

இரண்டாவதாக அருளிச் செய்தது திருவாசிரயமாகும். முதல் அருளிச் செயலான திருவிருத்தத்தில் உலக வாழ்வுக்கு காரணமான, வினைகளின் கட்டுக்களை ஒழித்து, வீடு பெறும் வழியை அருளிச் செய்யும்படி வேண்டி விண்ணப்பித்தார். மறையை, தமிழில் வழங்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காகவே, மாறனின் பிறப்பு உண்டாயிற்று. அவர் விண்ணப் பித்தபடி மாறனுக்கு வீடு அளிக்க பகவான் திருவுள்ளம் பற்றினால், மாற னது பிறப்பு அர்த்தமற்றதாகி விடும். எனவே திருநாட்டில் பெறக்கூடிய அனுபவத்தையெல்லாம் மாறனுக்கு பிராகிருத உலகிலேயே வழங்கி, அவ ரது பணி தொடரும்படி செய்தால், அந்த அனுபவம் எப்படி இருக்கும் என்று பேசுகிறார், இரண்டாவது அருளிச் செயலில், ஆசிரியப்பாக்கள் என்ற வகையில் அமைந்து ஏழு பாசுரங்களை கொண்டது. திருவாசிரியம்.

மாறன் வெளியிட்ட மூன்றாவது பிரபந்தம் “பெரிய திருவந்தாதி யாகும்”. இது வெண்பாவினால் அமையப் பெற்றது. சடகோபன் தான் பெற்ற பகவத்தனுபவத்தில் ஆசை மேலும் மேலும் வளர்ந்து அவ்வனுபவமே என்றென்றும் நீடித்து நிற்க எதிர்பார்த்து வெளியிட்டவைகளே இதில் அடங்கியவைகள்; தனது உள்ளத்தை பகவத்தனுபவத்திற்கு ஒத்துழைக் கும்படி, அமையப் பெற்ற, எண்பத்தேழு பாசுரங்களாகும்.

நான்காவது பிரபந்தமான திருவாய்மொழி இறுதியாக அருளிச் செய்யப்பட்டது. மாறன் சடகோபனுக்கு பகவத் விஷயத்தில் ருசியைத் தோற்றுவித்து, அந்த ருசி முறையாக பரபக்தி, பிரஜ்ஞானபக்தி, பரமபக்தி என்று பக்குவமாக வளர்ந்து, இறுதியில் பகவத் பிராப்தி பெற்றதை அறி விக்கும் வகையில் அமைந்தது. மேலும் ஐம்பொருள்கள் எனப்படும். அர்த்த பஞ்சகமான அடைபவன் (சீவன்) அடையப்படும் பொருள் (பரம் பொருள்), அடைவதற்குண்டான வழிகள், அடைவதில் உண்டாகும் தடை கள், அடைகின்ற பலன் ஆகியவைகள் விளக்கப்பட்டுள்ளது. திருவாய் மொழி பண்ணையும் இசையையும் கொண்டதால் சாம வேத சார்பு கொண்டது என்று ஆன்றோர்கள் கூறுவர்.

இதனால் இது பண்ணார் பாடல் என்றும் அறியப்படுகிறது.

மாறன் ஒவ்வொரு பிரபந்தமாக அருளிச் செய்த போழ்தில், அவரது மனோநிலை இராம காவியப் பாத்திரமான பரதனின் மனோ நிலைக்கு ஒப்பாக இருந்தது என்று ஆன்றோர் பணித்துள்ளர். அங்ஙனம் ஒப்பு நோக்கப்பட்ட நிலைகளை காண்போம்.

ஸ்ரீ இராமன் வனவாசத்திற்குப் புறப்பட்டுச் சென்ற சில தினங்கள் கழித்தே, பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு திரும்புகிறான்.

அவனை வரவேற்ற தாய் கைகேயி, "ஹே ராஜன்", என்றழைத்தாளாம். அச்சொற்களை செவிமடுத்த கணத்திலேயே பரதன் எவ்வாறு திகைப் புற்றானோ, அதே திகைப்பு திருவிருத்தம், அருளிச் செய்யும்போது ஆழ் வாருக்கு உண்டாயிற்றாம்.

பிறகு பரதன் துக்கம் தாளாமல், ஸ்ரீ இராமனை மீண்டும் அயோத் திக்கே அழைத்து வர, பிரதானிகளோடு சித்ர கூடஞ் சென்றான். அப் பொழுது பரதனின் உள்ளத்தில் எண்ணங்களின் அலைமோதல் எவ்வாறு இருந்தனவோ, அதே போல இருந்ததாம், சடகோபனுக்கு, திருவாசிரியம், அருளிச் செய்த போதில்.

ஸ்ரீ இராமன் அயோத்திக்கு திரும்ப இயலாது என்று கூறியதும், அவரது பாதுகைகளைப் பெற்றுக் கொண்டு நந்திக் கிராமத்தில் மரவுரி உடுத்தி, தரையில் கிடந்து, பதினான்கு ஆண்டுகள் எப்பொழுது கழிந்து ஸ்ரீ இராமனைக் காண்போம் என்ற ஆசையை வளர்த்துக் கொண்ட எதிர் பார்ப்பின் சாயலே, சடகோபனுக்கு பெரிய திருவந்தாதி அருளிச் செய்த போது உண்டாயிற்றாம்!

இராவண வதம் முடிந்து, ஸ்ரீ இராமன் அயோத்திக்கு திரும்பி, பட்டா பிஷேகம் கண்டருளிய போது பரதனின் முகம் மலர்ந்து, ஸ்ரீ இராமனின் பக்கலில் இருக்கும் நிலை, திருவாய் மொழி அருளிச் செய்த போது மாறன் சடகோபனுக்கு உண்டாயிற்றாம்.

இவ்வகையில் பரதனோடு மாறனின் நிலைய ஒப்பு நோக்கி பேசுவது 'ஈடு வியாக்யானம்'.

நூறு பதிகங்கள் கொண்டது திருவாய்மொழி. மொழி என்றாலே வாய்வழி வருபவைகள்தானே ? அப்படியிருக்க இப்பிரபந்தத்தை மட்டும் வாய்மொழி என்று கூறக் காரணமென்ன ? என்பதை நோக்குவோம்.

உலகில் ஆக்கையால் கட்டுண்ட உயிர்களின் பொய் நின்ற ஞானம் அழிந்து, தெள்ளிய ஞானம் உண்டவதற்கேற்ப வாய்த்த மொழியானதால் திருவாய் மொழியாயிற்று! கலியுகத்தில் இகலோக பலன்களைப் பெறு வதே குறிக்கோளாகக் கொண்டு செயல்படும் சீவர்களுக்கு உறுதிப் பொருளான மேல்வீடு பெற வாய்த்த வாய்மை மொழி என்பதினால் திரு வாய் மொழியாயிற்று. உயர்ந்த நிலையான பரத்தில், பகவானை அனு பவிக்கப்படும் நிலை பேசப்படுவதால், திருவாய் மொழியாயிற்று. பகவத் விஷயம் என்ற உயர்ந்த நோக்கங் கொண்ட பாசுரங்களை அருளிச் செய்வதற்காகவே, வாய் என்ற அங்கம் பயனுற்றதால் திருவாய் மொழி யாயிற்று. பதினாறு கலைகள் நிரம்பி சந்திரன் பிரகாசிப்பது போல, பதி னாறு திருநக்ஷத்திரங்கள் நிரம்பி மாறனின் மோனவாய் முன்னம் முன்னம் திறந்து வெளியிட்ட மொழியானதால் திருவாய் மொழியாயிற்று. ஆழ்வார்

ளனைவரும் அருளிச் செய்த பிரபந்தங்களான திவ்ய பிரபந்தத்தின் வாய்மையே சாரமாக அமையப் பெற்றதினால் திருவாய் மொழியாயிற்று.

மறையை தமிழ் செய்து, தங்கு தடையின்றி, இயற்பாவில் அடங்கிய முதல் மூன்று பிரபந்தங்களையும் மாறன் அருளிச் செய்ய செய்ய மதுர கவிகள், வேதத்தின் உட்பொருளை தன் நெஞ்சில் நிறுத்தி பட்டோலை கொண்டார்.

பகவானின் அனந்த கல்யாண குணங்களையும், ஐம்பொருளான அர்த்த பஞ்சகத்தையும் உள்ளடக்கிய திருவாய் மொழியை அருளிச் செய்து கொண்டு வரும் போது பகவானின் நீர்மையை (சௌலப்யம்) நினைக்குங்கால், திருவாய் மொழி பாசுரங்களை மேலே தொடுத்துச் செல்ல முடியாதபடி ஒரு விசித்திரமான அனுபவத்திற்கு உள்பட்டார் மாறன் சடகோபன். பகவானின் மேன்மையை (பரத்துவம்) எவ்வளவு காலம் வேண்டுமானாலும் பேச முடியும்! ஆனால் நீர்மையான எளிமையை அப்படி பேசுவது சுலபமல்ல! அவ்வகையில் பாசுரங்கள் தடைப்பட்ட பொழுது ஆறு ஆறு மாதங்கள் மூன்று முறை மோஹித்துக் கிடந்து, பிறகு தொடர்ந்தார் என்று கூறப்படுகிறது.

அந்த அனுபவத்தைக் காண்போம்.

ஈரேழு லோகங்களுக்கும் அதிபதியான ஸ்ரீமந் நாராயணன், அவதாரங்கள் எடுத்த விபவ தசையில் தாழ இறங்கி, தனது நிலையை வெளிப்படுத்தியது பகவானின் நீர்மைக்கு சான்றாகும். இருப்பினும் கிருஷ்ணனாக அவதரித்த காலத்தில், ஆயர் குலத்தில் வளர்ந்து, தனது மேன்மைக்கு ஒப்ப நடந்து கொள்ளாமல், வெண்ணெய் திருடியும், தாம்பினால் கட்டுண்டும், தூது நடந்தும், பலரின் ஏச்சு பேச்சிற்கு ஆளாகியும் இப்படியும் ஒரு எளிமையா? என்று பாசுரத்தை தொடங்கினாராம் சடகோபன்! அது.

*"பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய*
*வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும் பெறவடிகள்*
*மத்துறுகடை வெண்ணெய் களவினில் உரலிடையாப்புண்டு*
*எத்திறம் .................................................................................. (1.3.1).*

என்று அருளிச் செய்து அதற்கு மேல் தொடர முடியாமல் எத்திறம், எத்திறம், எத்திறம் என்று ஆறுமாதங்கள் மோஹித்திருந்தாராம்!

பிறகு தெளிந்து, "எத்திறம் உரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவே", என்று நான்காவது அடியை முடித்தாராம்!

அடுத்து, அதை தொடர்ந்து பாசுரங்களை அருளிச் செய்து கொண்டே சென்ற பொழுது, பகவானுடன் தாம் சேர்ந்தனுபவிக்கும் நிலையை எப்பொழுது அளிக்கப் போகிறார் என்ற எண்ணம் மேலோங்கிய தாம். உலகில் சீவர்கள் தங்களது வினைப்பயன்களால் உடலெடுத்து பிறப்

பது இயற்கை. ஆனால் அவனது கிருபாவாசியனாக தானும் கருக்குழியில் கிடந்து பிறந்தது என்னே! வளர்ந்தது என்னெ! என்று நினைக்குங்கால் "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்", பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என்று உருப்போட்டு உருப்போட்டு மேலே சொல் எடுக்க முடியாமல், ஆறுமாதங் கள் மோஹித்திருந்தாராம்! ஆறுமாதம் கழித்து உள்ளம் தெளிவுற்றதும்

*"பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கை செய்து*
*ஐவர்க்குத் திறங்கள் காட்டியிட்டுச் செய்து போன மாயங்களும்*
*நிறந்த நூடுபுக்கென தாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற*
*இச் சிறந்த வான் சுடரே! உன்னை யென்றுகொல் சேர்வதுவே?"*
*(5.10.1)*

என்று பாசுரத்தை முடித்தாராம்.

திருவாய் மொழியில் 23 வது பாசுரத்தை அருளிச் செய்த போது ஒரு முறை மோஹித்தும், 520 வது பாசுரம் தொடுக்கும் போது, மீண்டும் மோஹித்தும், மூன்றாவது முறையாக 827 வது பாசுரம் அருளிச் செய்த போது மோஹித்தாராம்!

பகவானையே உபாயமாகவும் உபயேமாகவும் பற்றுவது, வைணவம் காட்டும் நெறி. அதற்கேற்ப பகவான் ஆருயிர் ஏற்றத்தையும் சௌந்தர் யத்தையும் காட்டக் கண்டு, ஆனந்தம் பொங்க அனுபவித்து அருளிச் செய்த பாசுரம்!

*"கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ்சிவந்து கனிந்து*
*உள்ளே வெண் பல்லிலகு சுடரிலகு விலகு மகரகுண்டலத்தான்*
*கொண்டல்*
*வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனி சார்ங்கன்*
*ஒண்சங் கதை வாளாழியானொருவன் அடியேனுள்ளானனே"*
*(8.8.1)*

"அடியேனுள்ளானனே" என்று ஆறுமாததம் மோஹித்துக் கிடந்து, பிறகு தெளிவு பெற்று தொடர்ந்தாராம்! (8.8.1)

இவ்விதமாக நான்கு வேதங்களின் சாரத்தை, மதுர தமிழ் மொழியில் மறையாக, சீடர் மதுரகவிகளுக்கு உபதேசத்தருளினார். தமிழ் மறையின் முதல் தாயாக திகழ்கின்ற நம்மாழ்வாரான மாறன் சடகோபன்.

'நமது' என்று பொருள்படும் "நம்" என்ற அடைமொழியிட்டு "நம்மாழ் வார்" என்று அழைத்தது, பாரதத்தின் பிரபலமான இன்னும் சீறும் சிறப் புமாக விளங்கிவரும் ஒரு வைணவ மடமான பிரசித்த பெற்ற அகோபில மடத்தின் முதல் பீடத்தில் மூர்த்தாபிஷேராக எழுந்தருளியிருந்த ஒன்றா வது பட்ட யதீந்தரராகும்.

(இதன் விரிவு 26 வது இயலில் காண்க)

அருமறை தமிழ் செய்த மாறன் சடகோபனுக்கு இதைப் போல பல காரணப் பெயர்களுண்டு அவைகளுள் சில:

1. சடகோபர்
2. மாறன்
3. நம்மாழ்வார்
4. பராங்குசன்
5. வகுளாபரணர்
6. குருகைபிரான்
7. காரிமாறன்
8. திருவழுதிவளநாடன்
9. திருநாவீறன்
10. வேதம் தமிழ் செய்த பெருமாள்
11. திருவாய் மொழிப் பிரான்
12. வகுளபூஷணபாஸ்கரன்
13. ஞானதேசிகர்
14. ஞானபிரான்
15. தென்னரங்கன் பொன்னடி
16. பொருநற்துறைவர்
17. நங்கை சிறுமுனி
18. நாவீறர்
19. பிரபந்தஜனகூடஸ்தர்
20. உதய பாஸ்கர்
21. மறைப்பிரான்
22. சடகோபமஹரிஷீ
23. திருக்குருகை நம்பி
24. ஆழ்வார் சடாரி
25. குலபதி.

இனி நாம் மாறன் சடகோபனை "ஆழ்வார்" என்றே வழங்கு வோம்!

எய்தற்கரிய மறைகளை ஆயிர மின் தமிழால் செய்த சடகோபனை யும், அவரது அருளிச் செயல்களையும் போற்றி புகழ்மாலை சூட்டியவர் கள் பல அறிஞர்கள், அவர்களை பின்பு காண்போம்.



# இயல் 13

# அருளிச் செயல்கள்

திவ்ய பிரபந்தம் அருளிய திருமால் திருவடிச் செல்வர்கள், ஆழ்வார்கள் எனப்படுபவர்கள். ஆழ்வார்கள் பந்நிருவர் (12). அரங்கனை மணந்து கொண்ட ஆண்டாளையும், மாறனைத் தவிர வேறு தெய்வம் அறியாத மதுரகவிகளையும் தவிர்த்து பதின்மர் (10) என்றும் பெரியோர் பணிப்பர். இவர்கள் ஞான பக்தி விரக்திகளை எளிதில் பெற்று, மக்களில் சிலருக்குத் தகாது என மறுக்கப்படுகிற வேதம் போலல்லாது, வேதாந்த இரகசியார்த் தங்களை இனிய தமிழில் அனைவருக்கும் பயன்படும்படி, சொல் மாலைகளாக தொடுத்தருளி, தங்களது அனுபவத்தைப் பிறர்க்கு உணர்த்தி உலகை வாழ்வித்தவர்கள் ஆழ்வார்கள்.

ஆழ்வார்கள் பந்நிருவர் (12) என்று குறிப்பிடும் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி செய்யுள்,

> *“பொய்கை பூதன் பேயார் பொன் மழிசைக்கோன் மாறன்*
> *செய்ய மதுரகவி சேரர்பிரான் வையகமெண் பட்டர் பிரான்*
> *கோதை தொண்டர் பாதப்பொடிபாணன் கட்டவிழ்தார்*
> *வாட்கலியன் காப்பு”.*

எம்பெருமானின் அனந்த கல்யாண குணங்களில் ஆழ்ந்து, அனுபவித்து பிரபந்தம் அருளிச் செய்தவர்கள் என்பதால் ஆழ்வார்களெனப்பட்டார்கள். மற்றவர்கள் தாங்கள் பெற்ற ஞானத்தால் அறிய இயலாத பொருட்செறிவுகளை ஆழ்ந்துணர்த்தும் பாசுரங்களை வழங்கியதாலும், ஆழ்வார்களெனப்பட்டார்கள். மறை என்ற ஆழ் கடலில் மூழ்கி ஆழங்கால் பட்டு, அடியில் மண்டியுள்ள கருத்துக்களான முத்துக்களை வாரிக் கொணர்ந்து, பிரபந்தங்களாக அளித்ததாலும் ஆழ்வார்களெனப்பட்டார்கள்.

ஆழ்வார்கள் பதின்மர் என்றளவில், திருமாலின் மற்றொரு தசாவதாரம் என்னலாம்படியான, மேன்மையும் நாவீறும் கொண்ட ஆழ்வார்களுள் தலை சிறந்தவராகக் கருதப்பட்டவர் சடகோபனான நம்மாழ்வாராகும். எந்த அடை மொழியுமின்றி ஆழ்வார் என்று கூறினால் அது நம்மாழ்வாரையே குறிப்பிடும் அளவிற்கு புகழ் பெற்றவர். இதர ஆழ்வார்களை குறிப்பிடும் போது, அவர்களது பெயரோடு சேர்த்தே கூறுவது மரபு ! பல காரணங்களினால் நம்மாழ்வார் தலைவராகக் கருதப்படுவதால், அவர் அங்கியாகவும், மற்ற ஆழ்வார்கள் அங்கங்களாகவும் புகழ்ந்து பேசுகிறது வைணவம்.

பூதத்தாழ்வார் திருமுடியாகவும், பொய்கை, பேயாழ்வார்கள் திருக்கண்களாகவும், பெரியாழ்வார் திருமுகமாகவும், திருமழிசை ஆழ்வார் திருக்கழுத்தாகவும், குலசேகர திருப்பாணழ்வார்கள் திருக்கைகளாகவும்,

தொண்டரடிப் பொடியாழ்வார் திருமார்பாகவும், திருமங்கை ஆழ்வார் திருநாபியாகவும், மதுரகவிகள் திருவடியாகவும், நம்மாழ்வாருக்கு அங்கங் களாகின்றனர் என்று ஆன்றோர் பணித்தவை.

ஆழ்வார்கள் மிகச் சிறந்த ஞானத்தைப் பெற்றவர்கள் என்பது அவர் களின் அருளிச் செயல்களை ஆழ்ந்து நோக்கின் நன்கு விளங்கும். தலை வரான நம்மாழ்வாருக்கு, பகவானான உயர்வற உயர் நலம் உடையவன், மயர்வற மதிநலம் அருளிச் செய்தமையால், அவரது பிரபந்தங்கள் தனித் தன்மை பெற்று விளங்குகின்றன. ஆழ்வாரின் பிரபந்தங்களை சிறந்த இலக்கியங்கள் என்று மதுரை தமிழ் சங்கத்தார்களும் போற்றியுள்ளார்கள். மேலும் திருமங்கை ஆழ்வாரின் முயற்சியால், மதுரகவிகள், பண்ணார் பாடல்களை கைத்தாளம் கொண்டு, திருவரங்கத்து அரங்கன் முன்னிலை யில் இசைத்துப் பாடியவைகளை செவிமடுத்த அரங்கன், அப்பாசுரங்கள் வேதத்திற்கு ஒப்பானவைகள் என்று 'வேத சாம்யம்' வழங்கி சிறப்பித் தாராம்! இவ்வகையில் ஏற்றம் பெற்றதாலும் திவ்ய பிரபந்தம் தமிழ் மறை யாயிற்று! (இதன் விரிவு இயல் 20ல் காண்க)

நம்மாழ்வார் அருளிய பாசுரங்களும் இதர பிரபந்த பாசுரங்களும், வேதத்தின் கருப்பொருளை தன்னுள் கொண்ட தமிழ்மறை என்பதால், இலக்கியங்களுல் மிகவும் மேம்பட்டதாகக் கருதப்படுகிறது. இவைகளனைத்தையும் பொருளோடு அறிந்தால் வேதத்தை அறிந்ததற்கொப்பாகும் என்று ஆன்றோர் கூறுவர்.

ஆழ்வார் அருளிச் செய்த பாசுரங்களனைத்திற்கும் விளக்கமாக பொருள் கூறுவது இவ்வரலாற்றின் நோக்கமல்ல. இருப்பினும் சில பாசுரங் களை கண்ணோட்டமாகவும், விரித்தும் பொருள் கொண்டு காண்போம்.

ஆழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திரு வந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களும் 1296 பாசுரங் களை கொண்டது.

வைணவ ஆச்சார்யாரான வேதாந்த தேசிகன் ஒவ்வொரு ஆழ் வாரும் அருளிச் செய்த பாசுரங்களின் வகை தொகை முதலியவைகளை பிரபந்தசாரத்தில் தெளிய இயம்பியுள்ளார். அவைகளுள்

*"உண்மைமிகு மாறன் மறை யாயிரத்தோடுற்ற*
*விருதுன்றுத் தொண்ணுறு மாறும்"*

என்ற பகுதி இங்கே நினைவு கூர்வது பொருந்தும்.

அவைகளுள் ஆழ்வார் முதலில் 'அருளிச் செய்தது "திருவிருத்தம்" இப்பிரபந்தம் நூற்பயன் பாசுரத்தையும் சேர்த்து நூறு பாசுரங்கள் கொண்டது. பாசுரங்கள் அந்தாதி தொடையால் அமைந்தவை, ஒரு பாசு ரத்தின் இறுதிச் சொல் எழுத்து அசை, அடுத்த பாசுரத்தின் சொல் எழுத்து அசையாக தொடங்குவது அந்தாதி எனப்படும். (அந்தம் = இறுதி; ஆதி

= முதல்) இப்பிரபந்தம் திவ்ய பிரபந்தத்தின் இயற்பா என்ற பகுதியில் ஐந்தாவது இயலாக இடம் பெற்றுள்ளது ஒரு செய்தியை கூறுதல் அல்லது விண்ணப்பித்தல் என்பதற்கேற்ப அமையப் பெற்றதால் "விருத்தம்" என்றும், விண்ணப்பிக்கப்படுவது மிகச் சிறந்த பொருள் என்பதின் கார ணமாக "திரு" என்னும் அடைமொழியிட்டு "திருவிருத்தம்" ஆயிற்று.

உலகில் சீவர்களுக்கும், தமக்கும் எம்பெருமானையே அடைய வேண்டும் என்பதற்கு உறுதிப் பொருளான "வீடு" பெற தடங்கலாக இருப் பவைகளை அகற்றும்படி எம்பெருமானின் முன்னிலையிலேயே விண்ணப் பித்து வேண்டுகோள் விடுவது திருவிருத்தத்தில். இது ருக் வேத சாரமாக அமைந்தது. மேலும், பகவானை விட்டு பிரிந்திருப்பது என்ற பிரிவின் வேத னையை, ஆழ்வார் நாயகி பாவனையை ஏற்று, அதாவது தன்னை பிராட் டியாரின் இடத்தில் வைத்து விண்ணப்பிப்பதினால், பிராட்டியைக் குறிப் பிடும் "திரு" என்று அடைமொழியிட்டு திருவிருத்தம் ஆனது என்றும் பணிக்கப்படுகிறது.

இடையில் திருவிருத்தத்தில் முதலும், ஈற்றும் அடைவாக இடையில் உள்ள அனைத்து பாசுரங்களும், நாயகி நாயக பாவனையில் அருளிச் செய்யப்பட்டவைகள். தானானதன்மையில் அருளிச் செய்த இரண்டு பாசு ரங்களுள் முதல் பாசுரத்தை விரித்து பொருள் காண்போம்.

*"பொய் நின்ற ஞானமும் பொல்லாவொழுக் கழுக் குடம்பும்*
*இந்நின்ற நீர்மை இனி யாமுறாமை உயிரளிப்பான்*
*எந்நின்றயோனியுமாய் பிறந்தாய் இமையோர் தலைவா*
*மெய்நின்று கேட்டருள்வாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே"*

தகுந்த ஞானம் பெற்றிடாமல் தானே, வளர்த்துக் கொண்ட விபரீத ஞானத்தின் விளைவால், உலகில் பட்ட துயரங்கள் அனைத்தும் போக்கி நல்வழிப்படுத்துமாறு விண்ணப்பிப்பதே இப்பாசுரத்தின் பொழிப்புரை.

பொய் நின்ற ஞானம் என்று குறிப்பிட்டது, பொய்யைப் பற்றிய ஞானத் தையோ அல்லது ஞானமே பொய் என்பதனையோ குறிப்பிட கூறப்பட்ட தல்ல. பொய்யான ஞானமான விபரீத ஞானத்தைப் பற்றியது.

உடலையும் உயிரையும் (சரீரம் ஆன்மா) ஒன்றானது என்று எண்ணி செயல்படுவது விபரீத ஞானம். உடல் சடப்பொருள் (சடப்பொருள்களால் ஆனது) உடலிற்கு சொரூபத்தில் மாறுதல் உண்டு. (குழந்தை யுவன் வயோ திகன் ஆகிய மாறுதல்கள்) உயிர் சடப்பொருளல்ல. சொரூபத்தில் மாறு தலற்ற ஞானவடிவானது, ஞானத்தையே குணமாக (சுவாபம்) கொண்டது. எனினும் குணமான ஞானம் ஒடுக்கம் விரிவு என்ற மாறுதல்களுக்குட் பட்டது. அதாவது சுவாபத்தில் மாறுதல் கொண்டது.

வினைப் பயன்களைச் சார்ந்து, உயிர் உடலை ஏற்கிறது, உடலை ஏற்றபின், வினைப்பயன்களை அனுபவித்துக் கொண்டு வாழ்ந்த போதி

லும், அறவழி நடந்து எம்பெருமானின் திருவடிகளைப் பற்றுதர்குரிய உபாயங்களை ஏற்று வாழ்வதை இயல்பாக கொள்ள வேண்டும். இதை உணராது உயிரும், உடலும் ஒன்றே என்ற பிராந்தி ஞானத்தால் செயல் படின் அகச்செறுக்கும், ஆணவமும் மிகுந்து தனக்கு உரிமை இல்லாத வைகளை தனது என அபிமானிப்பதினால் உண்டாகும் மமகாரமும், ஒரு வனை அறவழி நடக்காது வாழும் இயல்பை தோற்றுவிக்கும். இவ்வகை யில் செயல்பட தூண்டும் ஞானமே விபரீத ஞானமாகும். இதை சீர்படுத் திக் கொள்ளாவிடில் உயிர் உடலை ஏற்பது விடுவது என்ற பிறப்பு இறப்பு வட்ட சுழலில் சிக்கி மீள முடியாமலே போய்விடும். அந்நிலையைத்தான் அதாவது விபரீத ஞானம் தெளிவு பெறாது நிற்பதை, "நின்ற" என்ற சொல்லமைத்து "பொய் நின்ற ஞானம்" என்று ஆழ்வார் பாசுரத்தை தொடங்குகிறார்.

இனி இதன் விளைவுகளை நோக்குவோம். பொய் நின்ற ஞானத்தின் விளைவு பொல்லா ஒழுக்கம். விபரீத ஞானத்திற்கேற்ப செயல்படும் போது, அது உடலிற்குரிய போகங்களையே தேடும். அதற்குச் சாதகமாக இழி வான சாதனங்களும், தூண்டுதல்களும் நிறையவே உள. காம, குரோத, லோப, மோஹ மத, மாச்சர்ய என்ற தீய உணர்வுகள், அறவழி செயல்படாது மனிதனை ஆட்கொண்டு, தீய குணங்களின் இருப்பிடமாக மாற்றும் ஆற்றல் பெற்றது என்ற நிலையில் பொல்லா ஒழுக்கம், என்று கூறுகிறார் ஆழ்வார்.

பொல்லா ஒழுக்கத்தால் விளைவது அழுக்குடம்பு. உடலை அகமும், புறமும் சுத்தமாகப் பேணி பாதுகாத்து, நோய் நொடி இல்லாது, வைத்துக் கொள்வதே, அறநெறி வாழ்க்கைக்கு தூண்டுகோலாகும். அவ்வகையில் வாழ்வது இறைப் பொருள் ஞானத்தை பெறுகச் செய்யும். அவ்வாறின்றி இருக்கும் நிலையையே, அழுக்கு உடம்பு என்று குறிப்பிட்டார் ஆழ்வார். இயற்கையிலேயே கண், காது, மூக்கு, அழுக்குகள், மலமுத்திராதி வியர்வை அழுக்குகள் ஆகிய அனைத்து அசுத்தங்களையும் கொண்டது உடல். இவை தவிர புலன்கள் வழி பெறப்படும். தீய குணங்கள் என்ற பெரும் அழுக்கும் சேர்ந்து சீவர்களை துன்பச் சுழலில் ஆழ்த்தி விடும். அதிலிருந்து மீளும் வழியைக் கடைப்பிடிக்க அருள் வழங்கும்படி விண்ணப்பிப்பதே பாசுரத்தின் நோக்கு.

முதலடியில் கூறப்பட்டவைகள் ஒன்றுக்கொன்று காரண காரியங்கள். பொய் நின்ற ஞானம் காரணம், பொல்லா ஒழுக்கம் கார்யம். பொல்லா ஒழுக்கம் காரணம், அழுக்குடம்பு கார்யம். அழுக்குடம்பு காரணம், துயர வாழ்க்கை கார்யம்.

அனாதிகாலமாக இப்படியே அல்லல்படும் சீவர்களின் நிலையை, "இந்நின்ற நீர்மை" என்று கூறி, மீண்டும் அதை பெறாதிருக்க "இனியா முறாமை" என்று வேண்டுகோள் விடுக்கின்றார். ஆழ்வாரின் வேண்டு

கோளினால், மக்களனைவரும் பயன் பெறுதல் வேண்டும் என்பதற்காக "யாம்" என்ற பன்மை இட்டு விண்ணப்பிக்கிறார்.

யாரிடம் விண்ணப்பிக்கிறார்? இமையோர் தலைவனான எம்பெருமானிடம் எப்படியெனில், பலவித யோனிகளில் பிறந்து (அவதாரம் செய்து) சேதனர்களை, முன்பு நீ காப்பாற்றினாயே என்று முன்பு நடந்தவைகளை நினைவூட்டி "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய் பிறந்தாய்" என்று பாசுரத்திலிட்டு விண்ணப்பஞ் செய்கிறார். மேலும் ஒரு நிபந்தனையையும் விதிக்கின்றாராம். அதாவது பகவான் திருமேனியுடன் நின்று திருச்செவி சாத்தி அருள்பாலிக்க வேண்டும் என்ற நிபந்தனையை "மெய் நின்று கேட்டருள்வாய்" என்று கூறி, இனி வரப் போகும் பாசுரங்களில் தான் விண்ணப்பிப்பதை, அவ்வகையிலேயே செவிசாய்த்தருள வேண்டும் என்பது பாசுரத்தின் செறிந்த பொருள்.

வேதத்தின் சாரமான ஐம்பொருளான அர்த்த பஞ்சகத்தை நினைவு கூர்ந்தால், அதாவது அடையப்படுவது எம்பெருமான்; அடைவது சீவன்; அடையும் வழி =தெளிந்த ஞானம் பெற்று பக்தியையோ, பிரபத்தியையோ கடைப்பிடித்தல்; அடைவதில் தடங்கல் பொய் நின்ற ஞானம்; அடையும் பயன் உறுதிப் பொருளான வீடு, என்பது இப்பாசுரத்தில் விளக்கப்பட்டவைகள். இனி வரும் பாசுரங்களில் இவைகளை விரித்து விண்ணப்பிப்பதே ஆழ்வாரின் நோக்கு.

இமையோர் தலைவர், என்ற சொல்லிட்டது. அயர்வறும் அமரர்களின் அதிபதியான ஸ்ரீமந் நாராயணனையே பரம் பொருளாக, ஐயத்திற்கிடமின்றி உறுதிப்படுத்துவதற்காக.

திருவிருத்தத்தில் முதல் பாசுரம், கடைப்பாசுரம் ஆகிய இரண்டும் நீங்கலாக, மற்றவை நாயகி நாயக பாவனையில் பாடப்பட்டதாகும் என்று முன்பே கூறப்பட்டது.

நாயகி - நாயக பாவனை எப்படி அமையப் பெறுகிறது என்று காண்போம்.

ஆழ்வாரின் ஞானம் மேலெழுந்த நிலையில், தானான தன்மையில் நின்று அருளிச் செய்பவைகள் "புறப்பொருள் துறை"ப் பாடலாகும். பகவானிடம் கொண்ட பக்தி என்ற காதலால் பிரேமை மேலெழுந்து நின்ற பொழுது, பெண் தன்மை வந்தேறி, அருளிச் செய்பவைகள் "அகப் பொருள் துறை" ப்பாடலாகும்.

இவ்வகையில், பெண் தன்மை ஏற்று அருளிச் செய்வதற்கு காரணமென்ன என்று ஆராயப் புகின், பெருமாள் மீது கொண்ட பக்தியே காதலாகக் கனியும் போது, பெண் தன்மை, தானாகவே வந்தடைகிறது. மேலும், உலகமும் அதனுள் அடங்கியனைத்தும், பகவானின் பேராண்மைக்கு முன் பெண் தன்மையாக இருப்பதாகவே கருதப்படுகிறது. வேதத்

தில் திருமால் புகழ் போற்றும் மந்திரம் "புருஷ சூக்தம்" என்று பொதுப் படையாக விளக்குவதிலிருந்தே, பகவான் ஒருவன் மட்டுமே பேராண்மை கொண்ட புருஷர் என்பதை உறுதிப்படுத்துகிறதல்லவா? எட்டெழுத்து மந்திரமான ஒம் நம: நாராயணாய பகவானுக்கும் சீவனுக்கும் உள்ள ஒன்பது வித உறவுகளை விரித்துக் காட்டும் வகையில் அமைந்தது. ஒன்பது வகை உறவுகளில் நாயக நாயகி (பர்த்ரு - பார்யா) உறவே, அகப்பொருள் தத்துவமாக உருவெடுக்க காரணமாகின்றது. பர்த்ரு பார்யா என்ற கணவன் மனைவி உறவில், ஒரு மங்கை கற்பு நெறி தவறாதவளா கவும், கணவன் குறிப்பறிந்து செயல்படுதலும், அவள் அவனுக்கேயன்றி மற்றவருக்கு அல்ல என்ற நிலையை வற்புறுத்துவது "அநந்யார்ஹத்வம்" எனப்படும். நாயக நாயகி பாவனையில், நாயகனான பகவான் சுவா தந்திரியன், நாயகியான சீவன் பாரதந்திரியன். அதாவது எப்பொழுதும் பக வானுக்கே தாஸ்யனாக் கைங்கர்யாதிகளை செய்யும் தன்மை (சேஷபூதன்) அதற்கேற்ப தானான தன்மையை விட்டு பெண் தன்மை பெறுவது இயல்பு.

ஆழ்வார்களுள் நம்மாழ்வரும் திருமங்கை ஆழ்வாரும், பெண் தன்மை கொண்டு பகவானை அனுபவித்து பாசுரங்களிட்டுள்ளார்கள். அப்பொழுது அவர்களுக்கு ஆண்மை பெயர் நீங்கிப் பராங்குச நாயகி என்றும் பரகால நாயகி என்றும் முறையே பெண்மை பெயர் பெற்று விளங்கினார்கள்.

இவ்வகையில் ஆழ்வார் தானான தன்மையிலிருந்தும் பெண் தன்மையிலிருந்தும் பாசுரங்கள் அருளிச் செய்துள்ளார் என்பதனை ஆச்சார்ய ஹிருதயம்

> *"ஞானத்தில் தம் பேச்சு,*
> *பிரேமத்தில் பெண் பேச்சு.* (118)

என்று 118 வது சூர்ணிகை குறிப்பிடுகிறது.

இதன் பொருள் ஞான நிலையில் இருக்கும் போது தாமான தன்மை யிலும், பிரேமை நிலையில் இருக்கும் போது பெண் தன்மையில் பெண் பேச்சாகப் பேசுவர்.

ஆழ்வார் பெண் தன்மை ஏற்று எம்பெருமானை அனுபவிக்கும் போது, பாசுரங்களும் தாய் பேசுவது போலவும், சில நேரங்களில் தோழி பேசுவது போலவும், மற்றும் சில வேளைகளில் தாமே (தலைவி) பேசுவது போலவும் மூன்று வகையான கூற்றுகள் பாசுரங்களாக வெளிப்படும். இந்நிலைகள் முறையே தாய் பாசுரங்கள், தோழி பாசுரங்கள் மகள் (தலைவி) பாசுரங்கள் என்று வடிவெடுக்கும். தலைவி தனது ஆதங் கத்தை வெளியிட "கலங்கி பேசுதல்", "தூது விடல்", "போலி காணல்", கால மயக்கு இப்படி இன்னும் பல வழி மூலம் தனது நிலையை பேசி

ஆறுதல் பெறுவது அகப்பொருள் துறையின் இலக்கணம். ஆச்சார்ய ஹ்ருதயம் இதைப்பற்றி கூறுவது.

*"சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி துணிவு, பதற்றம் ஆகிய பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி, தாயார் மகள் என்று பேர்* (133)

அகப்பொருள் துறை வழி அமைந்த ஒரு பாசுரத்திற்கு விரித்து பொருள் காண்போம்.

மழைக்காலம் ஆண்டுதோறும் குறிப்பிட்ட மாதத்தில் தொடங்கி, சில மாதங்கள் நீடித்திருந்து செல்வது இயல்பு. நாயகன், நாயகியிடம் மழைக் காலம் தொடங்கும்போது வருகிறேன் என்று சொல்லிப் போனானாம். சில நாள் கழித்து, மழை பெய்யத் தொடங்கியதாம்! மழைகாலம் தொடங்கி விட்டதே, இன்னும் சொன்னபடி நாயகன் வரவில்லையே என்று நாயகி ஆதங்கப்படுகிறாளாம்! நாயகியான மகள் வருத்தமுற்று கண்ணீர் பெருக்குகிறாளாம், அது ஆறுபோல ஓடுகிறதாம்! அதைக்கண்டு மனம் பொறுக்காத தாய் கூறுவது போல அமைந்தது பாசுரம், "அடி மகளே, இப்பொழுது மழைக்காலம் வந்துவிட்டதாகவா நீ நினைக்கின்றாய், தெரு வெல்லாம் தண்ணீர் தேங்கியிருப்பதைக் கண்டு தொடர்ந்து மழை பெய்தால் போலல்லவா நீ எண்ணுகிறாய். அது சரியல்ல, கடலிலிருந்து மேகங்கள் நீரை உண்டது என்னவோ உண்மைதான். அதனால் கடலும் வற்றிப் போயிற்றாம். கடலிலுள்ள நீர் வாழும் சீவன்களெல்லாம் தத்தளிப் பதைக் கண்ட கடல், மேகங்களை பின் தொடர்ந்து சென்று, அவை உண்ட நீரையெல்லாம் திரும்பிப் பெற்றுக் கொண்டதாம். அந்த களேப ரத்தில் சிதறிய நீர் மழை பெய்தது போல பொழிந்து, தெருத்தண்ணீருக்கு காரணமாய் விட்டது. நீயோ மழைக்காலம் வந்து போய் விட்டது. அதனால் தான் தெருவெல்லாம் வெள்ளமாயிருக்கிறது என்று உளறுகிறாய். ஏன் பிரளயமே வந்து விட்டது என்றும் கூறுவாய். நீ வடித்த கண்ணீரே வெள்ளப் பெருக்கிற்கு காரணமாகவும் இருக்கக்கூடுமே! ஏனெனில் உனது காதலின் தாபம் அவ்வளவு வெம்மையானது. உன் உள்ளத்தை நான் நன்கறிவேன். என்று தாய் மகளுக்கு ஆறுதல் கூறுவது போல அமைந்துள்ளது பாசுரம்".

மழை காலம் வந்து விட்டது, வசந்தம் வந்து விட்டது என்றெல்லாம் அரற்றி வருந்தும் தலைவியான மகளை, தோழியோ, தாயோ ஏதேனும் கற்பனை செய்து மனமாற்றலை விளைவிப்பது "காலமயக்கு" என்று இலக் கண வகையில் அடங்கியது.

பகவானிடம் கொண்ட ஆழ்ந்த பக்தி, பரபக்தியாக கனிந்து, அவன் திருவடி பற்ற தடங்களாக உலக பந்தங்களினால் உண்டாகும் இடையூறு களை நினைத்து நினைத்து ஏங்காமல், அவைகளை பொருட்படுத்தாது, எம்பெருமானை அனுபவிக்க வாழ்வில் கிடைத்திருக்கும் சொற்ப காலத்

தையும் விசனத்தில் கழித்து, சாந்தியை உதறலாகாது என்பது பாசுரம் உரைக்கும் ஆழ்பொருள்!

இப்பொழுது பாசுரத்தைக் காண்போம்.

*"கடல் கொண்டெழுந்தது வானம் அவ்வானத்தை யன்றிச்*
*சென்று*
*கடல் கொண்டொழிந்த வதனாலிது கண்ணன் மண்ணும்*
*விண்ணும்*
*கடல் கொண்டெழுந்த அக்காலங்கொலோ புயற்காலங்கொலோ*
*கடல் கொண்ட கண்ணீர் அருவி செய்யாநிற்கும் காரிகையே"*

(திருவிருத்தம் 18 வது பாசுரம்)

இனி இரண்டாவது பிரபந்தமான திருவாசிரியத்தில் ஒரு பாசுரத்தைக் காண்போம்.

இப்பிரபந்தம் "ஆசிரியப்பா" என்ற வெண்பாக்கள் போல அமைந்தது. திருவிருத்தத்தில் ஆழ்வாரின் விண்ணப்பத்திற்கு செவி சாய்த்த எம்பெருமான் ஆழ்வாருக்கு, "வீடு" என்ற பேற்றை வழங்குவதாக இருந்தாராம். ஆனால் மறை தமிழாக்கம் முடிவு பெறாத நிலையில் திருநாட்டின் பூர்ண அனுபவத்தை ஆழ்வாருக்கு, இந்த பிராக்கிருத லோகத்திலேயே அளித்து அவரது பணி வளரச் செய்தானாம்!

எம் பெருமானை அடைய பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்தோர்களுக்கு முதலில் உலக விஷயங்களில் பற்றுதலை அகற்றி, பகவத் அனுபவமான பரபக்தி என்ற நிலையை அருளிச் செய்வானாம். அத்தகைய பர பக்தி நிலையில் தான் ஆழ்வார் திருவிருத்தம் அருளிச் செய்தாராம்! பர பக்தி மலர்ந்து பிரஜ்ஞானபக்தி வளரும் நிலையில் திருவாசிரியம் அருளிச் செய்யப்பட்டதாம்!

*"உலகுபடைத்துண்ட எந்தை அறைகழல் சுடர்பூந்தாமரை*
*சூடுதற்கவாவார்*
*உயிருருகியுக்க நேரிய காதல் அன்பிலின் பின்தேறல் அமுத*
*வெள்ளத்தானாம் சிறப்பு விட்டொரு பொருட்டு*
*அசைவோரசைக திருவொடுமருவிய இயற்கை மாயாப்*
*பெருவிறலுலகம்*
*மூன்றினோடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ*
*தெள்ளியோர் குறிப்பே"*

(திருவாசிரயம் இரண்டாவது பாசுரம்)

பொய் நின்ற ஞானம் இனி பெறா வண்ணம், இமையோர் தலைவனிடம் விண்ணப்பித்து அவனது திருவடிகளைப் பற்றி, பரபக்தி, பிரஜ்ஞானபக்தியாக வளர்வதற்கேற்ப, ஞானத்தை குறைவர அருளிச்

செய்தான் பகவான். பொல்லா ஒழுக்கமும், அழுக்கு உடம்பும் இனி பெறா மைக்குக் காரணமான பகவத் திருவடி தொடர்பும், கைங்கர்யத்தையும் அனுபவமாகப் பெற்ற ஆழ்வார், அந்நிலையைப் பெறும் விவேகிகளின் மனோபாவமான, தெள்ளியோர் குறிப்பை உணர்த்துகிறார் இப்பாசுரத்தில்.

அனைத்துலகங்களையும் படைப்பதையும், அழிப்பதையும் அதாவது உமிழ்வதும் உண்பதுமான லீலா வினோத செயல்புரியும் கருணையம்பதி யான எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் நமக்கு தந்தையும் ஆவர். அவரது திருவடி தாமரைகளை சிரமேற்கொண்டு அவர் உகந்த கைங்கர்யங்களை செய்வதற்கு நாட்டம் கொள்ளும் நிலை சீவர்களுக்கு உண்டாகுமானால், அதைவிட பேரானந்தம் வேறெதுவுமில்லை. எனினும், ஒருக்கால் இப்புவி யிலேயே ஈசுவர தத்துவத்திற்கு இணையான எல்லா வகையிலும் நிரந்தர மான ஈசுவரத்தன்மையை அளிப்பதாக இருந்தாலும், அதை ஏற்க மாட்டார் களாம் விவேகிகள். (தெள்ளியோர்). ஏனெனில் எம்பெருமானின் நீர்மை (சௌலப்யம்) கவர்ச்சி ஆகியவைகளால் கவரப்பட்டு, பகவானின் திருவ டிகளைப் பற்றி, கைங்கர்ய பரர்களாகவே பகவனை என்றென்றும் பிரி யாதிருக்கவே அவர்களது உள்ளம் விரும்புமாம். அதாவது ஈசுவர ஐக்யமே மோக்ஷமாக அளிக்கப் பெற்றாலும் விவேகிகள் ஏற்க மாட்டார்கள் என்பதே தெள்ளியோர் குறிப்பு.

சகுண பிரம்ஹ அனுபவம் தாழ்ந்தது என்றும், நிர்குணபிரும்ஹானு பவமான ஐக்யமே முக்தி நிலை என்பது அத்வைதிகள் கொள்கை, பிராட்டி யாரை கணமும் பிரியாது மார்பினில் கொண்டவன்; உலகை உண்டு உமிழ் பவன்; ஜகத் காரணன்; உலகைக் காப்பவன்; ஞானம், பலம் முதலான அசாதாரணமான குணங்களுக்கிருப்பிடமானவனை நிர்குணன் என்பது எப்பொழுதுமில்லை. அத்தகைய பகவானுடனா ஐக்யம்? என்பது தெளி வற்ற பேச்சு என்கிறார் ஆழ்வார்.

பாசுரத்தில் வரும் "ஒரு பொருட்கசைவோர் அசைக" என்ற சொற்றொடர் தெள்ளியரல்லாதவர்களின் செயலைக் குறிப்பிடுகிறது. நிலையற்ற வாழ்வில் அற்ப பலன்களை பெறும் பொருட்டு இது சிறந்தது அது சிறந்தது என்று இங்குமங்கும் அலைகின்றவர்கள் அவிவேகிகள் என்று பொருள்பட அமைந்தது.

பகவத் திருவடிகளை உபாயமாகவும் உபேயமாகவும் பற்றி, மேல் வீடு பெறுவதில் நோக்கு வைக்காமல், ஐக்யத்தில் நோக்கு வைப்பது விவேகி களின் செயல் அல்ல என்பது விளக்கப்பட்டது இப்பாசுரத்தில்.

இதனை அடுத்து ஆழ்வார் மூன்றாவதாக அருளிச் செய்தது "பெரிய திருவந்தாதி" ஆகும். இது திவ்ய பிரபந்தத்தின் இயற்பா பகுதி யில் ஏழாவது பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. ஒரு பாசுரத்தின் இறுதிச் சொல்லே, மேற் பாசுரத்தின் முதல் சொல்லாக அமையப் பெற்றது அந்தாதி என்பதனை நாம் அறிந்துள்ளோம். இது என்பத்தேழு பாசுரங்கள்

கொண்டது. எனினும் அதன் காரணமாக "பெரிய" என்று அடைமொழி இடாமல், மிகச் சிறந்த பொருள் விளக்கங்களை தன்னுள் கொண்டதால், அதற்கேற்ப "பெரிய" என்ற அடைமொழி பொருத்தியது.

பிராக்ருத உலகில் பொய் நின்ற ஞானம் நிலைத்து, புலன்களை காவலில் வைக்காமல் அவை இழுத்த வழிகளிலேயே சென்று அவதிப்படும் கட்டுண்ட (பத்த) சீவர்கள் மேன்மை பெற சீவர்களின் சார்பில் எம் பெருமானிடம் விண்ணப்பித்தது திருவிருத்தமாயிற்று. இவ்வுலகிலேயே எம் பெருமான் தனது முழுமையான அனுபவத்தை அளித்த போது திரு வாசிரியம் பிறந்தது. எம்பெருமானின் உள்ளத்தை முழுவதுமாக அனுபவித் துணர்ந்த ஆழ்வார். உலக நன்மைக்காக, பகவானின் ஆணைப்படி அவனது அனந்த கல்யாண குணானுபவங்களில் இழிந்து, பிரஜ்ஞானபக்தி முதிர்ந்து பரமபக்தியாகி, அதன் அனுபவம் தோன்ற அருளிச் செய்தது பெரிய திருவந்தாதி ஆகும்.

இதன் ஐந்தாவது பாசுரத்தை விரித்து பொருள் காண்போம்.

உலகம் தோன்றுவதற்கு காரணமானவன் நீ என்பதால் அனைவருக் கும் தந்தையாகின்றாய்! பிரளய காலத்தில் அனைத்தையும் தன் வயிற்றில் கொண்டு, ஒரு சிறிய ஆலந்தளிரில் பாலகனாகக் கிடந்து, பிறகு உல கைப்படைத்ததால், நீயே தாயுமாகின்றாய்! சேதனர்களுக்கு தத்துவ ஞானத்தை ஊட்டி வளர்க்கும் ஆச்சார்ய பரம்பரைக்கு நீயே முதல் ஆச்சார் யார் என்ற நிலையில் உலக ஆச்சார்யாராகவும் (ஜகத்குரு) திகழ்கின்றாய். இவ்வாறு புகழ்ந்து பேசப்படுபவன் நீ.

ஆனால் உலக வழக்கில், ஒரு குழந்தையை ஒருத்தி தானே பெற்றெடுக்காவிடினும், அன்போடு பால் புகட்டி வளர்த்தவரையும் தாய் என்று தானே உலகம் அழைக்கின்றது. இவ்வகையில் தானே யசோதை யையும் கண்ணனுக்குத் தாய் என்று போற்றப்படுகிறாள் எனினும் சில சூழ்நிலைகளில், தாயோ இவள் என்று ஐயுறும்படி நடக்கின்றவர்களும் உல கில் உள்ளார்களல்லவா? அனைத்தையும் அறிந்தவன் உலகிற்கே தாயா னவன் என்றெல்லாம் புகழப்படுகிற உனக்கே ஒருத்தி தாய் என்று கூறிக் கொண்டு உன்னை அணைத்து, முலைவழிப் பாலூட்டி உனது உயிரைப் பறிக்க எண்ணியபோது, உனது பவள வாய் பதித்து பாலோடு அவளது உயிரையும் பறித்தாயே, உயிரைப் பறித்த நீ மாயவனா? உயிரைப் பறிக்க எண்ணிய அவள் மாயவளா? சந்தேகமே இல்லை, மாயையே வென்ற வனான நீயே தான்! ஏனெனில், விரோதிகளுக்கு நீ அளிக்கும் தண்டனை அவர்கள் திருந்துவதற்குரிய "இதம்" என்பதினால், நீ அனைவர்க்கும் தந்தை ஆகின்றாய். அவள் செய்த பாபத்திற்கு உன் கையால் மரணம் என்ற ளவில் அவளை உய்வித்து அருளியதால் நீ உலக ஆச்சார்யர் என்பதனை காட்டினாய்! விரோதிப்பவர்களிடத்தும் அன்பு காட்ட வேண்டும் என்ற லோகோபகாரத்தை காட்ட பூதனை நாடகமா? என்று கேட்கிறார் ஆழ்வார்.

அப்பாசுரம்

*"பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ*
*மற்றை யாராவாரும் நீ பேசில் எற்றேயோ*
*மாய! மாமாயவனை மாயமுலை வாய் வைத்த*
*நீயம்மா காட்டும் நெறி".*

மற்றுமொரு பாசுரத்தையும் காண்போம். இதில் புகழ்ந்து பேசாமல் பழித்துப் பேசுகிறார். அதாவது பகவானை புகழாது இருந்தாலும் புகழ்வதில் குறை இருந்தாலும் பழிப்பது தானே. "தாமரைக் கண்ணான்" என்று புகழ்ந்து பேசினாலும், பகவானின் அருள் நோக்கு கொண்ட கண் களுக்கு மிகவும் தாழ்ந்த பொருளான தாமரையை உவமானிப்பது இகழ்ச்சி தானே! எம்பெருமானுக்கு இகழ்ச்சியும் புகழ்ச்சிதானாம். தீங்குகள் செய்வோர்களிடமும் வாத்சல்யம் குறையாது இருப்பானாம்.

வெண்ணெய் திருடியும், தயிர்பானைகளை உடைத்தும், துன்பத்திற் குள்ளாக்கிய கண்ணனைப் பற்றி ஆய்ச்சியர்கள், யசோதையிடம் புகார் சொல்லி, பிள்ளையை சரிவர வளர்க்கத் தெரிய வேண்டாமா? என்று சாடிய போது, கண்ணனை ஒரு தெய்வப் பிறவி என்று உணர்ந்தும் செமை அடிகொடுக்கலாமா என்று கோபம் தலைக்கேற, தாம்புக் கயிற்றினால் இறுகக்கட்டிப் போட்டு சினந்தாளாம்! கோபத்தால் செயல்பட்டாலும், அன்பினால் செய்யப்பட்ட ஒரு அனுகூலமான செயல், பிறிதொரு சமயம், யமுனை நதியில், காளிங்கன் என்ற பாம்பு தன் வாலினால் இறுகக் கண்ணனின் மேனியைக் கட்டியது. கோபத்தால் செய்யப்பட்ட பிரதிகூல மான செயல். முன்னம் தாம்பால் ஆப்புண்ட தழும்புகள், பின்னை பாம்பால் ஆப்புண்ட தழும்புகளை போக்கி விட்டதாம். அனுகூலமான பாதிப்போ, பிர தி கூலமான பாதிப்போ பகவானிடம் உண்டாகாதாம்! இருப்பினும் இரு சாரர்களிடத்தும் மாறாத அன்பு பூண்டு வாத்சலயம் கொள்ளும் எம்பெரு மானின் திருமேனி எவ்வகையில் இருக்கும் என்று சொல்லக் கூடுமோ? என்கிறார் ஆழ்வார்.

பாசுரம் 18

*"தாம்பாலாப்புண்டாலும் அத்தழும்பு தானிளக*
*பாம்பாலாப்புண்டு பாடுற்றாலும் சோம்பாது இப்*
*பல்லுருவையெல்லாம் படர்வித்தவித்தா! உன்*
*தொல்லுருவை யாரறிவார் சொல்லு"*



## இயல் 14

# அருளிச் செயல்கள் திருவாய்மொழி

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் மிகச் சிறந்தவராகப் போற்றப்படுவதைப் போல அவர் அருளிச் செய்த திருவாய் மொழியும், திவ்ய பிரபந்தங்களுள் மிகச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது. இது நம்மாழ்வார் அருளிச் செய்த கடைசி பிரபந்தமாகும். பக்தனுக்கு பகவத் அனுபவத்தை உணர்த்தி, பர பக்தியை தோற்றுவித்தது திருவிருத்தத்தில், அந்த பக்திப் பிரவாகம் பிரஜ்ஞானபக்தியாக பெருக்கெடுத்து ஓடியது திருவாசிரியத்தில். பிறகு பரம பக்தியின் அனுபவத்தைப் பெற்றுக் கொடுத்தது பெரிய திருவந்தாதியில்! பகவத் பிராப்தி என்ற இறுதி நிலை பெறப்படுவது திருவாய் மொழியில். பண்புரை வேதம், இசைகொள்வேதம் என்பவைகள் பண்ணார் பாடலை குறிப்பிடும் சொற்றொடர்கள். இதைச் சார்ந்தே பண்ணையும் இசையும் கொண்ட திருவாய்மொழி சாமவேத சாரமாக அமையப் பெற்றது என்று ஆன்றோர் கூறுவர். சாமவேதத்திற்கு கானமான பண்ணும் இசையும் உண்டு என்பதை இங்கே நினைவு கூர்வது பொருத்தம்.

திருவாய் மொழி என்று கூறுவதற்கு உரிய காரணங்களை இயல் 12ல் விரிவாக கூறப்பட்டுள்ளது.

வேதங்களின் கருப்பொருளை நன்கு அறிந்து பொருள் கொள்ள, சிலருக்கு மட்டுமே இயலும். அம்மறைகளின் கருப்பொருளை, தமிழாக்கித் தந்த ஆழ்வாரின் திருவாய்மொழியின் பொருளை அறிவதற்கு அனைவருக்கும் இயலும். வேதாந்த விழுப்பொருள்களின் சாரத்தை தன் நெஞ்சில் நன்கு பதியும்படி அருளிச் செய்தது. ஆழ்வாரின் திருவாய் மொழியே என்று கூறும். மதுர கவிகளின் பேச்சு, இங்கே நினைக்கிற்பாலது.

*"மிக்க வேதியர் வேதத்தினுட் பொருள்*
*நிற்கப் பாடியென் நெஞ்சுள் நிறுத்தினான்"*

திருவாய் மொழி பாசுரங்கள் அனைத்தும், "தெளியாத மறை நிலங்களையெல்லாம் தெளிய வைக்கும் ஆற்றல் பெற்றது" என்று ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ளார். மதுரகவிகளின் கூற்றுப்படி, நமது உள்ளத்தில் நன்கு பதியும்படி தெளிவுற சொல்லப்பட்ட பாசுரங்களாகும். எம்பெருமானை உள்ளபடியே அனுபவித்து; அவ்வனுபவத்தால் பெறும் ஆனந்தத்தை திருவாய் மொழி பாசுரங்கள் பெற்றுத்தரும் என்பதில் ஐயமில்லை!

திருவாய் மொழி 1102 பாசுரங்களைக் கொண்டது, அதாவது நூறு பதிகங்கள் கொண்டுள்ளது. பத்துப் பதிகங்கள் கொண்டது ஒரு நூறு. ஒவ்வொரு பதிகத்திலும் நூற்பயன் பாட்டு உள்பட பதினொன்றும் சில பதி

கங்களில் பதின்மூன்றும் உள்ளன. இவ்வகையில் ஒவ்வொரு பத்திலும் (பதிகத்திலும்) பதினொன்றும் பதின்மூன்றுமாயிருப்பினும், பத்து என்றே தொகுக்கப்பட்டுள்ளது. பத்துப் பாடல்களாகியது, ஒரு பத்து என்னும் போது, பதினொன்றும் பதின்மூன்றும் கொண்டவைகளையும், பத்து என்று கூறவேண்டுமேயன்றி, "ஒன்றே சொச்சம் பத்து மூன்றே சொச்சம் பத்து, என்று கூறக்கூடாது. திருவாய் மொழியை தோற்றங்களாயிரம்" என்று விண்டுரைத்த மாறன் சடகோபன் பதினொன்றும் பதின்மூன்றும் கொண்டவைகளைப் 'பத்து' என்றும் அப்பத்து பத்துக்களை ஒரு நூறு என்றும் அதன் பத்தை ஒரு ஆயிரமென்றே தொகுத்தருளினார். இதற்கு சடகோபர் கூறிய "சடகோபன் சொன்ன பாடலோராயிரத்து இப்பத்தும்"; "குருகூர் சடகோபன் ஒராயிரம் சொன்ன"; "சடகோபன் பத்து நூற்றுள் இவை பத்து"; என்ற வாக்குகளே சான்று.

பிறவிப் பெருங்கடலில் ஆழ்ந்து அவதியுறும் சம்சாரி சீவர்களை உய்விக்க, தன்னைப் பற்றுவதற்கு தானே சாதனம் என்ற உபாய உபேயத் வங்களுக்கு பொருளான ச்ரியைப்பதியான ஸ்ரீமந்நாராயாணனைப் பற்றியே, அனைத்துப் பாசுரங்களும், அமையப் பெற்றிடினும், அவைகள் கூறும் பொருளின் சாரமாக அமைந்துள்ளது. முதல் முன்னூறு பாசுரங்களாகும். (30 பத்துகள்) இந்த முன்னூற்றின் சாரமாக அமைந்தது முதல் முப்பது பாசுரங்கள் (3 பத்துகள்). இவைகளுள் முதல் பத்தில் ஓங்காரத்தின் பொருளும்; இரண்டாவது பத்தில், நம: என்ற பதத்தின் விரிவும்; மூன்றாவது பத்தில் பரத்வம் ஸ்ரீமந் நாராயணனே என்பதையும் விளக்கமாக கூறும் வகையில் அமைந்துள்ளது. வைணவத்தின் தாரகமான எட்டெழுத்து மந்திரத்தின் விரிவான விளக்கங்களை முதல் மூன்று பத்துகளில் கூறியதின் சாரத்தை முதல் மூன்று பாசுரங்களிலேயே காணக் கிடைக்கிறது வெகு அற்புதம்.

முதல் பாசுரத்தில், பரத்வத்தின் உயர்த்தி விளக்கப்படுகிறது. இரண்டாவது பாசுரத்தில், சேதனா சேதனங்களைக் காட்டிலும் எம் பெருமான் வேறுபட்டவன் என்றும், ஐசுவர்ய கைவல்யாதிகளைக் காட்டிலும் முக்த நிலை ஏற்றமுடையது என்பதும் விளக்கப்படுகிறது. மூன்றாவது பாசுரத்தில் எம்பெருமான் எப்படிப்பட்டவன் என்று எண்ண ஒண்ணாதபடி எங்கும் கலந்து அனைவருக்கும் சுலபனாகத் திகழும் நிலைப் பேசப்படுகிறது.

பரம பக்தி மேலிட்டு பரிபூர்ணானுபவத்தை அளித்த எம்பெருமானிடம், அடங்காக் காதல் கொண்ட ஆழ்வாரின் உள்ளத்தில் புகுந்து, ஆழ்வாரின் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடும்படி நியமித்த பகவானே மொழிந்தது போன்று, ஆழ்வாரின் வாய் வழி வந்த திருவாய்மொழியின் முதற் பாசுரத்தை விரிவாக அறியும் முன் திருவாய் மொழிக்கு காப்புச் செய்யுளாக (தனியன்) மதுரகவிகள் அருளிய தனியனை அறிந்து மேற் செல்வோம்.

*"திருவழுதி நாடென்றும் தென்குருகூரென்றும் மருவினிய வண்பொருநலென்றும் அருமறைகள் அந்தாதி செய்தானடியி ணையே யெப்பொழுதும் சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து*

ஆழ்வாரைத் தோற்றுவித்த வழுதி நாடான குருகூரைச் சிறப்பித்துப் பேச, அந்த நாட்டை வளப்படுத்தும், மருக்கொழுந்தின் வாசனை மருவிய மதுரமான நீரை கொண்ட பொருநல் நதியின் சிறப்பினை எடுத்துக்காட்டி ஆச்சார்ய பக்தியை வெளிப்படுத்துகிறார் மதுரகவிகள். அறிவதற்கரிதான வடமொழி வேதங்களை, திருவாய்மொழி பிரபந்தங்களாக செய்தருளிய நம்மாழ்வாரின் இணைந்த திருவடிகளே அடையப் பெறுவது என்று சதா சர்வ காலமும் நினைத்திருப்பாயாக என்று தனது நெஞ்சை நோக்கி கூறு வது போல அமைந்தது தனியன்.

இனி திருவாய் மொழி முதல் பாசுரத்தைக் காண்போம்.

*"உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்*
*மயர்வற மதிநல மருளினன் யவனவன்*
*அயர்வறு அமரர் களதிபதி யவனவன்*
*துயரறு சுடரடி தொழுதெழென் மனமே"*

உயர்வற என்பதற்கு மற்றவைகள் எதற்கும், தன்னைப் போல் ஒரு உயர்த்தி இல்லாதபடி என்று பொருள். உயர்ந்தது என்று சொல்லக் கூடி யவைகள் பல இருப்பினும், அவைகளின் மேம்பாடு எல்லாம். ஒரு உயர் த்தியே அல்ல, என்று சொல்லும்படியான ஒரு உயர்வு. அதாவது இதற்கு மேல் உயர்த்தி எங்கும் எப்பொழுதும் இல்லை என்பதே தேர்ந்த பொருள். ஒளி மிகுந்த தாரகைகள் சூர்யன் எதிரில் இருந்தும் அவைகளில் ஒளிர் இல்லை என்று சொல்லும்படி சூர்யனது பிரகாசம் ஒளிர்கிறது என்பது போல.

உயர் நலம் என்பது மிக உயர்ந்ததாக உள்ள ஆனந்தம், முதலான கல்யாண குணங்கள் என்பதனைக் குறிப்பிடும். இதற்கு மேம்பட்ட ஆனந் தம் ஒன்று இருக்கக் கூடாதபடி, மிக உயர்ந்ததான ஆனந்தம் முதலான கல்யாண குணங்களைக் கொண்டவன், என்பது பொருள். நலம் என்ற சொல் ஆனந்தம், அனந்த கல்யாண குணங்கள், ஆகிய இரண்டையும் சொல்லும்படி அமைந்தது.

வேதாந்தமான தைத்திரிய உபநிஷத்தின், ஆனந்த வல்லியில், ஆனந்தத்தைக் குறிப்பிடும் அளவுகளைப் பற்றிய 'மந்திரம்' உள்ளது. மனுஷ்ய ஆனந்தத்தை ஒரு அளவாகக் கொண்டு அதை நூறு மடங்காக்கி பெறப்படும் ஆனந்தம் கந்தர்வானந்தம் என்றும், அதை நூறு மடங்காக்கி பெறப்படும் ஆனந்தம் தேவானந்தம் என்றும்; அதை நூறு மடங்காக்கி பெறப்படும் ஆனந்தம் பிரும்மாவுக்குள்ள ஆனந்தம் என்று அந்த மந்திரம் சொல்லுகிறது. பிரும்மாவுக்குரிய பிரும்மானந்தத்தை மீண்டும் மீண்டும் மனுஷ்யானந்தமாக கற்பனை செய்து, அதை நூறு மடங்காக உயர்த்திக்

கொண்டு ஒன்றை விட மேலாக, பல உயர்த்த ஆனந்தத்தை பெற்றிடினும் அதைக் காட்டிலும் உயர்ந்தது பரம் பொருளின் ஆனந்தமாம். அந்த ஆனந் தத்தின் அளவை மனதால் நினைத்துப் பார்க்கவோ அல்லது வாயினால் கூறவோ இயலாதபடி உயர்வற உயர்ந்ததாம். அதற்கு மேலும் ஏதேனும் ஆனந்தம் இருக்குமோ என்ற ஐயம் தோன்றாதிருக்க வாக்கும் மனமும் எல்லை காணாமல் திரும்பி விடும்படியானதும் அளந்து மாளாததுமான ஒரு ஆனந்தம் என்று கூறும் மந்திரம்.

*"யதோ வாசோ நிவர்த்தந்தே*
*அப்பிராப்பய மனஸா ஸஹ!"*

ஆக, சதுர்முகனின் ஆனந்தத்தைக் காட்டிலும், சொல்ல இயலாததும் மனதால் நினைக்க இயலாததுமானது என்பதை சொல்ல உயர்வற உயர் ந்தது என்ற பதப் பிரயோகம்! பிரும்மாவைக் காட்டிலும் உயர்ந்தவன் பரம் பொருளான ஸ்ரீமந் நாராயணன், என்பதை உணர்த்த வாக்கும் மனமும் எல்லை காணாமல் திரும்பி விட்டது என்று வேதம் உணர்த்தியது.

மயர்வு என்றால் அஞ்ஞானம்! அற என்றால், தெளிவின்மை சிறிதும் இராதபடி, அஞ்ஞானம் போக்கப்பட்டது, என்பதை உணர்ந்த "மயர்வற" என்ற சொல்லமைப்பு, அஞ்ஞானம் என்பது ஞானமில்லாமை, பொய் நின்ற ஞானம் ஆகிய இரண்டையுமே குறிப்பிடும். இவ்வகையில், ஆழ்வாருக்கு மதிநலம் அதாவது மதி என்ற பூர்ண ஞானத்தையும், நலன் என்ற குண விசேஷங்களையும் பக்தியையும் அருளி உய்வித்தார் பகவான்.

மேலும், மதி என்ற அறிவாற்றலை மட்டும் அருளிச் செய்தால் போதுமே, நலன் எதற்கு? என்று ஐயுறலாம். உலகியலில் சிலருக்கு மதி இருக்கும், நலம் என்ற குண விசேஷங்கள் இருக்காது. அவ்வகையில் மதியை மட்டும் பெற்றவர்கள் தங்களது ஆற்றலை ஆக்கப் பாதைகளில் செலுத்தாமல், அழிவுப் பாதைகளிலும் செலுத்தக் கூடுமல்லவா? இன்னும் சிலர் தாங்கள் பெற்ற மதியை மற்றவர்களுக்காக பயன்படுத்தி, பொரு ளீட்டுவதில் நாட்டமுடையவர்களாக, ஆத்ம நலனில் அக்கறை இல்லாமல் இருக்கலாமல்லவா? அதனால் குணநலமற்ற ஞானம் மட்டும் பெற்று, தவறான பாதையில் சென்று, விளைவுகளை விபரீதமாக்காமல் இருப்பதற் காகவே "மதிநலன்" என்ற சொல்லமைப்பு.

ஆழ்வார் பிறந்தது முதல், மதுரகவிகளுக்கு உபதேசம் செய்யும் வரை, உலகியல் வழக்குப்படி தகுந்த வித்யாப்யாசம் பெற இயலாத வராகவும், உலகியல் வியாபாரங்களில் ஈடுபாடு கொள்ள முடியாதவராக வும், இயற்கைக்கு மாறாக வளர்ந்தவர். அப்படியிருக்க அவரால் பொருட் செறிவு நிறைந்த நிகரில்லாத பாசுரங்களை எங்ஙனம் அருளிச் செய்ய முடிந்தது? என்ற ஐயம் தோன்றக் கூடும். இறைவனாலேயே ஆழ்வாருக்கு மதிநலம் அருளச் செய்யப்பட்டமையால் ஐயத்திற்கு இடமில்லை.

மேலும் ஒரு ஐயமும் எழக்கூடும். மதிநலம் அருளிச் செய்தது தனக்குத்தான் என்று ஆழ்வார் பாசுரத்தில் குறிப்பிடாததைப்பற்றியே அந்த ஐயம். மதிநலம் தனக்கு அருளிச் செய்தார் என்று கூறாமல் பொதுவாக மதிநலன் அருளினன் என்றே கூறியுள்ளார். பிறந்தது முதல் இயற்கைக்கு மாறாக இருந்தவர் ஆழ்வார். 'தனக்கு' என்ற சொல் அமைத்தால், இயற்கைக்கு மாறாக இல்லாதவர்களாகவே மற்றவர்கள் இருக்க, ஒன்றுக்கும் உதவாத தனக்கு என்று பொருள்பட்டு, விவாதத்திற்கு வழிகோலும் என்பதற்காக தவிர்க்கப்பட்டது என்று பெரியோர் கூறுவர்.

அயர்வறு என்பதில் அயர்வு என்றால் மறதி எனப்பொருள். மறதி எப்பொழுதும் இல்லாத ஒரு தன்மையைக் குறிப்பிட "அயர்வறு" என்ற பதப் பிரயோகம். அயர்வு என்பதற்கு மறதி என்பது மட்டுமல்லாமல், சோர்வு, வருத்தம், வெறுப்பு என்றும் பொருள்படும். இந்த நிலை ஒரு காலத்தில் இருந்து, வேறு காலத்தில் இல்லாமலிருக்கலாம். இப்படிப்பட்டவர்கள், அமரர்களுள் பிரும்ம இந்திராதி தேவர்கள். நித்ய முக்தர்களான அமரர்களுக்கு இந்த நிலை இருப்பதே இல்லை. அதனால், பிரும்ம இந்திராதி தேவர்களை தவிர்க்கவே "அயர்வறு" என்ற பதப் பிரயோகம்.

அதிபதி என்றால் உயர்ந்த நிலையிலுள்ள தலைவன் என்பது பொருள். நித்ய ஆனந்தமும் மலர்ந்த ஞானமும் சேஷத்வத்தில் ஆசையும், பகவத் கைங்கர்யத்தில் விருப்பமும் கொண்ட நித்ய முக்தர்களுக்கு 'பதி' என்று கூறினால். பிரபஞ்ச சிருஷ்டி, ஸ்திதி ஆகியவைகளுள் வாசியிருப்பதால் அதிபதி என்று சொல்லமைப்பு இவ்வமைப்பினால், அரன் தவிர்க்கப்பட்டு ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்று உறுதிப்படுத்துவதற்காக இடப்பட்டது.

"துயரறு சுடரடி தொழுதெழு என் மனமே" என்று பாசுரத்தை முடிக்கிறார் ஆழ்வார். ஞான சூன்யனாக இருந்தவனுக்கு சகல விஷயங்களிலும், ஞானம் வளரும்படி ஊட்டி, தன்னிடம் பக்திக் காதல் கொள்ளுமாறு மேம்படுத்தி, மதிநலம் உண்டாவதற்கு மிக்க உதவியாகவும், அனுகூலமாகவும், எனது என்று சொல்லிக் கொள்ள உரிமை கொண்ட உள்ளமான மனதிற்கு கட்டளையிடுகிறார். எப்படியெனில், மனதை நீயென்று விளித்து அவனளித்த மதி நலத்தைக் கொண்டு அவனது கழல்களையே தஞ்சமாகப் பற்றி, வணங்கி வழிபட்டு அவனுகந்த கைங்கர்யாதிகளை தாஸ்யமாக செய்து, மேம்பட்டவாழ்வானதும், நித்யமானதுமான உஜ்ஜீவனம் என்ற வீட்டைப் பெறுவாயாக! என்று கட்டளையிடுகிறார் ஆழ்வார்.

துயரறு என்றால், பகவத் பக்தர்களின் துயரங்களை போக்கும் ஆற்றல் கொண்டதாம் பகவானுடைய திருவடிகள். அத்தகைய திருவடிகளின் ஒளி வீசும் சுடரே, துயரங்களை போக்க வல்லது என்றால், சுடர் விடும் திருவடிகளையே சரணாகப் பற்றினால், உயர்ந்த நிலையை அடையக் கூடும் என்பதற்காக அவைகளைப் பற்றி தொழுதெழு என்று பேசுகிறார் ஆழ்வார்.

பாசுரத்தின் முதல் மூன்று அடிகளின் ஈற்றில் "யவனவன்" என்ற சொற்றொடர் அமைந்துள்ளது. இதற்கு காரணம், பாசுரத்தின் ஒவ்வொரு அடியையும், முற்றுப்பெற அமைத்து, நான்காவது அடியோடு இணைத்தே பொருள் கொள்ள வேண்டும் என்பதற்காக.

எப்படியெனில் உயர்வற உயர் நலமுடையவன் எவனோ அவன் மயர் வற மதிநலம் அருளினன், மயர்வற மதிநலம் அருளினன் எவனோ, அவன் அயர்வுறுமரர்களைதிபதி அயர்வறுமரர்களதிபதி எவனோ, அவனது துய ரறு சுடரடி தொழுதெழு மனமே! என்றும் பொருள்பட அமைந்தது பாசுரம்.

வேதம் உணர்த்தும் ஸ்ரீமந் நாராயணன் உயர்வற உயர் நலமுடையவன். அதாவது அனந்த கல்யாண குணங்களையும் நித்யானந்தத்தையும் கொண்டவன் என்பதை சேதனர்களுக்கு உணர்த்துவதற்காக உயர்ந்த திரு மலையில் ஆனந்த விமானத்திற்குள் வேங்கடநாதனாக நின்ற வண்ணம் சேவை சாதிப்பது, பாசுரத்தின் முதலடி விளக்கம் எத்துணை பொருத்தம்!

திசை முகனுக்கு வேதோபதேசம் செய்தவன் வைகுண்டபதியான ஸ்ரீமந்நாராயணன் வேதோபதேசத்திற்கு மூலமும், அந்தமும் ஓம்காரம் (பிர ணவாகாரம்). ஆழ்வாருக்கு மயர்வற மதிநலம் அருளிச் செய்தவன் வேத சொரூபனே, பூலோக வைகுண்டம் எனப்படும். திருவரங்கத்தில் ஓம்கார விமானத்திற்குள் (பிரணவாகார விமானம்) பெரிய பெருமாளாக கிடந்த வண்ணத்தில் சேவை சாதிப்பது, பாசுரத்தின் இரண்டாவது அடியின் பொருள் துல்லியமாக உருவகப்படுத்தப்பட்டிருப்பது, சாலப் பொருந்துகிற தல்லவா ?

இமையோர் தலைவனான ஸ்ரீமந் நாராயணன் அயர்வறு அமரர்கள திபதி. அவனது திருவடி அடைவதே முக்தி, கோடி புண்யங்கள் செய்த போதிலும், அவைகள் கழியும் வரை முக்தி நிலை கிட்டாது! அதை உருவகப்படுத்தும் வகையில் முக்தித் தலமான காஞ்சியில் புண்ணிய கோடி விமானத்திற்குள் தேவராஜன், அனைவருக்கும் அருள் பாலிப்ப வன் என்ற பேரருளாளனாக சேவை சாதிப்பது, பாசுரத்தின் மூன்றாம் அடி உணர்த்தும் வகை!

இவ்வகையில் பொருத்தம் அமையப் பெற்றது ஒரு விசேஷந்தானே!

ஜகத் காரண சாரீரகனான ஸ்ரீமந் நாராயணனே சர்வசேஷீ. சேதனர் கள் அவனுக்கு மட்டும் சேஷபூதர்கள் என்ற சேஷத்தலத்தைக் கடைப் பிடித்து அவனது சரணங்களே சரணம் என்று அடைவதே மிகச் சிறந்த உபா யம் என்ற ஆழ்ந்த கருத்தினை உணர்த்துவதே இப்பாசுரத்தின் நோக்கு.

இனி இரண்டாவது பத்தில் ஒரு பாசுரத்தை உரைத்து பொருள் காண்போம்.

*"அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்*
*செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே".*

இவ்வகையில் ஈரடி பாசுரங்களையும் கையாண்டுள்ளார் ஆழ்வார். திருவள்ளுவர் திருக்குறள் இயற்றுவதற்கும். நம்மாழ்வாரின் தமிழையே முன்னோடியாகக் கொண்டார் என்பது ஆன்றோர்களின் கருத்து! (இதன் விவரம் 19 இயலில்).

அற்றது பற்றெனில் பற்று ஒழிந்தது எனில் உயிர் (ஆந்மா) வீடு பெறு வதற்கு வழிகோலும் என்பது ஆழ்வாரின் திருவுள்ளம்.

உலகப் பொருள்கள் அனைத்தும் அழியும் தன்மை கொண்டதால், நிரந்தரமல்ல, நிரந்தரமல்லாதவைகளின் மீது பற்று வைப்பதால் நிரந்தர மற்ற சொற்ப சுகத்தை மட்டும் தான் பெற முடியும். பற்றுதலுக்கு காரணம் அவா. ஒரு பொருளை அனுபவிக்க அனுபவிக்க ஆசை பெருகுமேயல் லாது முடிவடையாது! புறக் காரணங்களான இடையூறுகள் அல்லது இதர அத்தியாவசிய பணிகள் ஆசையை ஓரளவு தணிக்கும், ஆனால் அனுப வித்தலால் ஆசை முடிவடையாது. இதற்கு எடுத்துக்காட்டு, மதுவும் மங்கையும். ஆசையின் விளைவால் பெறுவது அற்ப சுகந்தான், துன்பமே, அதிகமாக இருக்கும். அதனால் உலகப் பொருள்களின் மீது கொண்டுள்ள பற்றை விடு என்று ஆழ்வார் கூறுகிறார்.

ஆழ்வார் அப்படி கூறியதிலிருந்து பற்று வைப்பதற்கு தகுதி படைத்த வேறு பொருளும் உண்டு என்று குறிப்பாக உணர்த்துகிறார் என்பது புலப் படும். அப்படியெனில் அப்பொருள் எத்தன்மையது என ஆராயப்புகின், ஆத்மானுபவம், பகவதானுபவம் ஆகிய இரண்டையுமே கூறலாம்.

ஆத்மானுபவம் என்பது யாது? பலன்களில் விருப்பங் கொண்டு, உலகியல் பொருள்களில் நாட்டங் கொள்ளாது. ஆத்மாவிடத்திலேயே மனத்தை லயிக்கச் செய்வது ஒரு வகை, தீபம், மற்ற பொருள்களை காட்ட வல்லது. ஆனால் காற்றினால் தீபச்சுடர் அலை பாயும் போது (சலிக்கும் போது) தெளிவின்மையால் பொருள்கள் புலப்படாது. அது போல மனமும், அலை பாயும் தன்மை கொண்டதால், சலிக்கும்போது, ஆத்ம வஸ்துவைப் பற்றி நிலைத்து நிற்க இயலாது. அது மனதின் இயற்கை (சுபாவம்). ஞான யோகத்தால் மனத்தைக் கட்டுப்படுத்தி ஆத்ம விஷயத்தில் செலுத்தினால் மனம் பேதலிக்காமல் (ஞானம்) ஆத்ம சுவரூபத்தை பிரகாசிக்கச் செய்யும். இவ்வகையில் ஞானானுபவத்தை விரும்புவர் கைவல்யார்த்தீ என்றும் அந்த அனுபவம் கைவல்யம், என்றும் கூறப்படும்.

பிரகிருதியின் மாறுபாடான ஐம்பூதங்கள், ஐம்புலன்கள் ஆகியவை கள், ஆத்மாவோடு தொடர்பு கொண்டதெனினும், ஆத்மப் பொருள் வேறு, அவைகள் வேறு, கைவல்யார்த்தி, பிராகிருத தொடர்பற்ற ஆத்மானு பவத்தை பிராகிருதமண்டலத்திலேயே ஏதோ ஒரு தேச விசேஷத்தில் அனு பவித்துக் கொண்டிருக்க இயலுமே தவிர, பகவதனுபவம் பெற முடியாது. அதனால் கைவல்யம் தாழ்வானது. அதனால் பெறப்படும் ஆனந்தமும் பேரானந்தமல்ல, என்பது ஆழ்வாரின் கூற்று. மேலும் பற்று அற்றதினால்

ஆத்மா வீட்டைப் பற்றும் நோக்கில் ஆத்மானுபவத்திலும் இழியக்கூடும்; அது தாழ்ந்தது என்பதனை வலியுறுத்தவே செற்றது என்ற சொல் அமைப்பு. இது அது செற்று என்று பிரியும். சீவாத்மாவின் இருவினை களான பாப புண்யம் கழிவதற்கு வழி ஞானயோகத்தில் இல்லாததால், பிராகிருத தொடர்பு நீடித்துக் கொண்டே இருக்கும். ஆதலால் இறைப் பற்றான பக்தி முதிர்ந்து அவனது திருவடிகளை பற்றுதல் ஒன்றே வீடு பெறும் வழி என்பதே, பாசுரம் வலியுறுத்தும் பொருள். ஆத்மானுபவத்தை செற்றது (அது செற்றது) என்று சொல்லமைத்து, மேல் வீட்டில் நோக்கு வைத்து உய்வதை 'மன்னுறில்' என்று சொல்லி, பாசுரத்தை முடிக்கிறார் ஆழ்வார்.

பிற்காலத்தில், ஒன்றிரண்டு பாசுரங்கள் மறைந்து, இடை செறுகல் வராதிருக்கவே ஈரடி பாசுரங்களையும் அந்தாதியாகவே அமைத்திருக்கக் கூடும்.

திருவாய் மொழியிலும் ஆழ்வார் தானான தன்மையில் அமைந்த புறப்பொருள் துறை பாசுரங்களும் பெண் தன்மை ஏற்று நாயகி நாயக பாவனையான "அகப் பொருள் துறை பாசுரங்களும்" அநேகம் உள. உதாரணத்திற்கு தாய் பேசுவது போல அமைந்த ஒரு அகத்துறைப் பாசுரத்தைக் காணலாம்.

*"பாலன் ஆய ஏழ்உலகு உண்டு பரிவு இன்றி*
*ஆலிலை அன்னவசம் செய்யும் அண்ணலார்*
*தாளிணை மேல் அணி தண்அம் துழாய் என்றே*
*மாலுமால் வல்வினையேன் மடவல்லியே".*

இதன் பொருள்: அதிபால்யமான வடிவத்தைக் கொண்டு எம்பெரு மான், மகாபிரளயத்தின் போது ஏழு உலகங்களையும் உண்டு ஒரு ஆலம் இலையில் படுத்திருக்கிறானாம்! உண்ட உணவு சீரணிக்காது, என்ற வருத்தம் துளிக்கூட இல்லாமைக்கேற்ப, உல்லாசமாகப் படுத்திருக்கும் பெருமையை உடைய எம்பெருமானது இரண்டு திருவடிகளின் மேலே, சாற்றிய பசுமையான குளிர்ந்த பச்சைப் பசுந் துழாயினைப் பெற வேண்டும் என்று அபிமானித்து, பிடிவாதம் பிடிக்கின்றாளாம். தனது மகன் என்று தாய் கூறுவது போல அமைந்தது.

இதன் உட்பொருள் விளக்கம்.

பாலகனாய் வடிவெடுத்து என்றால் பிள்ளைத்தனமான செய்கை களை செய்வான் என்பது குறிப்பு. பொதுவாக, குழந்தைகள் எந்தப் பொருளைக் கையிலெடுத்தாலும், அதை வாயில் போட்டுக் கொள்வது இயல்பு (இது பருவதத்தின் கோளாறினால்) ஆலை இலையில் படுத்திருக் கும் குழந்தையோ எல்லா உலகங்களையும் உருட்டி வாயில் போட்டுக் கொண்டது என்றால், அதற்கு குழந்ததனமான பருவக் கோளாறு

காரணமல்ல. மஹா பிரளயமான ஒரு இக்கட்டான கட்டத்தில், உலகங்களை காப்பாற்றும் லோக ரக்ஷணம், அவனுக்கே உரித்தானதால், சீரணிக்காது என்று அறிந்தே உண்ட உணவு லோக ரக்ஷணமாக முடிந்ததாம்.

என் மகளோ, மடவல்லி. அதாவது மலர் கொடி படர கொழு கொம்பை நாடுபவள். தனது பருவத் துடிப்பால், எப்பொழுதோ நடந்த நிகழ்ச்சியின் போது, திருவடிகளில் சாற்றியிருந்த பச்சை பசுந்துழாயைப் பெற வேண்டுமாம்! கடந்த காலத்தில் சாற்றப்பட்டதை இப்பொழுது வேண்டும் என்று அடம் பிடித்தால், என்னால் என்ன செய்ய இயலும் என்பது தாயின் அங்கலாய்ப்பு.

மகள் விரும்புவது பச்சை பசுந்துழாய். பச்சை என்ற சொல்லிற்கு உபகாரம் என்பது பொருள். துழாய் தனக்கு வேண்டும் என்று அடம் பிடிப்பதின் நோக்கு, எவ்வளவு காலமாயினும், பக்தர்களுக்கு உபசரித்து, தன்னடி சேர்த்துக் கொள்வது என்ற பகவத் கருணைக்கு தானும் பாத்திரமாக வேண்டும் என்பது குறிப்பு. அதனால்தான் பகவான் என்ற கொழு கொம்பை நாடுவது (சீவனின் முயற்சி) என்ற செயலில், அடம் பிடிக்கின்றாள், மடவல்லியான பராங்குச நாயகி.

திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களும், இந்த இயலில் அறிந்தது போல, ஆழ்ந்த மறைபொருளை தன்னுள் கொண்ட இனிய பாக்களாகும். வைணவ தத்துவமான விசிஷ்டாத்வைத சிந்தாந்தத்தையும், மந்திரார்த்தங்களையும் திருவாய்மொழி பாசுரங்கள் விளக்கும் பாங்கை இனி வரப் போகும் இயல்களில் அறிவோம்!



# இயல் 15

# தத்துவங்கள் ஆர்ந்த திருவாய்மொழி

ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்றுணர்ந்த வைணவத்தின் தேர்ந்த கொள்கைகள், தத்துவம், இதம், புருஷார்த்தம்.

தத்துவங்களுள் சேதனம், அசேதனம் ஈசுவரன் என்று மூன்று தத்துவங்களை ஏற்றுக் கொண்டுள்ளது வைணவம். சேதனம் அல்லது சித் என்றால் அறிவுடைய ஜீவர்களாவர். அசேதனம் அல்லது அசித் என்பவைகள் அறிவற்றவைகளான சடப் பொருள்கள். மூலப் பிரகிருதியும் அதன் பரிமாணங்களும் சடப் பொருள். சேதனன் அசேதனம் ஆகிய இருவகை தத்துவங்களை தனது உடலாகக் கொண்டு ஆத்மாக்களுக்கு ஆத்மாவாக நியமித்துக் கொண்டு இருப்பவன் ஈசுவரனான ஸ்ரீமந் நாராயணன்.

ஆத்மா அணுவளவே ஆனது. ஞான வடிவானது. ஞானத்தைக் குணமாகக் கொண்டது. நித்யமானது. உடல், மனம், புலன், பிராணன், ஆகியவைகளைக் காட்டிலும், வேறுபட்டது. அது அழிக்க முடியாதது; பகுக்க முடியாதது; அவயவங்கள் அற்றது; வளர்தல், குறைதல் முதலிய மாறுபாடுகளற்றது; நீர், காற்று, வெய்யில், முதலியவைகளாலும், தீ மற்றும் ஆயுதங்களினாலும் பாதிப்புக்குள்படாதது. முன் வினைப் பயன்களைச் சார்ந்து உடல் எடுத்துக் கொள்ளும். அப்பொழுது அறிவு சுருங்கி அளவு பட்டே இருக்கும்.

அசேதனம் சடப்பொருள்; அறிவற்றது தனக்குத்தானே தோன்றாதது. ஒரு நிலையிலிருந்து வேறு நிலைகளுக்கு மர்றுபடும் தன்மை கொண்டது. இதில் ஞானத்திற்கு இடம் இல்லை. இதனால் பெறப்படும் பலன்களை அனுபவிப்பது சேதனன்.

மூலப் பிரகிருதி, சுத்தசத்துவம், காலம், என்னும் மூன்றாக அசேதனம் பிரிந்துள்ளது. மூலப் பிரகிருதி பகவானுக்கு சரீரமாகும். இது ஒரு காரணப் பொருள் இதன் கார்யப் பொருள். பிரகிருதியும் அதன் வேறுபாடுகளும். சத்துவம், ராசசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களின் சேர்க்கையே பிரகிருதி. அதனால் பிரகிருதி திரிகுணம் என்றும் வழங்கப் படுகிறது. முக்குணங்களின் சமத்துவநிலை பிரளயமாகும். முக்குணங்களின் ஏற்றத்தாழ்வு நிலை படைப்பாகும். அப்பொழுது, பிரகிருதியின் ஒரு பகுதி, பல தத்துவங்களாக மாறுதல் அடைந்து படைப்பிற்கு காரணமாகின்றது. பிரளயத்தின் போது மூலப்பிரகிருதியில் சூக்கும நிலையில் இருந்து படைப்பின் போது பிரகிருதி முதலான தத்துவங்களாக மாறி தூல வடிவில் நாம, ரூப, பேதங்களோடு தோன்றும். பல மாறுதல்கள் அடைவதாலும் ஞானவளர்ச்சிக்கு தடையாயிருப்பதாலும் மாயை என்றும்

அவித்யை என்றும் சிலர் கூறுவர். முக்குணங்களின் கலப்பு என்பதால் இது மிசிர தத்துவம் என்னும் அறியப்படுகிறது.

அடுத்த அசேதன தத்துவம் "சத்த சத்துவம்" பிரகிருதியைப் போன்று குணங்களின் கலப்பு இல்லாதது. இதுவே வைகுண்டமான நித்ய விபூதியைக் குறிப்பிடுவது சத்துவகுணம் மட்டிலும் ஓங்கி இருப்பதால் இது சுத்த சத்துவம் என அறியப்படுகிறது.

மூன்றாவது அசேதனப் பொருள், காலம். இதில் குணத்திற்கு இட மில்லையாதலால் இது "சத்துவசூன்யம்" என அறியப்படுகிறது.

பிரகிருதியின் மாறுபாடு 24தத்துவங்களைக் கொண்டது. அவை பிர கிருதி, மஹத், அகங்காரம், மனம், ஐந்து தன்மாத்திரங்கள், ஐந்து பூதங் கள், ஐந்து அறிவுப் பொறிகள், ஐந்து செயல் பொறிகள், என்று 24சீவன் 25 வது தத்துவமாகும்.

பெரிய பிராட்டிக்கு நாயகனாகவும் எல்லாவற்றையும் எல்லோரையும், ஏவுகின்றவனாகவும் அனைத்துலகங்களை ஆள்பவனாகவும், அனைவர் க்கும் தலைவனாகவும் இருக்கும் ஸ்ரீமந் நாராயணனே, இங்கு ஈசுவரன் என்ற தத்துவமாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவருக்கு ஐந்து நிலைகள் உண்டு. வைகுண்டத்தில் ஞானானந்த ஸ்வரூபனாக விளங்கும் நிலை "பரம்" எனப்படும். முத்தொழில்களை நடத்தவும் சேதனர்கள் வாழ்வு பெற வும் பல ரூபங்களில் செயல்படும் நிலை "வியூகம்" எனப்படும். என்னின்ற யோனியுமாய் மனிதன், விலங்கு, பறவை, தாவரம், முதலான இனங்களில் பிறப்பெடுப்பது "விபவம்" எனப்படும். சேதன அசேதனங்களுள் உள் புகுந்து இருக்கும் நிலை "அந்தர்யாமி" எனப்படும். ஆலயங்களில் சிலை வடிவில் இருப்பது "அர்ச்சை" எனப்படும். இவ்வாறு ஐந்து நிலைகள் கொண்டவன் ஈசுவரன்.

இதுவரை தத்துவம் வெகு சுருக்கமாகக் கூறப்பட்டது.

அடுத்து இரண்டாவதான "இதம்" விளக்கப்படுகிறது.

வீடு பெறுவதற்கு சாதனமாக அனுட்டிக்கப்படும் வழியே இதம் (ஹிதம்) எனப்படும். இதற்கு வழி (உபாயம்) சித்தோபாயம், என்றும் சாத்யோபாயம் என்றும் இரண்டு நெறிகளைக் கொண்டது. நமது முயற் சியால் ஆக்க முடியாதபடி முன்பேயே உள்ள நெறி சித்தோபாயமாகும். இது ஈசுவரன். நம்மால் மேற்கொள்ளப்படும் வழி (உபாயம்) சாத்யோபாயம் என்ற நெறியாகும். சாத்யோபாயம் பக்தி நெறி என்றும் பிரபத்தி நெறி என்றும் இருவகைப்பட்டது.

இவைகளுள் பக்தி நெறி, கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், என்று பல அனுபவங்களில் தேறி, பரபக்தி, பிரஜ்ஞானபக்தி, பரமபக்தி என்று மூன்று நிலைகளைக் கடந்து பகவத் பிராப்தி என்ற நிலையை அடைவதாகும். இது அனுட்டிக்கப் பெறுவது மிக கடினம். இதை அனை

வரும் கடைப்பிடிக்க இயலாதது. ஆதலால் அனைத்து சேதனர்களும் மேற்கொள்ள எளிதாயிருப்பது பிரபத்தி நெறி என்ற சரணாகதி நெறி யாகும். ஆழ்வாரின் பாசுரங்களில், பக்தி நெறி குறிப்பிடப்பட்டிருந்தாலும், மிக அதிக அளவில் வலியுறுத்தப்பட்டது, சரணாகதி நெறியே ஆகும்.

மூன்றாவதான புருஷார்த்தம், மோக்கம், (மோக்ஷம்) என்ற வீடாகும். அதுவே சீவாத்மா அடைய வேண்டிய இறுதி நிலையாகும். ஆழ்வார் வாக்குப்படி "நலமந்தம் இல்லதோர் நாடு புகுதல் ஆகும்". புருஷ என்றால் ஆத்மா, அர்த்தம் என்றால் பொருள். அதாவது ஆத்மா அடைய வேண்டிய உறுதிப் பொருளான வீடு என்ற மோக்கத்தை குறிப்பது.

பரமாத்மாவுக்கும் சீவாத்மாக்களுக்கும் இயற்கையிலேயே உள்ள தொடர்புகளை அறிவது "சம்பந்த ஞானமாகும்". தந்தை தனயன்; கணவன் மனைவி; சேஷீசேஷன்; சரீரிசரீரம்; என்று ஒன்பது வகை உறவு கள் (தொடர்புகள்) பேசப்படுகிறது. வினைப்பயன்களைச் சார்ந்து ஆத்மாத் கள் உடலெடுத்து சீவர்களாக வாழும் உலகியலில், தந்தைதனயன்; கண வன்மனைவி என்று உண்டான உறவுகள் நித்யமல்லாதது, உடல்கள் அழிய, உறவுகளும் அழியும். ஆதலால் இறைவனோடு கொண்ட நித்ய மான உறவை (தொடர்பை) உணரும் அறிவை (சம்பந்த ஞானத்தை) நாம் பெறப்படுவது எட்டெழுத்து மந்திரமான மூலமந்திரத்தால்.

"ஓம் நமோ நாராயணாய" என்று மூன்று பதங்களும் எட்டெழுத்துக் களையும் கொண்டதினால், மூலமந்திரம், எட்டெழுத்து (அஷ்டாக்ஷரம்) மந்திரம் என அறியப்படுகிறது.

"ஓம்" என்ற முதல் பதம் அ - உ - ம என்ற மூன்று வடமொழி எழுத்துக்களின் சந்தி இவைகள் சேர்ந்த நிலையில் ஒரு பொருளையும், பிரிந்த நிலையில் மூன்று பொருள்களையும் தெரிவிக்கும்.

'அ' என்ற அகாரம், அனைத்திற்கும் ஆதாரமாக நிற்கும் பகவானைக் கூறும். எல்லா எழுத்துக்களுக்கும் மூலகாரணமான அகாரத்தினின்று தான் எழுத்துக்களும் சொற்களும் தொடங்குகின்றன. மெய்யோடு கலந்து ஒலிக்கச் செய்வதால் சொற்களுக்கும் காரணமாகக் கூறப்பட்டது. சொற் களால் அறியப்படும் பொருள்களுக்கு பகவானே மூலகாரணமானவனான தால், சொற்களுக்கு மூலமான 'அகாரம்' பகவானை உணர்த்துவதும் பொருத்தம் தானே! காத்தல் என்ற வினைவேர் சொல்லினின்று அகாரம் தேறியதால் அனைவரையும் காப்பவனான ஸ்ரீமந் நாராயணனையே சுட்டிக் காட்டுவதும் இயல்பு!

உ என்ற உகாரம், எம்பெருமானால் எப்பொழுதும் தாங்கப்பட்ட பிராட் டியாரான லக்ஷ்மியைக் குறிப்பிடும். அதனால் பகவான் என்று நாம் கூறும் போதெல்லாம், பிராட்டியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணனையே சொல்லும் படியாகவே அமைந்தது. மேலும், சீவன் எம்பெருமானுக்கு அடிமையான

வன் என்பதையும் உகாரம் உணர்த்தும். எப்படியெனில் அகாரத்தின் மேல் ஏறி மறைந்துள்ள "ஆய" (தமிழில் கு) என்ற நான்காம் வேற்றுமை உருபை தேற்றேகாமாக பொருள் கொண்டால் "பகவானுக்கே' அடிமைப் பட்டவன் சீவன் என்பதும், மற்றவர்களுக்கு அடிமை இல்லை என்பதும் விளங்கும்.

'ம' என்ற மகாரம் சீவனைக் குறிக்கும். "மந்" என்ற வினைவேர் சொல்லினின்று மகாரம் தேறியது. "மந்" என்றால் அறிவு என்று பொருள். அதனால் ஞான ரூபமும் ஞானத்தையே குணமாகக் கொண்ட சீவாத்மா" உணர்த்தப்படுகிறது. மேலும் வடமொழி எழுத்து வரிசையில் 'ம'; 25 வது எழுத்தாகும். அதனால் 25 வது தத்துவமான சீவன் 'ம' காரத்தினால் உணர்த்தப்படுவதும் பொருந்தும்.

நடுப்பதமான நம:, சீவர்களுக்கு எதுவும் உடைமை இல்லை, எதிலும் உரிமை இல்லை என்பதை உணர்த்தும் வகையில் அமையப் பெற்றது. "நான்" என்றோ என்னுடையது என்றோ சொல்லும் ஆத்மாவும், உலகியல் பொருள்களும் பகவானுக்கே சொந்தம் என்றளவில் சீவன் அடிமை, என்ற சேஷத்வம் பேசப்படுகிறது.

இறுதிப்பதமான நாராயணாய என்பது, நாராணாம் + அயனம் என்றும் நார: + அயனம் என்றும் விரியும். முதல் வகைப்படி நாரங்களுக்கு அயனமாயிருப்பவன், அதாவது சீவர்களின் கூட்டங்களுக்கு ஆதாரமாயும், பலன் அளிப்பவனாகவும் இருக்கும் நிலை குறிப்பிடப்படுகிறது. இரண்டா வது வகையில் சேதன, அசேதனங்களை தனக்கு உட்புகும் பொருளாகக் கொண்டவன் என்ற நிலை குறிப்பிடப்படுகிறது. ஆக இரண்டையும் இணைத்து பொருள் கொள்ளும் போது, சேதன அசேதனங்கள் இல்லாத இடங்களிலும் எம்பெருமான் உளன் என்றும், சேதன அசேதனங்கள் உள்ள இடங்களிலும், தான் இல்லை என்று எண்ணவொண்ணாதபடி எங்கும் பக வான் கரந்துளன் என்றும் தேறும்.

இறுதியாக உள்ள 'ஆய' என்ற வேற்றுமை உருபு சீவர்கள் எம் பெருமானுக்கு மட்டும் அடிமைகளாயிருந்து (சேஷ யூதர்கள்) பூர்ணானு பவத்துடன், கைங்கர்யம் செய்வதை குறிப்பிடும்படி அமையப்பெற்றது.

வைணவ தத்துவங்களான விசிஷ்டாத் வைத சிந்தாந்த கொள்கை களை, விரிவாகக் கூறுவது, இவ்வரலாற்றுத் தொடரின் நோக்கமல்ல வாயினும், ஆழ்வாரின் பாசுரங்களை நன்கு உணர்ந்து அறிந்து கொள் வதற்கேற்ப, ஒரு சிறு துளியே இங்கு விளக்கப்பட்டுள்ளது.

இந்த தத்துவங்கள் ஆழ்வார் பாசுரங்களுள் எவ்வகையில் எங்கெங்கே உணர்த்தப்படுகிற தென்பதை இனி காண்போம்.

மறையின் முதலில் சுரம் (ஸ்வரம்) என்று எது சொல்லப்படுகிறதோ,

மறையின் முடிவில் எது நிலை பெற்று நிற்கின்றதோ அது ஓம் என்ற ஓங்காரமாகும் (பிரணவம்). வேதம் ஓதுவதற்கு முன் பிரணவத்தை ஓதியும், வேதம் ஓதி முடிந்த பின்னரும் பிரணவத்தை ஓதியும், ஓதுதலை முடிப்பது, வேதம் தானே காட்டிய மரபு. இதனால் பிரணவம் வேதங்களுக்கு மூலம்.

எதிலிருந்து தோன்றி, நிலைபெற்று, அதிலேயே ஒடுங்குகின்றனவோ, அவைகளுக்கு அது பிரகாரி, அதற்கு அவைகள் பிரகாரங்கள் ஆக பக வான் பிரகாரி, உலகும் உலகுளடங்கல்களும் பிரகாரங்கள்.

இவ்வகையில் திருவாய்மொழி முதல் பாசுரத்தைப் பார்க்கலாம்.

"உயர்வற உயர் நலம்" என்ற முதல் பாசுரத்தின் முதல் மூன்று அடி களின் முதல் சொல்லின் முதல் எழுத்துக்கள், உ.ம.அ ஆகும். பிரணவத் தின் விரிவே கிரமம் மாறி வந்துள்ளது. திருவாய் மொழி மூல, த்வய மந்தி ரங்களை விளக்கும் வகையில் அமைந்தது என்று முன்பே கூறப்பட்டது. பிரணவத்தின் விரிவில் 'உகாரம்' பெரிய பிராட்டியை கூறும் என்பதனை அறிந்துள்ளோம். பகவானுக்கு மட்டும் சேஷ பூதையான "திரு" கணமும் பகவானைப் பிரியாமல் அவன் மார்பினிலே உறைபவள். பிராட்டியை முன் வைத்தே பிரபத்தி செய்வதால், பகவானுக்கு புருஷகாரமாக விளங்குபவள் திரு. உயர்வற உயர்ந்த நலமுடையவனுக்கு நலமான போக்யம். திருவான பிராட்டியை முன் வைத்தே தவ்ய மந்திரம் தொடங்குவது போன்று, திருவை முன் வைத்தே பாசுரத்தை தொடங்கினார் ஆழ்வார். இது பாசு ரத்தின் முதலடித்துவக்கம் உணர்த்தும் வகை.

இரண்டாவது அடி 'மகாரத்தில்' ஆரம்பம். 'மகாரம் சீவர்களை குறிப் பதாகும். சீவ, இறை தொடர்புக்கு காரணமான திருவை மார்பில் கொண்ட பகவான் சீவர்களுக்கு எளியவன், பரம உபகாரி, அபயக் குரலுக்கு செவி சாய்ப்பவன், தனக்குச் செய்யும் கைங்கர்யத்தில் உகந்து உய்வளிப்பவன். அவ்வகையிலும் உயர்வற உயர்ந்தவன், சீவரான ஆழ்வாருக்கு மதிநலம் அருளிச் செய்து உயர்த்தியவனின் நீர்மையை உணர்த்த மகாரத்தை முன்வைத்து இரண்டாம் அடியை அமைத்த பாங்கு.

அயனுக்கும் அரனுக்கும் மேற்பட்ட உயர்த்தியினால், பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணனே என்பதனை உணர்த்தும் அகாரத்தை, அமரர்களுக்கு அதிபதியை சொல்லும் வகையில் மூன்றாம் அடியின் தொடக்கத்திலிட்டு வேதம் தமிழ் செய்த மறையை ஓதுவதற்கு முன்னம், வேதம் தானே காட்டிக் கொடுத்த மரபைச் சார்ந்து, பிரணவத்தை ஓதியது, ஸ்வாமி நம்மாழ்வாருக்கு மயர்வற மதிநலம் அருளிச் செய்த நேர்த்தியை அனுப வித்து அனுபவித்து நாமும் உயர வேண்டாமா?

ஞானத்திற்கு இடமான ஆத்மா, ஒரு சேதனப் பொருள். உடல், புலன் கள், மனம், பிராணன் ஆகியவைகளுக்கு வேறுபட்டது ஆத்மா. எனினும்

நெருங்கிய தொடர்பு கொண்டது. அவ்வகையில் உடலிலும், உணர்விலும், ஞானத்திலும் படர்ந்துள்ள ஆத்ம பொருளை தான் உணர்ந்த வகையை கூறுகிறார் ஆழ்வார். அப்பாசுரம் (8.8.5)

*"நின்ற ஒன்றை உணர்தேனுக்கு*
*அதன் நுண்நேர்மை அது இது என்று*
*ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது*
*உணர்ந்தும், மேலும் காண்*
*சென்று சென்று பரம்பரமாய்*
*யாதும் இன்றித்தேய்ந்து அற்று*
*நன்று தீது என்று அறிவு அரிதாய்*
*நன்றாய் ஞானம் கடந்ததே".*

உடல், புலன்கள், மனம் ஆகியவைகள் அநித்யம். உடலை தாங்குவதும், அதை நியமிப்பதும், அதற்கு சேஷீயான அழிவில்லாத ஆத்ம பொருளை "நின்ற ஒன்றை" என்று குறிப்பிடுகிறார் ஆழ்வார். நின்ற ஒன்றை எப்படி உணர்ந்தாராம் ஆழ்வார்? அதற்கு மறையையே உபமானமாகக் காட்டுகிறார். தைத்தீர்ய உபநிஷத்தில் அன்னமயமான உடலைக் காட்டிலும் வேறுபட்டது பிராணமயம். பிரணமயத்தைக் காட்டிலும், 'மனோபயம்' அதற்கு மேல் விஞ்ஞானமயம், அதற்கும் மேல் உணர அரிது என்பதனை "சென்று சென்று பரம்பரமாய்" என்று குறிப்பிடுகிறார். பிராகிருத தொடர்புள்ள பொருள்களின் தன்மையில், நல்லது தீயது பாகுபாடு அறிவதற்கு அரிதாயிருக்குமாம். உடல், புலன் இவைகளின்று வேறுபட்ட ஆத்மாவை அறிவது மிக அரிது. புலன்களுக்கு எட்டவே எட்டாது என்பதனை "நன்று தீது என்று அறிவு அரிதாய் நன்றாய் ஞானம் கடந்ததே" என்று தெரிவிக்கிறார். பின்னை அதை உணர்வது எப்படியோ என்பதற்கு, பிரகாரியான எம்பெருமானால் மதிநலம் அருளச் செய்யப்பட்டமையால், உணர்ந்தேன் என்கிறார்!

கைவல்யமான ஆத்மாதுபவம் தாழ்ந்தது. பகவத் அனுபவமே நாடப்பட வேண்டியது என்பது குறிப்பு (தேர்ந்த பொருள்)

எட்டெழுத்து மந்திரம் விளங்கும் சம்பந்த ஞானமான தந்தை, தனயன் உறவு மற்றும் சரீரி சரீரம் உறவு ஆகியவைகளைப் பற்றி, ஆழ்வாரின் கூற்றைக் காண்போம்.

நமக்கு எல்லாவித உறவுமாய் உற்ற துணையுமாய் இருப்பவன் எம்பெருமானான ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே. அவனே தந்தையும் தாயுமாக இருக்கும் போது, எனக்கு எந்தக் குறையுமில்லை எதைப்பற்றியும் சிந்தனையும் இல்லை என்று களிப்புடன் பேசும் பாசுரத்தில் சம்பந்த

ஞானம் விளக்கப்படுகிறது. (திருவாசிரியம் 70)

*"அடர் பொன் முடியானை யாயிரம் பேரானை*
*சுடர்கொள் சுடராழியானை இடர்கடியும்*
*மாதா பிதுவாக வைத்தேன் எனதுள்ளே*
*யாதாகில் யாதே இனி?*

நாராங்களான சேதன அசேதனங்களை தாங்குபவனாகவும், தனக்கு இருப்பிடமாகவும் கொண்ட நிலையில், பரம்பொருள் ஸ்ரீமந் நாரா யணனே என்று அறுதியிட்டு கூற முடியும். எம்பெருமானுக்கு அடிமையான ஆத்மாவானது, தன்னை விட்டுப் பிரிந்திராத உடலைப் போல, சர்வ சேஷீ யான எம்பெருமானை விட்டு தான் வேறாக இருப்பதில்லை. அதாவது சேதன அசேதனங்கள் பகவானுக்கு உடல் என்ற வகையில் சரீரி.சரீர பாவனையை விளக்கும் பாசுரம். (1.1.7)

*"திடவிசும்பொரிவளி நீர் நில மாவை மிசைப்*
*படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும்*
*உடல் மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்*
*சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே".*

பகவானின் வியூக உருவங்கள் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத் யும்னன் அநிருத்தன் என்று நான்காகும். இவை திருப்பாற் கடலில் யோக நித்திரை கொண்டவை என்பது ஆழ்வாரின் கூற்று.

ஒரு மூர்த்தியாகி, இரு மூர்த்தியாகி, மும்மூர்த்தியாகி, பலமூர்த்தி யாகி, ஐம்பூதங்களாகி, இருசுடர்களான சூர்ய சந்திரர்களாகி, அவற் றுக்கு உள்ளுயிராகி திருப்பாற் கடலில், ஆதிசேஷனான படுக்கையில் யோக நித்திரை செய்யும் நாராயணனே, உன் திருமேனிக்கு வேண்டிய சாந்து, பூமாலை முதலான இன்பப் பொருள்களெல்லாம் என்னுள்ளே யாகும்படி செய்து உன் திருவுள்ளம் துன்பங்களை நீக்குகிறது.

அப்பாசுரம் (4.3.3)

*"ஏகமூர்த்தி இருமூர்த்தி மும்மூர்த்தி பலமூர்த்தி*
*ஆகி ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி*
*நாகம் ஏறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே*
*ஆகமுற்றும் அகத்து அடக்கி ஆவி அல்லல் மாய்த்ததே"*

இப்பாசுரத்தின் ஆழ் பொருள், படைப்பிற்கு முன் உள்ள "சத்" என்ற நிலை ஏக மூர்த்தி; பிரகிருதியும் அதன் கார்யங்களான மஹத் முதலா னதுகளை சரீரமாக கொண்ட இருப்பு இருமூர்த்தி; சாத்வீக, ராஜஸ, தாமஸ ஆகிய மூன்று வித அகங்காரங்களோடு இருக்கும் இருப்பு மும்மூர்த்தி; அகங்காரங்களின் கார்யங்களை திருமேனியாகக் கொண்ட இருப்பு பலமூர்த்தி; சூர்ய சந்திரர்களான இருசுடர்களுக்கு அந்தர்மியான நிலையே அருவாகி திருப்பாற் கடலில் யோக நித்திரை செய்வது!

(இதில் அகங்காரங்கள் என்று குறிப்பிடப்பட்டது. நாம் அறிந்த அகம் பாவமான அகங்காரம் அல்ல)

பகவானின் அந்தர்யாமித்வம் பேசப்படும் பாசுரம் : (1.9.6)

*“மாயன் என்னெஞ்சிலுள்ளான் மற்றும் யவர்க்கும் அஃதே*
*காயமும் சீவனும் தானே காலூமெரியுமவனே*
*சேயனணியன் யவர்க்கும் சிந்தைக்கும் கோசுரமல்லன்*
*தூயன் துயக்கன் மயக்கன் என்னுடைத் தேணிணையானே”*

எனது மார்பினில் தங்கியவன் எங்கிருந்தோ வந்தவனல்லன். என் உடலிலும் மற்ற உடல்களிலும், அவைகளில் உள்ள ஆத்மாக்களிலும், அவற்றிற்கு காரணமான ஐம்பூதங்கள் போன்றவற்றிலும் அந்தராத்மாவாக இருப்பவனே அவன். என்பது பாசுரத்தின் பொருள்.

பக்தி யோகம் மிக கடினம். அதை எல்லோராலும் அனுசரிக்க இய லாது. ஆதலால் அவனது திருவடிகளையே தஞ்சமாகப் பற்றி, சரண் அடைந்தால், மேல் வீடான உறுதிப்பொருள் கிடைப்பது திண்ணம், என்று அறுதியிட்டு ஆழ்வார் கூறும் பாசுரம் (9.10.5)

*“சரணம் ஆகும் தன தாளடைந்தார்க்கெல்லாம்*
*மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்*
*அரண் அமைந்த மதில் சூழ் திருகண்ணபுரத்*
*தரணியாளன் தனதன்பாக்கன் பாகுமே”.*



## இயல் 16

# மந்திரம் கொண்ட திருவாய்மொழி

திருமந்திரத்தையும், த்வயத்தையும் விளங்கச் செய்வது திருவாய்மொழி என்பது ஒருமிக்கக் கருத்து!

திருமந்திரம் "ஓம் நமோ நாராயணாய" என்பதாகும். மந்திரம் காட்டிக் கொடுக்கும் விரிவான பொருள்களை முந்தைய இயல்களில் அறிந்தோம்!

இந்த மந்திரத்தை தினமும், நாம் உச்சரிக்கும் போது (அனுட்டிக்கும் போது) விளங்க கூறப்படுவது யாதெனில்

| | | | |
|---|---|---|---|
| ஓம் — | அ | = | பெரிய பிராட்டியைக் கணமும் பிரியாது தன் மார்பினில் கொண்டு, லோக நாயகனாய், அனந்தகல்யாண குணங்கள் கொண்ட எம்பெருமானின், |
| | ஆய | = | 4ம் வேற்றுமை (சதுர்த்தி) பொருட்டு |
| | உ | = | மற்ற எவர்க்கும் அடிமையல்லாதவன் (சேஷபூதன் அல்லன்) |
| | ம | = | உடல், புலன், பிராணன் ஆகியவைகளுக்கு மாறுபட்டவனாய், அணுவாய், நித்யமாய், ஞானமாய், ஞானகுணத்தினனும், சேஷ பூதனுமான அடியேன் (சீவன்) |
| நமோ — | நம | = | நான் எனது என்பதில் உரிமையற்றவன் சுதந்திரன் அல்லன், பகவானுக்கே வசப் பட்டவன் (பரதந்திரன்) அவனே உபாயமும் உபேயமும், |
| நாராயண — | நாராயண | = | எல்லாவற்றுக்கும் ஆதாரமாகவும், எல்லோரையும் நியமிப்பவனாயும், எங்கும், அந்தர்மியாயும், திருவோடு சேர்ந்தே இருக்கும் ஆனந்தனான எம்பெருமானின் |

ஆய — ஆய = 4ம் வேற்றுமை (சதுர்த்தி) பொருட்டு, பலன் கருதாது, அகங்கார மமகாரம் இன்றி கைங்கர்யம் செய்கிறேன். இந்நிலை நீடித்திருக்க வேண்டி எம்பெருமான் அருள் புரியட்டும்.

நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களுமே, திருமந்திரத்துடன் தொடர்பு கொண்டவை. முதல் மூன்று பிரந்தங்களில் சுறுங்க கூறப்பட்ட மந்திரார்த்தங்களின், விரிவே திருவாய் மொழியில் விளங்க கூறப்பட்டுள் ளது. எனினும் விரிவுக்கு அஞ்சி, மந்திரங்களை விளக்கும் பாசுரக் குறிப் புகளை மட்டிலும் சொல்லுவேன்.

முதல் திருவாய்மொழி: முதல் பாசுரத்தில் உயர்வற உயர்நலமுடை யவன் பரன் என்று விளக்கி, பத்தாவது பாசுரத்தில், எம்பெருமானே சர்வ சேஷீ, என்று ஓங்காரத்தின் (பிரணவம்) பொருள் விரிந்துறைக்கப்பட்டது.

இரண்டாவது திருவாய்மொழி: நம: என்ற பதத்தின் பொருளைக் கூறுவதாக அமையப் பெற்றது.

மூன்றாவது திருவாய் மொழி: பரன் என்பவன் ஸ்ரீமந்நாராயணனே, எப்படியெனில், மனமும் வாக்கும் எட்ட முடியாத உயர்த்தி, மதியையும், நலத்தையும், அருளுபவன்; நித்ய விபூதி பிராதனான, அமரர்களுக்கதிபதி, சேதனர்களுக்கு சர்வசேஷீயானவன், என்று பரத்வம் பேசப்பட்டதால் அவனே பரன். சேதன, அசேதனங்களிலிருந்து வேறுபட்டவன், அவன் அளிக்கும் பலன்களில், ஐசுவர்ய கைவல்யாதிகள் தாழ்ந்தவை, பிராப்ய னான அவனை அடையப் பெறுவதே நிகரற்ற உறுதிப் பொருள் (பரம புரு ஷார்த்தம்) என்றும், அவன் இப்படித்தான் இருப்பான் என்று கூற முடி யாதபடி, சூக்கும நிலையிலும், தூல நிலையிலும் அனைத்தையும் தன்னுள் கொண்டு, எங்கும் கலந்து நின்று, இதர தேவதைகளுக்கு மேம்பட்ட வனான அவனுக்கே என்றென்றும் கைங்கர்ய பரனாக இருக்கும் நிலை பேசப்படுகிறது.

முதல் முன்னூறு பாசுரங்களின் தெளிவு, முதல் முப்பது பாசுரங் களி லும், அவைகளின் தெளிவு முதல் மூன்று பாசுரங்களிலும், அத் தெளிவே ரத்ன சுறுக்கமாக முதல் மூன்று அடிகளில் காணக் கிடைக்கின்றது என்று நாம் 14வது இயலில் கூறியுள்ளபடி அமைந்த நேர்த்தியைக் கண்டோம் !

இனி, த்வய மந்திரார்த்த விளக்கத்தைக் காண்போம்.

த்வயம் என்றால் இரண்டு என்று பொருள், ஆக த்வயம் என்பது இரண்டாவது மந்திரம். அது.

*"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே*
*ஸ்ரீமதே நாராயணாய நம:"*

சேதனர்களைக் காக்குமாறு எம்பெருமானிடம் பரிந்துரைத்து, புருஷ காரமாக விளங்கும் பெரிய பிராட்டியை கூறுவதாக அமையப் பெற்றது, "ஸ்ரீமந்" என்ற சொல்லிலுள்ள ஸ்ரீஎப்பொழுதும் சேர்ந்தே இருத்தல் என்று பொருள் படும். (சேர்ந்தே இருக்கும் நிலையை "சம்ஹிதாகாரம்" என்று பணித்துள்ளார் பெரிய வாச்சான்பிள்ளை) "மதுப்" விகுதி "மந்" என்றா யிற்று. அதனால், கணமும் எம்பெருமானைப் பிரியாதவளாகவும், தன்னை அண்டியவர்களை காப்பாற்றி ரக்ஷிக்கும் புருஷகார பூதையான பெரிய பிராட்டியாரான திரு, ஸ்ரீமந் என்ற சொல்லால் அறியப்படுகிறாள்.

சேதனர்களைக் காப்பதற்கு, தன்னை தாழ்த்திக் கொள்ளும் தன்மை யான நீர்மை, குற்றங்களைப் பொருட்படுத்தாத அன்பு, எளியனாகவும், சுல பனாகவும் இருத்தல், ஆகிய அனந்த கல்யாண குணங்கள் கொண்ட ச்ரியை பதியான எம்பெருமானை சொல்வது "நாராயண" என்ற பதம்.

பகவானின் திருவடிகளைச் சொல்வது "சரணௌ" என்ற சொல். திருவடிகள் தனித்து இருக்க முடியாததால், திவ்ய மங்கள திருமேனி யையே குறிப்பிடும் வகையில் அமைந்தது.

திருவடிகளைப் பற்றுவதே உய்யும் வழி, மற்றெதுவும் உய்விக்க இய லாதது என்பதைக் காட்ட "சரணம்" என்ற சொல்.

அதுவே உபாயம் என்றுணர்ந்து அவைகளைப் பற்றுகிறேன் என்று சொல்வதே, "பிரபத்யே".

இரண்டாவது வாக்கியத்தில் உள்ள "ஸ்ரீமதே நாராயணாய" என்ற தொடர் எப்பொழுதும் சேர்த்தியில் இருக்கும் திவ்யதம்பதிக்கு என்றென் றும் கைங்கர்யம் புரிவேனாக, என்பதாகும்.

நம: என்ற இறுதிச் சொல், சுவர்க்க, நரக, கைவல்யாதிகள், பெறு வதற்கேற்ப அமைந்த வினைப்பயன்கள், பிராகிருத தொடர்பு, ஆகியவை கள் அற்று, பரம போக்யமான பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டு, ஆனந்த அனுபவத்தை பெறுவதற்கு அருள் பாலிப்பாயாக என்பது உணர்த்தப் படுகிறது.

த்வயத்தின் இரண்டு வாக்கியங்களுள், முதல் வாக்கியம் உபாயமான உய்வு பெறும் வழியை முதலில் கூறி, இரண்டாவது வாக்கியத்தில் உபே யமான நித்யகைங்கர்யமே பரமபுருஷார்த்தம் என்ற பலனை பின்னால் சொல்வது போல அமைந்துள்ளது.

பொதுவாக உலகியலில், பெறப்போகும் பயனை (உபேயம்) முதலில் அறிந்தே செயலை (உபாயம்) மேற் கொள்வது மரபு. ஒரு பயனில் விருப்பங்

கொண்டு ஆசையுண்டானால், அதற்குரிய வழி எது என்ற விசாரம் பிறகே தோன்றுவது இயல்பு.

த்வயத்தின் முதல் வாக்கியம் கூறும் உபாயமும், இரண்டாவது வாக்கியம் கூறும் உபேயமும் ஒரே பொருளான ஸ்ரீமந்நாராயணனே.

அதனால், உலகியல்படி, ஆழ்வாரும் இரண்டாவது வாக்யம் கூறும், உபேயத்தைக் கூறும் பாசுரங்களை முதலில் அமைத்து, விளக்கமாக கூற வேண்டிய உபாயத்தைக் கூறும் பாசுரங்களை பின் அமைத்ததும் பொருத்தமே.

உயர்வற உயர்நலம் உடையவனும் மயர்வற மதிநலம் அருளுபவனும், அமரர்களதிபதியானவனுமான ஸ்ரீமந்நாராயணனின் துயரறு சுடரடிகளை தொழுதெழு என்று பரம புருஷார்த்தமான பகவத்கைங்கர்யமே பெறப்படும் பலன் என்று உபேயத்வத்தை முதலில் கூறுகிறார். மேலும், தன் கூற்றுக் குச் சான்றாக, "அவன் உளன் சுடர்மிகு சுருதியுள்" (1.1.7) என்றும், சர்வ வேதங்களாலும் முதல்வன் என்று கூறப்படும் பரமனே "வண்புகழ் நார ணன்" (1.2.10) என்றும், "செல்வ நாரணன்" (1.3.10) என்றும் பகவத் கைங்கர்யமே பரமபுருஷார்த்தம் "சொல் பணிசெய் ஆயிரம்" (1.10.11) என்றும் அறுதியிடுகிறார் முதல் பத்தில்.

பகவத் கைங்கர்யத்திற்கு விரோதியான பிராகிருத தொடர்பு கழி வதையும், அவனது கழலடிகளையே சரணமாகப் பற்ற வேண்டும் என்பதை இனிவரும் பத்துக்களில் விளக்குகிறார்.

"நெறி கொண்ட நெஞ்சனாய் பிறவித்துயர் கடிந்தே" (2.3.8) என்று உலகத் தொடர்பு ஒழிக்கும் வகையை பின்பற்றியும்; "செய்குந்தா! உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே" (2.6.1) என்று வைகுந் தனை சிக்கெனப் பிடித்துக் கொண்டேன் என்று மகிழ்ந்து பேசுவதும்; "எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே" (2.9.4) என்று எனக்காகவே கொள்ளும் அவனது சுடரடியே துயர் அறுக்கும் என்று விரோதி ஒழிப்பு பேசப்படுகிறது இரண்டாம் திருவாய்மொழியில்

கைங்கர்ய விரோதிகளை, நெற்பயிரினூடே வளரும் களைக்கு ஒப்பிட்டு, களை எடுக்கப்பட்ட (கைங்கர்ய விரோதிகளை ஒழித்து) பகவத் கைங்கர்யமே, பாகவத சேஷத்வ பரியந்தமான கைங்கர்யம், என விளக் கப்படுவது, மூன்றாம் திருவாய் மொழியில்.

ஐசுவர்ய கைவல்யாதிகள், பகவத் ப்ராப்திக்கு விரோதிகள். உலகப் பற்றை அறுத்து, புலனடக்கி உடலை ஒறுத்த தவம் செய்து, இன் சுவர்கம், புகினும் மீண்டும் உலகிற்கே வருவார்களாம். உலகப் பற்றை ஒழித்து புல னடக்கி எம்பெருமானின் திருவடிகளில் நோக்குவைத்தால் மீண்டும்

வருகையே இல்லையாம். இப்படி கூறப்படுவது நான்காம் திருவாய்மொழி (4.1.9) அது

*"படிமன்னு பல்கலன் பற்றோடறுத்து ஐம்புலன் வென்று*
*செடிமன்னு காயம் செற்றார்களும் ஆங்கவனையில்லார்*
*குடிமன்னும் இன் சுவர்க்கம் எய்தியும் மீளவர்கள் மீளவில்லை*
*கொடிமன்னு புள்ளுடை அண்ணல் கழல்கள் குறுகுமினோ!!"*

அந்த விரோதிகளை போக்குபவனும் அவனே, அதாவது அவனது கழல்களே, என்று அறுதியிட்டு கூறுகிறார் ஆழ்வார். இப்படி கூறுவது அகத்துறை பாசுரம். (5.9.3) திருவல்லவாழ் திவ்ய தேசத்தில் நித்ய வாசம் செய்யும் எம்பெருமானின் திருவடிகளைப் பற்றி நித்யானுபவம் பண்ணப் பெறும் நாள் எப்பொழுதோ, என்று தோழிகளைப் பார்த்து தலைவி கூறு வது போல அமைந்தது. ஐந்தாம் திருவாய் மொழியில்.

*" ------------- அடியேன் உன்*
*அடிக்கீழ்அமர்ந்து புகுந்தேனே"*

என்று அலர்மேல் மங்கை உறைமார்பனிடம் சரணம் அடைவது ஆறாம் திருவாய்மொழியில்

இவ்வகையில் உபேயத்வத்தை முதல் மூன்று திருவாய்மொழிகளிலும், உபாயத்வத்தை நான்கு, ஐந்து, ஆறு ஆகிய திருவாய்மொழிகளிலும் அருளிச் செய்ததை அறிந்தோம்.

நம: என்பது அநிஷ்ட நிவ்ருத்தியை சொல்வது, அது பரமனுக்கே ஆதினம்! அதனால் பலன் விளம்பித்தே கிடைக்கும்! பலன் உடனேயே கிடைக்கவில்லையே என்று துயருருவது ஏழாம் திருவாய்மொழியில்.

பிரபத்தி செய்தும், ஆத்ம தொடர்பு கொண்ட பொருள்களில் இன்னும் ஒட்டுதல் இருக்குமோ என்ற எண்ணம் போக, கேசவனே, நார ணனே, மாலே, ஹரியே, என்று பலபடி என்னை கூப்பிட வைத்து, உன்னைக் காண்பதற்குரிய அடையாளத்தை காட்டாதிருக்கின்றாயே. நான் என்ன செய்ய, இப்படியே எவ்வளவு காலங்கழிந்தாலும், உன்னை நான் காண்பது உறுதி என்று ஆணை இடுகிறார். எட்டாம் திருவாய்மொழி பாசுரத்தில் (8.2.7) அது

*"மாலரி கேசவன் நாரணன் சீ*
*மாதவன், கோவிந்தன், வைகுந்தன் என்று*
*ஓலமிட என்னைப்பண்ணி விட்டிட்*
*டொன்றும் உருவும் சுவடும் காட்டான்*
*ஏலமலர்குழல் அன்னை மீர்காள்*
*என்னுடைத்தோழியர்காள் என் செய்கேன்*
*காலம் பல சென்றும் காண்பதாணை;*
*உங்களோ டெங்களிடையில்லையே".*

இது ஒரு அகத்துறை பாசுரம் (மகள் பாசுரம்).

ஒன்பதாம் திருவாய்மொழியில் தன்னை ரக்ஷிக்க முன்வந்த, ஸ்ரீமந் நாராயணனின் சீலத்தை, அனுபவிக்கிறார் ஆழ்வார். மானசீகமாக கண்ட பகவானின் திவ்யதேஜஸ்ஸில் மூழ்கி அப்படியே வாரி முழுங்க வேண்டும் என எண்ணுகிறார். அதற்குள் பகவான் முந்திக்கொண்டு ஆழ்வாரை நீர் கொள்ளும் பாண்டமாக மாற்றி நீரோடு பருகி விடுகிறாராம்! அப்பாசுரம் (9.6.10)

ஆழ்வாரை அர்ச்சிராதி மார்க்கமாக அழைத்துச் சென்று திருவடி சேர்த்துக் கொள்ள திருவுள்ளம் பற்றுகிறானாம் என்று கூறி, த்வயத்திற்கு மோக்கபலத்திலே (மோக்ஷபலத்திலே) நோக்கு, என்பதனை விளக்கி பாசு ரத்தை தலைகட்டுகிறார். அப்பாசுரம் (10.10.11)

*“அவா வறச் சூழ்அரியை அயனை அவனை அலற்றி*
*அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபன் சொன்ன*
*அவா விலந்தாதிகளால் இவையாயிரமும் முடிந்த*
*அவாவிலந்தாதியிப் பத்தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே”.*



## இயல் 17

# ஐம்பொருள் விளக்கும் திருவாய்மொழி

நிரந்தர உறுதிப் பொருளான 'வீடு' என்பதைப் பெறுவதற்கு சேதனன் அறிய வேண்டியவைகளுள் ஐம்பொருள் (அர்த்தபஞ்சகம்) விளக்கமு மாகும். இவைகளை விவரமாக எடுத்துரைக்கும் பாசுரங்களை ஆழ்வார் திருவாய்மொழியில் அருளிச் செய்தபடியால், அதன் காரணமாகவும் திரு வாய் மொழி மறையாயிற்று.

ஐம்பொருள்கள் என்பது; எம்பெருமானின் இயல்பு; சீவனின் இயல்பு; சீவன் பெறும் பயன்; அப்பயனை அடையும் வழி; அடைவதற்கு தடையாக உள்ளவைகள், ஆகியவைகள்.

இதன் விளக்கத்தை இப்பொழுது காண்போம்.

பகவானின் இயல்பு, சேதன அசேதனங்களுக்கு ஆத்மாவாக இருப் பவன். அவற்றைச் சரீரமாகக் கொண்டவன். மாறுபடாத தன்மை படைத் தவன், ஞானானந்த ஸ்வரூபன், காலத்தாலும், இடத்தாலும், பொருளாலும் அளவிட்டு பேச முடியாதவன். உபாயமாகவும் உபேயமாகவும் இருப்பவன். காட்டித் தரும் சத்யங்களான வேதங்களால் அறியப்படுபவன், அனைத்தை யும் படைத்து, காப்பாற்றி அழிப்பவன், சகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவன், எங்கும் பரவி உள்ளவன், திருமகள் கேள்வன் ஆகிய இயல்புகளைக் கொண்டவனே பரமனான ஸ்ரீமந் நாராயணன்.

உயர்வற உயர்ந்தவன், உயர் நலங்களான, அனந்த கல்யாண குணங் களை கொண்டவன் என்பதனைக் காட்டிக் கொடுக்கும் திருவாய் மொழி பாசுரம். (1.1.1)

பரமனை, ஒன்று உடையவன் ஒன்று இல்லாதவன் என எண்ண ஒண்ணாது.

புலன்களோடு இலக்கானவர்களோடு சேர்ந்திருந்தும், புலன்களுக்கு இலக்காதவன். இதனால் சரீரியின் தொடர்பு பிரியாத நிலை விளக்கப் படும் பாசுரம் (1.1.3)

நித்ய விபூதி, லீலாவிபூதி ஆகிய இரண்டு விபூதிகளுக்கு தலைவன் என்பதனை பேசும் பாசுரங்கள், (1.4.10) - (1.2.2). அனைவருக்கும் மேம்பட் டவன் என்பதனைக் கூறும் பாசுரம் (1.2.10)

திருவை கணமும் பிரியாதவன் என்பதனை பேசும் பாசுரங்களுள் (4.5.2) - (4.5.8) (.6.3.9) ஆகிய பாசுரங்கள் சில.

உள்ளும் புறமும் வியாபித்தவன் அவன் இல்லாத இடமே இல்லை என்பதனை விளக்கும் பாசுரம் (4.7.6)

அனைத்துப் பொருள்களிலும் நிறைந்துள்ள பகவானை விளக்கமாக தெரிவிப்பது வியாபக மந்திரங்கள். இதன்படி மால், விஷ்ணு, வாசுதேவன் என்ற நாமங்கள் நாராயணனையே சொல்வதாயிருப்பினும், அவனது புகழ், குண விசேஷங்களை சேர்த்தே சொல்வதே ஆழ்வாரின் திருவுள்ளம். போலும் அவ்வகையில் செல்வ நாரணன் (1.10.8) திண்ணம் நாரணம் (10.5.1) வாழ் புகழ் நாரணன் (10.9.1) என்று ஒருவனான பரம் பொருள் அறியப்படுவது நாரணனான ஸ்ரீமந் நாராயணனே என்பது திண்ணம்.

அனாதிகாலமாக வினைப்பயன்களால் கட்டுண்டவர்கள் சீவர்கள். ஞானத்தை சொரூபமாகக் கொண்டவர்கள், ஞானத்தையே குணமாகக் கொண்டினும், வினைப்பயன்களைச் சார்ந்து அளவு பட்ட ஞானத்தை கொண்டவர்கள். அணு அளவே உள்ளவர்கள். உடலைக் காட்டிலும் வேறு பட்டவர்கள். எம்பெருமானுக்கு மட்டும் சேஷ பூதர்கள். இடத்தாலும் காலத் தாலும் பொருளாலும் வரையறுக்கப்பட்டவர்கள்.

இவை சீவர்கள் இயல்பு.

உடலிற்கு சீவன் ஆதேயமாயும், விதேயமாயும் சேஷீயாயும் இருப்பது போன்று, சீவாத்மாவிற்கு எம்பெருமான் ஆதேயமாயும், விதேயமாயும் சேஷீ யாயும் இருப்பதினால் பகவானே தாரகன், நியாமகன், ஏவுகின்றவன், சர்வ சேஷீ, தன் திருவுள்ளம் போல செயல்படுபவன்.

இவ்வகையில் சரீர ஆத்மபாவனை; எம்பெருமானுக்கே அடிமையா யிருத்தல், என்ற அநந்யார்க சேஷத்வம்; அடியார்களுக்கும் அடிமையா யிருப்பது; பாகவத சேஷத்வத்தை எல்லையாகக் கொண்ட பகவத் சேஷத் வம் ஆகிய சீவ இயல்புகளை தன்னுள் கொண்ட பாசுரங்களில் சில (1.1.7.) - (2.9.4) - (8.8.10).

மூன்றாவதாக அடையும் பயன், வீடு என்பதினைக் கூறும் வகை.

பகவத் கைங்கர்யமே பரம புருஷார்த்தம் என்றும், அவனது சகல கல்யாண குணங்களில் ஈடுபாடு கொண்டு அனுபவிப்பதினால் உண்டா கும் ஆனந்தமே அடையப்படும் பயன், என்பதாம்.

இவைகளை ஆழ்வார் அருளிச் செய்வது (2.9.1) - (3.3.1) (8.10.1) பாசுரங்களில் சில.

நான்காவதாக பயனை அடைவதற்கு அடையும் வழி விளக்கப்படுகிறது.

பக்தி நெறி அனுசரிப்பதற்கு மிக கடினமானது, தகுதி வரையறைகள் கொண்டது, அனைவராலும் கடைப்பிடிக்க முடியாதது. ஆதலால் தகுதி வரையறைகள் இல்லாததும், அனைவரும் கடைப்பிடிக்க ஏதுவாக அமைந் ததுமான நெறி, பிரபத்தியாகும். பல பாசுரங்களில் இந்த நெறியை ஆழ்வார் விளக்கியுள்ளார். அவைகளுள் சில (5.7.1) (5.10.11) (5.8.11) பாசுரங்கள் ஆகும்.

ஐந்தாவதாக தடைகளான ஊழ்வினைகள், விளக்கப்படுகின்றன.

அவித்யா, கர்மவாசனை, ருசி பிரகிருதி தொடர்பு, ஆகியவைகள் தடையாக இருப்பவைகள். இவைகளில் முதன்மையானது, அனாதிகால மாக வேதங்களுள் சொல்லியிருப்பவைகளை சார்ந்து நடக்காமல் பகவத் ப்ரீதிக்கு பாத்திரமாகாமல், பகவத் தொடர்பு அற்று இருக்கும் நிலை, சேத னர்களுக்கு பல வகையில் துன்பத்தை உண்டாக்கும் இயப்புடையது. முக்குணங்களான பிராகிருத தொடர்பால், பல பிறப்புகளுக்கு காரணமாக இருப்பதே ஊழ்வினைகளான தடைகளாகும்.

ஐசுவர்ய கைவல்யாதிகள் உலக பந்தத்திற்கு வழி வகுப்பவைகள் என்ற வகையில். அதை தடையாக கூறும் பாசுரம் (4.1.1) உலக தொடர் பைக் காட்டிலும் எம் பெருமானின் தொடர்பே சிறந்தது என்பதை விளக் கும் பாசுரம். 9.9.1.

ஐம்பொருள்களை விளக்கும் திருவாய் மொழிப் பாசுரங்களில் ஒரு சில மட்டும் இங்கே கொடுக்கப்பட்டுள்ளது. விரிவுக்கு அஞ்சி பாசுரப் பொருள் கூறப்படவில்லை.

கூரத்தாழ்வாழின் திருக்குமாரர் பராசரபட்டர் அருளிச் செய்த திரு வாய்மொழித் தனியனின் விளக்கமே இங்கே கூறப்பட்டது. (தனியன் 14 வது இயலில் சொல்லப்பட்டுள்ளது)



# இயல் 18

# தமிழ் மறையின் ஏற்றம்

திருமால் திருவடிச் செல்வர்களான, ஆழ்வார்களுள், நம்மாழ்வர்ரை, மிகச் சிறந்தவராகப் போற்றிப் புகழ்கின்றது, வைணவம். ஏனெனில், திவ்ய பிரபந்தங்களுள், திருவாய்மொழியே நம்மாழ்வாரின் அருளிச் செயல் களுள், "பகவத் விஷயம்" என்று சிறப்பித்து பேசப்படுவதினால் உயர்வு பெற்றது.

திருவாய்மொழியின் பெருமையையும் உயர்த்தியையும் பாராட்டி வட மொழியிலும் தமிழ் மொழியிலும் பல நூல்கள் உள.

திருவரங்கத்து அரவணையானினால், "கவிதார்கிகசிம்மம்" என்ற சிறப்பு விருதினைப் பெற்ற வைணவ ஆச்சார்யார் ஸ்வாமி ஸ்ரீமத் நிகமாந்த மகா தேசிகன் அருளிச் செய்த சிறந்த வடமொழி நூல்களான, "திராவி டோபநிஷத் சாரம்" மற்றும் "திராவிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளி" என்ற நூல்கள் திருவாய் மொழியின் சிறப்பினை பாராட்டிப் பேசும் வகையில் அமைந்தவை.

திருவாய்மொழியின் சிறப்பைப் போற்றி, வெகு உயர்வாக தமிழ் மொழியில், ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் ஒரு வெண்பாவாக நூறு வெண்பாக்கள் "திருவாய்மொழி நூற்றந்தாதி" என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டு பெரும் புகழ் கொண்டவர் வைணவத்தின் மற்றொரு சிறப்பு மிக்க ஆச்சார்யார்ரான மணவாள மாமுனிகளாகும்.

மதுரகவிகளோ திருவாய் மொழியின் பெருமையைப் பத்தே பாசுரங் களில் போற்றியுள்ளார். பொருளாழம் கொண்ட பிரபந்தம் என்பதினால், மதுரகவிகளுக்கு பத்தே பாசுரங்கள் போதுமானதாக இருந்ததாம்.

மதுரகவிகள் அருளிச் செய்த ஒரு பாசுரத்தின் இறுதி அடிகள்

*"தேவுமற்றறியேன் குருகூர் நம்பி*
*பாவினின்னிசை பாடித்திரிவேனே".*

என்று அமையப் பெற்றவை. திருவாய்மொழிப் பாசுரங்களின் நுட்ப பொருட் செறிவை கசடறக் கற்றுணர்ந்த மதுரகவிகள், "அப்பண்ணார் பாடல்களை இன்னிசையாகப் பாடித் திரிவேன் என்று கூறாமல் திரிவேனே என்று தேற்றேகார விகுதி இட்டு கூறியதின் நோக்கு, பகவத் விஷயமான திருவாய் மொழியின் பெருமையை, மக்களிடையே பரப்புவதையே பரம போக்யமாக கொண்டதினால் இருக்கக் கூடும். மேலும், நிரந்தர உறுதிப் பொருளான (பரமபுருஷார்த்தம்) வீடு என்ற பேற்றை பெறுவதற்கு, அனு கூலமாக அமைந்த திருவாய்மொழி செல்வத்தை வாரி வழங்கிய, நம்மாழ் வாரும் தெய்வமே, எந்ற துணிபு பெற்றமையினால், ஆழ்வாரைத் தவிர

வேறு தெய்வமறியேன் என்று கூறினார் போலும் பாகவத சேஷத்வ எல்லையே பகவத் பிராப்தி என்று மதுரகவிகளின் மாண்பே, அவரை உல கில் நெடுங்காலம் வாழ செய்திருக்கும்!

திருக்குறளுக்கு அநேக உரைகள் இருப்பினும், பரிமேலழகரின் உரை, மிக துல்லியம்.

*"பற்றற்றே கண்ணே பிறப்பறுக்கும்*
*மற்று நிலையாமை காணப்படும்".*

என்ற அறத்துப்பால் குறளிற்கு, "பற்றுகள் முழுவதும் அற்ற கணத்திலேயே பிறப்பு என்ற தீராப்பிணியும் நீங்கும். அவ்வமயம் உலகியல் போகங்களின் நிலையாமையும் அவரால் காணப்படும்" என்பது பரிமேலழகர் உரை. திரு வள்ளுவர் காலத்திற்கு வெகு ஆண்டுகளுக்கு முன்பேயே, ஆழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிப் பாசுரம் (1.2.5)

*"அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர் செற்றது*
*மன்னுறில் அற்றிறை பற்றே"*

என்ற ஈரடி வெண்பாவிற்கு, "உலகியல் விஷயங்களில் சீவனுக்கு பற்றுதல் நீங்குமேயானால், ஐசுவர்ய கைவல்யங்கள் நிலையாதது என்பதை உயிர் உணர்ந்து இறையைப் பற்றும்" என்பது பொருள்.

இரண்டு பொருளையும் ஒப்பு நோக்கின், திருவாய் மொழி பெருமை யின் உயர்த்தி நன்கு விளங்குகிறதல்லவா?

வால்மீகி இராமாயணத்தை அடியொற்றி தமிழில், இராம காவியம் படைத்து பெருமைக்குள்ளானவர், கவிச் சக்கரவர்த்தி கம்பர். ஆழ்வாரின் பெருமையையும், திருவாய் மொழியின் ஏற்றத்தையும் புகழ்ந்து பாடியுள்ளார் பெறுவதற்கரிய மறையை ஆயிரம் இன் தமிழ் பாசுரங்களில் அமைத்து அருளிச் செய்த சடகோபனின் ஆற்றலையும், பாசுரங்களின் அருமை பெரு மைகளையும் திரட்டி அந்தாதி வடிவில் நூறு வெண்பாக்கள் கொண்ட சட கோபர் அந்தாதி" என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். திருவாய்மொழியின் நூல் நயத்தையும், பொருள் செறிவையும், அகத் துறைப் பாசுரங்களை யும் போற்றிப் பேசும் வெண்பாக்களாக இயற்றியுள்ளார் கம்பர். அதிலிருந்து சில பாக்களை இப்பொழுது காண்போம்! (பாடல் 1.)

*"வேதத்தின் முன் செல்க; மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர்*
*கோதற்ற ஞானக்கொழுந்தின் முன்செல்க, குணங்கடந்த*
*போதக்கடல் எங்கள் தென் குருகூர்ப் புனிதன் கவியோர்*
*பாதத்தின் முன் செல்லுமே? தொல்லை மூலப்பரஞ்சுடரே"*

இதன் பொருள்.

வேதங்கள் அனாதி. அது இறை என்ற சத்தியத்தைக் காட்டித்தரும் சத்தியம். அவை எம்பெருமானால் உபதேசிக்கப்பட்டவைகள். ஆனால்

அவரால் உண்டாக்கப்பட்டவைகளல்ல. அதனால் எம்பெருமானால், அவைகளைக் கடந்தும் செயலாற்ற முடியும்! அதுபோல மெஞ்ஞானிகளும், கடுந்தவத்தை மேற்கொண்டு பெருமை பெற்றவர்களும், பிரும்மாதி தேவர் களுடைய ஞானத்தின் எல்லையைக் கடக்க முடியும்! ஆனால் தூயவரான சடகோபர் அருளிச் செய்த பாசுரங்களின் ஒரு அடியைக் கூட, அப் பாசுரங்களே காட்டிக் கொடுக்கும் மெய்யனான எம்பெருமானால் கடக்க முடியுமோ? அதாவது வேதத்தைக் காட்டிலும் சிறப்பாக அமைந்தது தமிழ் மறையான திருவாய்மொழி என்பது கருத்து.

நூல்நயத்தைப் பேசும் மற்றொரு வெண்பாவையும் நோக்கலாம்!

ஒரு பெரிய பானையிலுள்ள தயிரைக் கடையும் போது, மத்து சற்றே அமிழ்ந்து மிதந்தவாறு இருக்கும்படியாக கயிறைப் பிடித்து கடைய வேண்டும். அப்பொழுது தான் வெண்ணை திரண்டு வரும். கடையும் கயிறு சிறிது தளர்ந்து, மத்து அமிழ்ந்து அடிப்பாகத்தை தொட்டால் பானை உடைந்துவிடும். திருப்பாற்கடல் கடைந்தபோது, மத்தான மந்தரமலை, அமிழவும், பகவான் கூர்மமாக மலையை தாங்கினார். அதனால் பெறுதற் கரிய அமிர்தம் கிடைக்கப்பெற்றது. உலகியலில் பிராகிருத தொடர்பு, சீவர் களை, இறை தொடர்பு அற்றும், சம்சாரபந்தங்களில் நாட்டம் கொள்ளும் காரணங்களை தூண்டியும், பெண்ணாசை, மண்ணாசை முதலியை அவாக்களை உண்டுபண்ணியும்; இழிவுற செய்யுமாம். அவைகளுக்கு மாற்றாக அமிர்தம்போல திருவாய் மொழி அமுதத்தை ஆழ்வார் மூலம் வெளியிடச் செய்தாராம் பகவான். அந்த அமுதமான மூலம், தித்திக்குமாம், பெண்ணாசையை அறுக்குமாம், பக்திக்கு வழிவகுக்குமாம், பிறப்பை அறுத்து முக்திக்கு வழிகோலுமாம், சஹஸ்ர நாமத்தைப் போல, ஆயிரம் பாக்கள் கொண்ட அமிர்தமான திருவாய் மொழி மூலம் என்று கூறுகிறார் கம்பர்.

அந்தப்பாடல்

*"தித்திக்குமூலத் தெளியமுதேயுண்டு தெய்வமென்பார்*
*பத்திக்கு மூலம் பனுவற்கு மூலம் பவம் அறுப்பார்*
*முத்திக்குமூலம் முளரிக்கை வாள் நகை மொய் குழலார்*
*அத்திக்கு மூலம் குருகைப் பிரான் சொன்ன ஆயிரமே.*

*(பாடல் 8)*

இனி ஒரு அகத்துறைப்பொருளில் கம்பர் பாடிய ஒரு பாடலைக் காண்போம். (பாடல் 31)

*"செய்யன் கரியன் எனத்திருமாலைத் தெரிந்துணர*
*வய்யம் கரிஅல்ல, மாட்டா மறை; மதுரக் குருகூர்*
*அய்யன் கவி அல்லவேல், பிறவிக் கடல் ஆழ்வதல்லால்*
*உய்யும் வகை ஒன்றும் யான் கண்டிலேன் இவ்வுயிர்களுக்கே"*

இதன் பொருள்.

ஸ்ரீ மந் நாராயணனே பரம்பொருள் அவனை உள்ளபடி உணர்ந்து, அவனது திருவடிகளைப் பற்றுவதே உய்யும் வழி. அவ்வழி வகைகளை கூறி நடக்க செய்து, பிறப்பு இறப்பு என்ற துன்பக்கடலினின்று கரை யேற்றுவது, ஆழ்வாரின் அருளிச் செயலான திருவாய் மொழியைத் தவிர வேறு எதுவுமில்லை. துயருறும் நாயகிக்கு தோழி வழி சொல்லுவது போன்று அமைந்தது.

மற்றொரு அகப்பொருள்துறை பாசுரத்தையும் காணலாம்.

இல்லறத்தார்களும் மற்றும் துறவிகளும் திருவாய் மொழிப் பாசுரங் களை ஓதத் தொடங்கிய அளவிலே, தர்மரூபமான சாரம் ஒவ்வொரு பாசு ரத்தினின்றும் சுரக்குமாம்! அதாவது ஆயிரம் பசுக்களிடமிருந்து சாரமான பால்சுரப்பது போல. பகவத் அனுபவத்தைப் பெறுவதற்கு இந்தப் பாலே போதுமாம். இருப்பினும் இதர தேவாந்தரங்களின் வழிபாடு என்ற வழி முறைகளை கைக்கொண்டோர்களுக்கு உலகியல் துன்பங்கள் தொடரு மாம். எப்படியெனில் மலட்டுப் பசுக்களிடமிருந்து பயன் அடையக் கருதி செயற்படின், கைநோவுண்டாகுமே தவிர, பால் சுரக்க வழியில்லையாம்!

தலைவியின் நோய் இன்னதென்று அறியாது, தவறான வழிமுறை களைக் கூறும் தோழிக்கு தவறைச் சுட்டிக்காட்டி அறம் உரைப்பது என்பது கருத்து. அகத்துறை வெறிவிலக்கு என்ற வகையைச் சார்ந்தது இப்பாடல். (பாடல் 37)

நம்மாழ்வார் காலத்திலேயே, குருகூரில் வாழ்ந்த சில புலவர்கள், நம்மாழ்வாரின் பெருமைகளையும் அவரது அருளிச் செயல்களையும் போற்றி, "மாறன் அலங்காரம்", "மாறன் திருப்பதிக்கோவை" முதலிய பல நூல்கள் இயற்றி பெருமை கொண்டுள்ளார்கள்.

அவைகளுள், வேதத்தின் கருத்துக்களை உத்தமப் பாச் சொற்களால் அமைத்தவன் மாறன் என்று கூறும் மாறன் அலங்காரத்தினின்று ஒரு பாசுரம் இதோ!

"தெள்ளமிர்தத்துள்ளாய தீஞ்சுவையை மேயவேதத்துள்ளவுணர்வை யுணர்வினார் அள்ளி எடுத்திசைத்த தொண்றெனலாம் இன்பொருளான மாறன் தொடுத்திசைந்த உத்தமப் பாச்சொல்"

வேதங்களின் சாரமாக அமைந்த திருவாய்மொழி பலவகைகளில் சிறப் புற்று விளங்கும் ஒரு இலக்கியம். இவைகளின் கருத்துக்களை மேற்கோள் காட்டியே சிறப்புற்று விளங்கும் பல நூல்கள் இன்றும் வழக்கில் உள.

ஆழ்வார் திருவடிகளைப் பற்றி உபதேசம் பெற்ற அனுபவத்தால், ஆழ்வாரின் பெருமைகளை உணர்ந்து, ஆழ்வாரையே தெய்வமாக ஏற்று வைராக்கியத்தோடு வாழ்ந்தவர் மதுரகவிகள். ஆழ்வாரது கடைக்கண் நோக்கால், தாம் பெற்ற நலன்களை மனத்தினில் கொண்டு தனது ஆச்சர்ய பக்திக்கு சின்னமாக, கலிவிருத்தத்தில் அந்தாதியாக அருளிச்

செய்த "கண்ணிநுண் சினுத்தாம்பு" எந்ற பதினோறு பாசுரங்கள் கொண்ட பிரபந்தம், திவ்ய பிரபந்தத்தில் முதல் திருமொழியில், கடைசி பிரபந்தமாக அமைந்துள்ளது. ஆச்சார்யபக்தியின் மேன்மையையும் பகவத் பக்தியையும் விளைவிக்கும் வித்தாக அமையப் பெற்றது அப்பிரபந்தம்.

திருவாய்மொழியை ஓத (சேவிக்க) தொடங்குவதற்கு முன்பும், திரு வாய்மொழி ஓதிய பிறகு சாற்றுப் பாசுரங்கள் ஓதி முடிந்ததும், மதுர கவிகளின் பிரபந்தமான "கண்ணிநுண் சிறுத்தாம்பை" ஓதுவதை மரபாக கொண்டுள்ளது வைணவம்.



# இயல் 19

# சங்கம் வென்ற கழலடிகள்

நம்மாழ்வார் இவ்வுலகில் வாழ்ந்த காலம் 35ஆண்டுகளே. குருகாபுரி ஆதிநாதன் ஆலயத்திலுள்ள திருப்புளி ஆழ்வாரின் அடியிலேயே எழுந் தருளியிருந்து மதுரகவிகளுக்கு உபதேசம் செய்தார். தென்னாட்டு திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்யுங்கால், அந்தந்த மூர்த்திகள், திருப் புளியில் கிளைக்கொருவராக எழுந்தருளியிருந்து அனுபவித்தார்கள் என்று ஆன்றோர் பணிப்பர். தனது பதினாறாவது பிராயத்தில், மதுரகவி களுக்கு உபதேசிக்கத் தொடங்கிய ஆழ்வார் பரமனின் அனந்த கல்யாண குணங்களில் ஈடுபட்டு, அவ்வப்பொழுது பாசுரங்களுக்கு அடி எடுக்க முடி யாமல் மோகித்தும், பிறகு தெளிந்து அடி எடுத்தும்; உபதேசித்ததை நாம் அறிந்துள்ளோம். அப்பொழுதெல்லாம் மதுரகவிகள், பகவத் கைங்கர்யம் போல, ஆச்சார்யாருக்கு பணிவிடைகள் செய்வதில் மகிழ்ந்திருப்பாராம். காரியும் உடைய நங்கையும் கண்களை இமைகாப்பது போல, சடகோப னைப் பாதுகாத்து, மதுரகவிகளிடம் ஒப்புவித்த கணத்திலிருந்து, மதுர கவிகள் பெற்றோர்கள் நிலையிலிருந்து கணமும் ஆழ்வாரைப் பிரியாது, போற்றிப் பாதுகாத்தது மட்டுமல்லாமல், ஆழ்வாரின் அருளிச் செயல் களுக்கு மதுரை தமிழ் சங்க ஒப்புதலையும், தெய்வீக வேத சாம்யமும் பெற்றுத்தந்து பெரும் பெயருக்குள்ளானவர்.

முதலாழ்வார்கள் முதல், ஏனைய ஆழ்வார்களின் அருளிச் செயல் களையும், நம்மாழ்வார் காலத்திற்கு பின்னால் தோன்றிய ஆழ்வார்கள் அரு ளிச் செய்யப் போவதையும் ஆழ்வாரே உலகிற்கு உபதேசம் செய்ய வேண்டும் என்று எம்பெருமான் திருவுள்ளம் கொண்டதாயும் அதற்கு திருக்கோளூர் செல்வனான மதுரகவிகளே, செய்து முடிப்பார் என்று, ஆழ்வார் எம்பெரு மானிடம் உறுதி பட கூறினாரென்றும் ஆன்றோர்கள் பணிப்பர்.

ஆழ்வார் வைகுந்தம் புகும் நாள் நெருங்கி விட்டதை உணர்ந்த, மதுர கவிகள், தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு ஆழ்வாரை வேண்டிக் கொண்டார். தமிழ் மறையான நான்கு பிரபந்தங்களையும் அருளிச் செய்த பின், யோகத்திலாழ்ந்திருந்த ஆழ்வார். கண்களைத் திறந்து, "திருக்கோளூருதித்த சித்திரையோனே, ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தமான தமிழ் மறையை, உலகத்தவர்களுக்கு, நீரே, நாம் உமக்கு உரைத்தவண்ணம் உபதேசம் செய்து கொண்டிருக்க வேண்டும். ஆதிநாதன், இதுகாறும், தம்முடன் பொலிந்து நின்றதைப் போன்று, யாம் உமக்கு உறு துணையாக பொலிந்து நிற்போம் என்று கூறினாராம் ஆழ்வார்.

"பொய்கை முதல் ஆளானோர் புகன்றதுவும் நீர் அருளிச் செய்தது வும் பின்னோர் தெரிந்துரைக்கும் பாடல்களும் பண்பால் உபதேசம் பண்ணும்".

இங்ஙனம் ஆழ்வார் மதுரகவிகளிடம் கூறினாராம்! (ஆதாரம் வகுளா பரண சடகோபர் என்ற நூல்)

பிறகு ஒரு நன்னாளில், ஆழ்வாரின் ஆத்ம சொரூபம் சூக்கும் நாடி வழி வெளிப்பட்டு, அர்ச்சிராதி வழியாக வைகுந்தம் புகுந்து, நித்ய முக்தர் எதிர் கொள்ள திருமாமணி மண்டபத்து அந்தமில் பேரானந்தம் அடைந்தார்.

வைகுந்தம் செல்வோர் எப்படி வரவேற்கப்படுகின்றனர் என்பதனை ஆழ்வாரே திருவாய் மொழியில் விளக்கியுள்ளார். அவை

*"வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்*
*வைகுந்தன் தமர்எமர் எமதிடம் புகுதென்று*
*வைகுந்தத்து அமரரும் முனிவரும் வியந்தனர்*
*வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே"* *(10.9.9)*

*"விதி வகை புகுந்தனர் என்று நல்வேதியர்*
*பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்*
*நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும்*
*மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே"* *(10.9.10)*

*"வந்தவர் எதிர்கொள்ள மாமணி மண்டபத்து*
*அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை*
*கொந்தலர் பொழில் குருகூர் சடகோபன் சொல்*
*சந்தங்கள் ஆயிரத்திவை வல்லார் முனிவரே"* *(10.9.11)*

இவ்வகையில் திருநாடு அலங்கரித்த ஆழ்வாரைப் பிரிந்த மதுர கவிகள், ஆழ்வாரை திருப்புளியினடியில் திருப்பள்ளி படுத்தி சரம கைங்கர்யங்களை செய்து முடித்தார்.

நம்மாழ்வாரைத் தவிர வேறு தெய்வமெதுவுமறிந்திலேன் என்றிருந்த மதுரகவிகள், ஆழ்வாரின் பிரிவால் தளர்ந்த மனம் விரைவிலேயே தேறப் பெற்று ஆச்சார்யாருக்கு அழகிய கோவிலும், அர்ச்சாரூபமான ஆழ் வாரின் விக்ரகத்தையும் நிலைபடுத்தி, மண்டபம் அமைத்து, ஆபரணங் கள் செய்வித்து, நித்ய கைங்கர்யங்களை தானே செய்து கொண்டு ஆண்டு தோறும் விழா நடத்தவும் ஏற்பாடுகள் செய்து, ஆழ்வாரின் பாசுரங்களை ஓதியும், மனம் களிப்புற்று வாழ்ந்து வந்தார்.

திருவிழா காணும் போது, ஆழ்வாரைப் பல்லக்கில் எழுந்தருளப் பண்ணி, வீதி உலா செல்லும் போதெல்லாம், மதுரகவிகள் ஆழ்வாருக்கு விருது கூறி செல்வார். விழாவின் போது ஆயிரக்கணக்கில் மக்கள் கூடு வது வழக்கம். இவ்விதம் ஆண்டு தோறும் திருவிழா நடந்து வருகையில் ஒரு ஆண்டு, மதுரகவிகள் நடுநாயகமாக விருது கூறி செல்கையில், ஒரு எதிர்பாராத சம்பவம் நேர்ந்தது.

மதுரை தமிழ் சங்கத்தைச் சார்ந்த புலவர்களுள் சிலர், குருகூருக்கு திருவிழா காண வந்திருந்தார்கள். அவ்வமயம் :

*"வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்"*
*வேதமனைத்தும் ஓதாது உணர்ந்த உத்தம ஞானி வந்தார்*
*திருமுலை உண்ணாமல் திவ்யயோகம் கொண்டு*
*திருப்புளியில் வாழும் பெருமாள் வந்தார்*
*தேசிகன் நாவீறன் மாறன் சடகோபன்*
*என்ற திருநாம் எய்த பெருமாள் வந்தார்.*

என்றெல்லாம் மதுரகவிகள் விருது கூறி வருவதை, புலவர்கள் செவிமடுத்தார்கள். உடனே, அவர்கள் மதுரகவிகளை அணுகி, "ஐயா, தாங்கள் கூறிய விருதுகள் ஆழ்வாருக்கு பொருந்துபவைகளாக இல்லையே! மனித இயற்கைக்கு மாறாக இருந்தவர், ஓதாது உணர்ந்தது எங்ஙனம் கல்வி பயிலாத வரை நாவீறன் என்று எவ்வாறு அழைக்கின்றீர். வேதம் தமிழ் செய்தான் என்று கூறுகிறீர்; அப்படியாயின், அவரது பாக்கள், சங்கமேறி ஒப்புதல் பெற்றவைகளா? இப்படி பல ஐயங்களுக்கு உட்பட்ட வரை பெருமாள் என்று கூறி விருதிட்டீர்களே, அவர் இயற்கைக்கு மாறாக வளர்ந்த ஒரு மனிதரேயன்றி, பக்தர் கூட இல்லை, அப்படிப்பட்டவரை பெருமாள் என்று கூறுவது. எங்ஙனம் பொருந்தும்? மேலும் எப்படி நியா யமாகும்? அவரது பாசுரங்கள் சங்கமேறாத நிலையில், நீர் இனி அவ்வாறு விருது கூறி செல்லலாகாது, என்று இன்னும் பலபடி இகழ்ந்து பேசி, மதுர கவிகளை விருது கூறாது தடுத்து விட்டார்களாம்.

சற்றும் எதிர்பாராத இச்சம்பவம் மதுரகவிகளை வெகுவாகப் பாதித்தது.

அன்று, விருது கூறாமலே, விழா முடிந்தது. மதுரகவிகள் வேதனைக்குள் ளானார். அன்றிரவு உணவு உட்கொள்ளவில்லை, உறக்கமும் கொள்ளவில்லை.

மறுநாள் காலை, ஆழ்வாரின் விக்ரகத்தின் முன் நின்று, நடந்தவை களை எண்ணிப் புலம்பி புழுவாய் துடித்தார். பிறகு தேறி, குருகூர் புகழ் புண்ணியனே, எண்ணத்தாலும் சொல்லாலும் பொலிந்த ஞானபிரானையே சரணடைந்த சடகோபரே உம்மையும், உமது அருளிச் செயல்களையும் இகழ்ந்து பேசிய சங்கப் புலவர்களுக்கு தக்க பதிலளிக்க நான் கடமைப் பட்டுள்ளேன். அன்று, அவர்களுக்கு நானே தக்க பதில் கூறியிருக்க முடி யும், ஆனால் வீதியில் விவாதம் செய்வதும் வழக்காடுவதும். தர்மத்திற்கு இழுக்கென பேசாதிருந்தேன். சங்கத்திற்கே சென்று, தங்களது பிரபந்தங் கள் தெய்வீகமானது, சங்க இலக்கியங்களுள் சிறந்தது, என்பதனையும், தங்களின் மேன்மையையும், சங்கத்தார்கள் உணரும்படி செய்ய, தாங்கள் தான் எனக்கு ஒருவழி காட்ட வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

ஆழ்வாரைத் தவிர, வேறு தெய்வம் அறியாதவர் மதுரகவிகள். பிர பந்த பாசுரங்களை ஆழ்வார் தமக்கு உத்தேசித்த கிரமப்படியே, தாமும்

மக்களுக்கு உபதேசிக்க வேண்டுமென்றும், அதற்கு துணையாக ஆதி பிரான் இருந்து அருள் புரிவார் என்று கூறியதை நினைவு கூர்ந்தார். உடனே பொலிந்து நின்ற பிரான் சன்னதிக்குச் சென்று சன்னதி வாசலி லேயே உண்ணா நோன்பை மேற் கொண்டார்.

இங்கு ஒரு சம்பிராதாயத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இறை யுணர்வோடு, முப்பால் அறத்தைச் சார்ந்து உறுதிப் பொருள்களை (புரு ஷார்த்தங்கள்) கடைப்பிடித்து ஒழுகுபவர்கள், ஆலயத்தினுள்ளோ, அல்லது தன்னை போல தர்மிஷ்டர்களின் இல்லத்திலோ மூன்று தினங்களுக்கு மேல் பட்டினி கிடக்க நேரிடுமாயின் தர்மம் அழிவுப் பாதையில் செல்லும் என்பதனை உணர்த்துகிறது என்பது ஆன்றோர் பணித்துள்ளது.

கடோபநிஷத்தில், வேதம் பயின்ற அந்தணச் சிறுவனான 'நசிகேதன்' தனது ஞானத்தை வளர்த்துக் கொள்ள, யமதர்மராஜனேயை ஆச்சார் யாராக பாவித்து அவர் இல்லத்தை அடைந்தபோது, யமதர்மன் அவ்வமயம் இல்லத்தில் இல்லாததால் நசிகேதன் பட்டினி கிடக்க நேர்ந்தது. இரண்டு தினங்கள் கழித்து யமதர்மன் தன் இல்லம் திரும்பிய போது, அதை அறிந் ததும், தர்மத்திற்கு அதிபதியான தன்னிடமே தர்மம் தவறிவிடுமோ என்று அஞ்சி, நதிகேசனை உபசரித்து உணவு இட்டாராம்.

பாகவத கைங்கர்யத்தில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட மங்கை மன்னனை, திருவாலி ஆலயத்தினுள் தற்காலிகமாக சோழ அர சன் சிறை வைத்த போது, பட்டினி கிடந்த திருமங்கை மன்னனை காஞ்சிக்கு போகச் சொல்லி, திருவாலி எம்பெருமான் தடுத்தாட் கொண்டானாம்.

ஆன்றோர் பணித்த சம்பிரதாயங்களை இந்த இரு நிகழ்ச்சிகளும் உறுதிப்படுத்துகின்றன அல்லவா ?

மதுர கவிகள் உண்ணா நோம்பு ஏற்று இரண்டு தினங்கள் கழிந்தது. மூன்றாம் நாள் காலை ஒரு முதியவர் மதுரகவிகளை அணுகி விசாரிக்க, அவர் நடந்தவைகளைக் கூறினார். அதை கேழ்வியுற்ற முதியவர், தாங்கள், நான்கு வகை கவிபாடும் ஆற்றல் மிகுந்து மதுரகவி என்ற பெயர் பெற்ற வர். ஆழ்வாரின் பிரபந்தங்களை நன்கு ஓதியவர். அப்படி யிருந்தும் அவை களுள் "கண்ணன் கழலடிகள்" உமது நினைவிற்கு வரவில்லையா ? அக்க ழலடிகள் உமக்கு துணைபுரியும் என்று கூறி ஆலயத்திற்குள் சென்றார். ஆலயத்திற்குள் சென்றவர் திரும்பி வராததால், ஆதிபிரானே முதியவர் உருவில் தனக்கு வழிகாட்ட வந்தார் என்று அக மகிழ்ந்து, மறுதினமே மதுரைக்குப் பயணமானார்.

மதுரையை அடைந்த மதுரகவிகள் சங்கத் தலைவரிடம், தான் வந்த காரணத்தை தெரிவித்து ஆழ்வார் பாசுரங்களுக்கு ஒப்புதல் பெற, சங்கத் தைக் கூட்டும்படி வேண்டிக் கொண்டார்.

அதற்கிணங்க, மறுதினம் சங்கம் கூட்டப்பட்டது. "கண்ணன் கழலினை" என்று துவங்கும் பாசுரத்தை ஒரு ஓலை முறியில் எழுதி, சங்கத் தலைவரிடம் கொடுத்து, ஆழ்வாரின் பாசுரங்களனைத்திற்கும் இந்த பாசுரமே பிரதானம். இதை சங்கமேற்றி ஒப்புதல் பெறப்பட்டால், அனைத்துப் பாசுரங்களுக்கும் அதுவே ஒப்புதலாகும் என்று கூறி விண்ணப்பித்தார்.

ஓலை முறியைப் பெற்று படித்தார் சங்கத் தலைவர், பிறகு சங்கத்தார்களும் படித்தார்கள்.

*"கண்ணன் கழலினை தண்ணும் மனமுடையீர்*
*எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே".*

என்று எழுதியிருந்த பாசுரத்தைப் புலவர்களுள் பலர் தங்களுக்குள் கலந்து ஆலோசித்தார்கள், சிலர் எள்ளி நகையாடினர். பிறகு சங்கத் தலைவர் மதுரகவிகளை நோக்கி, ஐயா, "ஈரடி வெண்பாக்கள் இலக்கண மரபிற்கு ஒவ்வாதது. மேலும் ஆழ்வார் பாசுரங்கள் அனைத்திற்கும் இதுவே பிரதானம் என்று கூறுகிறீர். அவ்வகையில் ஆழ்ந்த பொருட்செறிவு ஏதும் புலப்படவில்லையே", அனைத்துப் பாசுரங்களுக்கும் இதுவே தலையாக உள்ளது என்ற உமது கூற்று விந்தையானது. ஆதலால் இதை சங்கமேற்ற அனுமதிக்க இயலாது என்று கூறினார்.

இதைக் கேட்ட மதுரகவிகள் சங்கத் தலைவரை நோக்கி, ஐயா ஓலை முறியிலுள்ள ஈரடி வெண்பா, இலக்கண வரம்பிற்குட்பட்டது. என்பதே எனது அபிப்பிராயம். தூல வடிவங்களை சூக்குமமாக அறிவிப்பதும் முறை தானே ? பாசுரதத்தில் கூறியுள்ளது போல கண்ணன் கழல்கள் இரண்டு சிறிய அடிகள் (திருவடி) அவை மூன்று உலகங்களையும் அளந்த, இரண்டே அடிகளான வாமனனின் குறளடிகள் தானே ? மூன்று உலகங்களும் அவைகளில் உள்ளவைகளும் இரண்டு அடிகளுள் அடக்கம் என்றால் உலகியல் நூல்களனைத்தும், அவற்றுள் அடங்கி விட்டது, என்பது தானே தேர்ந்த பொருள். அதனால் கண்ணன் கழலினை என்ற ஈரடிகள் ஆழ்வார் பாசுரங்களுக்கு தலைமை ஏற்று, திருவாய் மொழிக்கு பிரதியாக சங்கமேற வந்ததும், முறைதானே, வாதத்தை வளர்த்தாது, அதை சங்கப் பலகையில் வைத்துத் தான் பார்க்கலாம் என்பது எனது ஆவல். அதே ஆவல் உங்களில் பலருக்கும் இருக்கும் என யூகிக்கின்றேன். அதனால் அதை நிறைவேற்ற வேண்டுகிறேன் என்று கூறி அமர்ந்தார், மதுரகவிகள்.

மதுரகவிகளின் கோரிக்கைக்கு தலைவர் இசையவும் அனைவரும் பொற்றாமரைக் குளத்திற்குச் சென்று, தேர்ந்தெடுத்த சில புலவர்கள் சங்கப் பலகையில் அமர்ந்ததும், பலகை மிக லாகவமாக நீரில் மிதந்தது. பிறகு ஓலை நறுக்கை தலைவர் பலகையில் வைத்ததும், பலகை அலைந்து ஆடி, நீரில் மூழ்கியது! பலகையோடு நீரில் மூழ்கிய புலவர்கள் தத்தளிக்க, சங்கப் பலகை, "கண்ணன் கழலினை" என்று எழுதப்

பட்டிருந்த ஓலை முறியை மட்டும் நடுநாயகமாகத் தன்னுள் கொண்டு, பெருமிதமாக மிதந்தது.

குழுமியிருந்த புலவர்களுள் எள்ளி நகையாடியவர்கள் தலை குனிந் தார்கள். ஆழ்வார் பாசுரங்கள் சங்கமேறி ஒப்புதல் பெற்றதைக் கண்ணுற்ற மதுரகவிகள் குதூகலத்துடன் சங்கத் தலைவரை நோக்கி, புலவர் பெரு மானே, அன்று உலகளந்த கழலடிகள், திண்ணம் நாரணனின் ஈரடிகள் இன்று சங்கத்தையும் அளந்தது. இனி நான் ஆழ்வாருக்கு விருது கூற தடையொன்றுமில்லையே? என்று மொழிந்தார்.

மதுரகவியாரே, ஈரடியில் உலகளாவிய பொருளாழம் பொதிந் துள்ளதை இன்று யாம் உணர்ந்தோம். எங்களை மன்னித்து விடுங்கள். வேத சாஸ்திரங்களையும், பிறரால் கற்பிக்கப்படாமல் தாமே உணர்ந்த ஆழ்வாருடைய தெய்வீக புலமைக்கு முன், துரும்புக்கு சமமான புலமை நிற்குமா? என்று மனம் வருந்தி, நம்மாழ்வாரின் நாவீரத்தைப் பாராட்டி பல பாடல்கள் பாடினார்கள், அவ்விதம் ஒவ்வொரு புலவரும் ஆழ்வாரின் சிறப்பைப் போற்றிப் பாடிய பாடல்களனைத்தும் ஒரே மாதிரி பொருள் கொண்டு அமையப் பெற்றிருந்ததாம் அப்பாடல்,

*"சேமம் குருகையோ செய்யதிருப்பாற் கடலோ*
*நாமம் பாராங்குசமோ நாரணமோ தாமம்*
*துளவோ வகுளமோ தோள் இரண்டோ நான்கும்*
*உளவோ பெருமான் உனக்கு"*

ஆழ்வாரே, உமது உறைவிடம் சேமம் கொள்ளும் நல்லார் நவிலும் குருகூரா? அல்லது அழகிய திருப்பாற்கடல் தானோ? உமது திருநாமம் பாராங்குசமோ? அல்லது நாரணனோ? உமக்கு தாள்கள் இரண்டா, நான்கா? நீர் சூடிக்கொள்வது பச்சை பசுந்துழாயா வகுளமாலையா? பக்தரா, பகவானா? என்று சொல்ல முடியாதிருப்பவரே" என்பது பாசுரத்தின் பொருள்.

பிறகு சங்கப் புலவர்கள் அனைவரும் ஒருமித்த கருத்தினராக, தெய்வப் புலமைக்கு முன் கல்விப் புலமை ஒரு போதும் நிகராகாது. கருடனுக்கு முன் ஈயின் ஓட்டம் எடுபடுமா? சூர்யனுக்கு சமமாக மின் மினியைக் கூறுவதா? புலிக்கு முன் நாயாடுமா? அல்லது சிங்கத்திற்கு முன் நரிதான் நடைபோட முடியுமா? அழகிற் சிறந்த ஊர்வசி நடனமாடு வதைக் கண்டு பேய்கள் நடனமாடினால் காணச் சகிக்குமா? அப்படித் தான் ஆழ்வாரின் பாசுரப் பாடல்களுக்கு முன், சாமானியர்கள் பலரது பாடல்களும் என்று பொருள் படும்படி சங்கப் புலவர்கள் பாடிய பாடல்

*"ஈயாடுவதோ கருடற்(கு) எதிரே?*
*இரவிக்(கு) எதிர் மின்மினியாடுவதோ?*
*நாயாடுவதோ உறுவெம்புலிமுன்?*

*நரி கேசரிமுன் நடையாடுவதோ?*
*பேயாடுவதோ அழகூர்வசி முன்*
*பெருமா வகுளாபரணன் அருள் கூர்ந்து*
*ஓவாது உறையாயிரமாமறையின்*
*ஒரு சொற் பெருமோ உலகிற்கவியே?"*

சங்கப் புலவர்களை வெற்றி கொண்டு திரும்பிய மதுரகவிகள் அன்று முதல், ஆழ்வாருக்கு விருது கூறல் முதலிய சகல வைபவங் களையும் முன்னிலும் பன்மடங்கு மிகுதியாக நடப்பிவித்து மகிழ்ந்து இருந் தாராம்!

இந்த நிகழ்ச்சிக்குப் பின், அநேக ஆண்டுகள் கழித்து திருவள்ளு வரின் திருக்குறள் சங்கமேறும் காலத்தில் திருவள்ளுவரும் 'புலவர் இடைக்காடரும்', ஔவையாரும் சந்தித்து உரையாடியபோது, ஆழ்வாரின் அறிவாற்றலையும் மறைத்தமிழையும் வெகுவாக உயர்த்திப் பேசி உரை யாடிய சம்பவத்தை ஈண்டு காண்போம்!

புலவர் இடைக்காடர், திருவள்ளுவரிடம் "உமது குறள் எத்தன்மை கொண்டது" என்று வினவினாராம் அதற்கு திருவள்ளுவர் பொதிகை மலையினின்று அகத்திய மாமுனிவரால் வெளிப்படுத்திய இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழும், என்னால் இயற்றப்பட்ட குறட்பாக்களும், உடைய நங்கையின் திருக்குமாரர் சடகோபர் அருளிச் செய்த திருவாய் மொழியின் சேய்களாகும் என்ற கருத்து கொண்டு,

*"குருமுனிவன் முத்தமிழும், என் குறளும்,*
*நங்கை கிறு முனிவன் வாய் மொழியின் சேய்"*

என்று திருவாய் மொழியை சிறப்பித்து கூறினாராம்!

இதை செவிமடுத்த ஔவையார் திருவாய்மொழியைச் சிறப்பித்து, அது உணர்த்தும் அர்த்த பஞ்சகமான ஐம்பொருளையும் புருஷார்த்தங் களான நாற்பொருளையும், அறப்பால் முதலான முப்பாலுள் அமைக்கப்பட்ட உண்மை பொருளும், எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும் சம்மதமான மேலான பொருளை, தண்புனல் தாமிரபரணி தீரத்திலிருக்கும், திருக்குரு கூர் காரிமாறன் மகனாய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழி யாகிய, திராவிட வேதம் என்று சிலர் கூறுவார்கள். நான் அக்கூற்றை மறுத்து அதை இவ்வுலகிற்கு தாயாகிய ஸ்ரீமந் நாராயணனால் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டு வந்த கீர்வாணவேதமே என்று சொல்லுவேன் என்று பொருள்படக் கூறிய பாடல்.

*"ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொருளிற் பெய்தமைத்த*
*செம்பொருளை எம்மறைக்கும் சேட்பொருளைக் தண்குருகூர்ச்*
*சேய் மொழியதென்பர் சிலரியான்*
*இவ்வுலகின் தாய்மொழியது) என்பேன் தகைத்து".*

பிறகு இடைக்காடர் தமிழ் மறையும் வடமொழி மறையும் ஆராய்ந்து கூறின், இரண்டும் ஒன்றேயாம், திருவாய் மொழியை யாவரும் சங்கை யின்றி வேதமென்றே சொல்லுவார்கள். திருவாய்மொழியைப் போன்று சிறந்த நூல்கள் அநேகம் உண்டு என்று சிலர் குதர்க்கம் பேசினாலும், நான் அவைகளை மறுத்து இக்குறளும் அத்திருவாய்மொழியினது சாயையாய் இருப்பவைகள் என்றே சொல்லுவேன் என்ற கருத்தை உள்ளடக்கிய பாடல்.

*"சேய்மொழியை தாய்மொழியோ செப்பில் இரண்டு மொன்று;*
*அவ்வாய்மொழியை யாரும் மறை யென்ப வாய்மொழி போல*
*ஆய்மொழிகள் சாலஉள எனினும் அம்மொழிகள்*
*சாய்மொழியென்பேன் யான் தகைத்து".*

இவ்வரலாறு கம்பருக்கும் உடன்பாடு என்பதனை சடகோபரந் தாதியில் கம்பரே கூறியுள்ளார். அப்பாடல் (9)

*"ஆயிரமாமறைக்கு மலங்காரம்; அருந்தமிழ்க்குப்*
*பாயிரம், நாற்கவிக்குப்படிச் சந்தம் பனுவற்கெல்லாம்*
*தாய்; இருநால் திசைக் குத்தனி தீபம்; தண்ணங்குருகூர்ச்*
*சேய் இருமாமரபுஞ் செவ்வியான் செய்த செய்யுட்களே".*

நம்மாழ்வாரின் தெய்வ புலமைக்கும் ஈடு இணையுண்டோ இப் பாரினில்.



# இயல் 20

# அரங்கன் அளித்த வேத சாம்யம்

ஆழ்வார்களுள் கடைசியாகத் தோன்றியவர் திருமங்கை ஆழ்வார். திருக்குறையலூரில் மறவர் குலத்தில் பிறந்த இவரின் இயற்பெயர் "நீலன்" சிறந்த சிவபக்தராக திகழ்ந்தவர். சோழப் பேரரசில் போராற்றல்களில் சிறந்த படை தளபதியாக சிறப்பாகப் பணியாற்றியதின் விளைவாக, திரு மங்கை என்ற பகுதிக்கு குறுநில மன்னனாக நியமிக்கப்பட்டவர். போரா ளிகளுக்கு யமனைப் போல இவர் ஆற்றல் இருந்ததால், "பரகாலன்" என்ற பெயரும் இவருக்குண்டு. மேலும், மங்கை மன்னன், குறையல் பிரான், அரட்டமுக்கி, ஆடல்மாவலவன், கலியன் என்னும் இன்னும் பல பெயர் களும் இவருக்குண்டு. வைரத்தைப் போன்று நெஞ்சுறுதி கொண்டவ ராயினும் இளகிய உள்ளம் படைத்தவர். அதனால் இவர் "அருள்மாரி" என்றும் அழைக்கப்பட்டார்.

ஆழ்வாரான பிறகு, அன்னிய மதக் கொள்கைகளிலுள்ள, பொருந் தாத நெறிகளை, சுட்டிக்காட்டுவதாலும் "பரகாலன்" என்ற பெயர் பொருந் தும். இவருக்கு கவி புனையும் அளவிற்கு தமிழ் கற்றுக் கொடுத்த ஆசி ரியரின் வளர்ப்பு மகள், பேரழகியான குமுதவல்லியின் மீது தணியாக் காதல் கொண்டார். அவளை மணந்து கொள்ள, வைணவ பக்தராக மாறி, அவளது தூண்டுதலால் பாகவத கைங்கர்யத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, அதன் காரணமாக அரசு பகவியையும் துறந்தவர். திருவரங் கத்தில் ஆலயத்திருப்பணிகள் மிகப் பெரிய அளவில் செய்ய விரும்பி, அதற்கு போதுமான செல்வம் இல்லாத நிலையில் களவாடவும் துணிந்த வர். இவரை தடுத்தாட் கொள்ள திருவுள்ளம் பற்றிய அரங்கன், தானே திருமண கோலத்தில் அழகிய மணவாளனாக பிராட்டியாருடன், நிறைந்த செல்வங்களோடு, மங்கை நாட்டின் தனி வழியில் வர, அதை அறிந்த பர காலன், அதுவே முதலும் கடைசியுமான களவாக இருக்கட்டும் என்று துணிந்து, வழி மறித்து அரங்கனின் பெருநிதிகளை கொள்ளை கொண்டான்.

களவாடிய பெருநிதியை மூட்டையாகக் கட்டி தூக்குவதற்கு முயற் சிக்கையில், முடியாதிருந்ததால், மணவாளரே, என்ன மந்திரம் செய்து தூக்க முடியாமல் செய்தீர் என்று வாளை ஓங்கி மிரட்டினார். அரங்கனும், அம் மந்திரத்தை உமக்கும் சொல்லித் தருகிறேன் என்று "கலியனே" என்றழைத்து சகலவேத சாரமான மூலமந்திரத்தை உபதேசித்து கருடப் புள்ளேறி, நீலமேகம் போல காக்ஷி அளித்து மறைந்தார்.

வாள் கொண்டு மந்திரம் கொண்ட கலியனை ஆட்கொண்ட எம் பெருமானின் அருள், மங்கை மன்னன் நாக்கில் வாக்தேவியே உருக் கொண்டது போல, தமிழ் பாசுரங்களாக வெளிப்பட்டதாம்!

திருவரங்கத்தில் அரங்கனின் செல்வத்தைக் கொண்டு, மதிள் சுவர் கள், மணி மண்டபங்கள், திருச்சுற்றுக்கள் என்று பலவகையில் திருப்பணி கைங்கர்யத்தை செய்து முடித்தார். எம்பெருமானின் தசாவதார விபவ மூர்த்திகளுக்கும் கொள்ளிட தென் கரையில் ஒரு தனி ஆலயத்தை எழுப் பிய பெருமை இவருக்குண்டு. இமயம் முதல் குமரி வரை யாத்திரை செய்து, அனைத்து வைணவ திவ்ய தேசங்களையும் மங்களா சாசனம் செய்துள்ள ஒரே ஆழ்வார் திருமங்கை ஆழ்வாராகும்.

அரங்கனை மங்களா சாசனம் செய்கிறார். ஓங்கார விமானத்தில் வேய்ந்துள்ள தங்கத் தகடுகளின் பேரொளி திருமங்கை ஆழ்வாரின் கண்களை ஈர்க்கின்றதாம். அழகிய மணவாளப் பெருமானுக்கு, தங்கம் வேய்ந்த கற்களைக் கொண்டு, மண்டபங்களையும் மதிள் சுவர்களையும் கட்டாமல் வெறுங் கற்களினாலேயே கட்டினோமே என்று உள்ளம் ஏங்க அதன் பாதிப்பால் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோடிற்றாம். நாத்தழதழுக்க பாசுரச் சொற்கள் எடுக்க முடியாமல் தவித்தாராம்! வாள் கொண்டு மந்திரங் கொண்ட கலியனை நன்கு அறிந்தவராயிற்றே அரங் கன், அதனால் ஆழ்வார் தவிப்பதைக் கண்டு "கலியனே தங்கமான உள்ளத்தோடு நீர் செய்த திருப்பணிகளை நாம் தங்கமாகவே ஏற்றுக் கொண்டோம். என்று ஒரு தெய்வீகக் குரல் ஒலித்தது போல உணர்ந்த ஆழ்வாரின் கண்களுக்கு அங்குள்ள மண்டபங்கள் தூண்கள் அனைத்தும் தங்கமாகவே பிரகாசித்ததாம். உள்ளம் நெகிழ, "ஆய பொன் மாமதிள் சூழ்ந்தழகார் தென்னரங்கமே", என்று பாசுரத்தை முடித்ததும் ஆழ்வாரின் உள்ளக் களிப்பின் எதிரொலியே பளிச்சிட்டது போல இருந்ததாம்.

பிறகு பல சோழ நாட்டுப் திருப்பதிகளை மங்களா சாசனம் செய்து விட்டு, மீண்டும் திருவரங்கம் திரும்பினார். அன்று கார்த்திகை மாதத்து திருக்கார்த்திகை நாள், ஆழ்வாரின் அவதார நாளும் அன்றேதான். அன்று அரங்கனிடம் ஆழ்வார், ஒரு வேண்டுகோளை இறைஞ்சி பெற வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டிருந்தார். அதை தெரிவிக்கும் முன் தான் அருளிச் செய்த "திருநெடுந்தாண்டகம்" என்ற பிரபந்தத்தை மோகன ராகத்தில் பண்ணமைத்து இரவு முழுவதும் பாடியதால் ஆழ்வார் தொண்டை மிடறு கொண்டது. இறுதிப் பாசுரத்தில் "அறுமறையை வெளிப் படுத்த" என்ற இறுதி அடிகளைப் பாடி பாசுரத்தைப் முடிப்பதற்குள், ஆழ்வார் பட்ட சிரமத்தையும், அவரது உள்ளக் கிடக்கையையும் அறிந்த அரங்கனின் அருள், ஆழ்வாரே, நீர் விரும்புவது யாது ? என்று அசரீரியாக ஒலித்ததாம்.

தெய்வீக குரல் ஒலி காதில் விழுந்ததும், திருமங்கை ஆழ்வார் புத்தொளி பெற்றவராய், "தண்புனல் பொன்னி அடிவருடப் பள்ளி கொண்டானே", "ஆலிலைமேவிய மாயவனே", "உலகளந்தோனே", "திரு மங்கை உறைமார்பனே", "அழகிய மணவாளரே", தாங்கள், நம்மாழ்வார் பிரபந்தங்களுக்கு வேதசாம்யம், வழங்க வேண்டுமென்பதே, எனது விருப்

பமும், கோரிக்கையும். அதற்கு வரும் மார்கழி மாத வளர்பிறை முதல் தினத்திலிருந்து (பிரதமை) திரு அத்யயன உற்சவம் கண்டருளி, ஏகாதசி முதல் பத்து தினங்கள் இரவில் திருமாமணி மண்டபத்தில் திருவோலக்க மாக எழுந்தருளியிருந்து, குருகூர் செல்வன்சடகோபர் அருளிச் செய்த திருவாய் மொழிக்கு திருச் செவி சாய்த்து, அவைகள், வேதங்களுக்கு சமம் (வேத சாம்யம்) என்று ஒப்புதல் வழங்கி, நம்மாழ்வாரை அனுக்கிரக்க வேண்டுமென்பதே, எனது பிரார்த்தனை, என்றாராம்.

"திருமங்கை ஆழ்வார் பிரார்த்தனைக்கு அருள் பாலித்து, உமது விருப்பப்படியே, திருவாய் மொழியை வேதமாகவும், உமது பாசுரங்களை அதன் அங்கங்களாகவும் ஏற்று, அனைத்து பாசுரங்களும், உள்ளடங்க வேத சாம்யம் வழங்க திருவுள்ளம் கொண்டோம்" என்று தெய்வீக ஒலி ஒலித்ததாம்! மேலும், திருமங்கை ஆழ்வாரின் தொண்டைக்கு தைல மிடவும், அர்ச்சகருக்குப் பணித்தாராம்.

(இதன் காரணமாக, கார்த்திகைக்கு மறுதினம் திருமங்கை ஆழ் வாருக்கு தைலக் காப்பு சாத்துவது முறை. திருவரங்கத்தில் பின்பற்றப் படும் முறை வேறு அதை 23 இயலில் காணலாம்.)

மறுதினம், ஆலயதிருப்பணி செய்வார் மூலமாக சகல வரிசைகளுடன், அரங்கனின் பெயரில் திருமுகப்பட்டயம் குருகூருக்கு அனுப்பப்பட்டது.

திருவரங்கத்தானின் திருமுகப் பட்டயம் வரும் செய்தியறிந்த, குரு கூர் வாழ் ஆன்றோர்கள், மதுரகவிகளின், தலைமையில் ஊரின் எல்லைக் குச் சென்று எதிர் கொண்டு வரவேற்று அழைத்து வந்து, தக்கபடி உப சரித்தனர். மறுதினமே நம்மாழ்வார்விக்ரகத்தைப் பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு அனைவரும் திருவரங்கத்திற்குப் புறப்பட்டார்கள்.

குருகூரிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, மதுரகவிகள் வருகிறார் என்பதை அறிந்த திருமங்கை ஆழ்வார். ஆலய பரிசனங்கள் பின் தொடர, திருச்சின்னம் முழங்க, நம்மாழ்வாரை எதிர் கொண்டழைத்து, திருவரங்கத்து ஆலயத்தினுள் எழுந்தருளப் பண்ணி உபசரித்தார். மார்கழி வளர்பிறை முதல் தினம் திருஅத்யயன உற்சவத்தை தொடங்கி வைத்து, ஏகாதசியன்று அன்று வரை மூடப்பட்டேயிருந்த, வைகுண்ட வாசல் கதவுகள் திறக்கப்பட்டு, அதன் வழியாக திருமங்கை யாழ்வார், நம்மாழ்வாரை திருமாமணி மண்டபத்திற்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்றார்.

அன்று தொடங்கி பத்து தினங்கள் இரவில் திருமாமணி மண்ட பத்தில் அழகிய மணவாளப் பெருமாள் திருவோலக்கமாக எழுந்தருளி யிருக்க, மதுரகவிகள் நடுநாயகமாக சுற்றிலும் பரிசனங்களும் சேவார்த்தி களும் அமர்ந்திருக்க திருவாய்மொழிப் பாசுரங்களைப் பாடத் தொடங் கினார். பண்ணார் பாடல்களுக்குத் தகுந்த ராகங்களில் பண்ணமைத்து,

தைத்தாளமெடுத்து, தேவகானத்தில் பாடியும், பாடலின் பொருள் விளங்க அபிநயித்தும் சேவித்தார். பத்தாவது தினத்தில் மாறன் சடகோபன், முன்பு திருவாய் மொழியை தலை கட்டினவாறே, திருவடிகளைச் சேர்ந்த படியை அனுசரித்து அழகிய மணவாளரும் ஆழ்வார் விரும்பியபடியே, தனது திரு வடிகள் கீழ் புகச் செய்து பக்கலில் அமர்த்தி, திருமாலைகள் பரிவட்டம் கஸ்தூரி காப்பு, ஆகிய வெகுமதிகளை சாற்றி, ஆழ்வாரின் அருளிச் செயல்களுக்கு "வேதசாம்யம்" வழங்கியாயிற்று.

கலியுகத்தில் அந்தமில் பேரின்பத்தை அடைந்த முதல் சீவரான நம்மாழ்வாருக்கு பரமபத வாசற் கதவுகள் திறக்கப்பட்டு, மோக்ஷம் அளித் ததை, நினைவூட்டும் வண்ணம் திருவரங்கத்தில் என்றும் மூடப்பட்டிருந்த வைகுண்ட வாசல் முதல் முறையாக ஆழ்வாரை அழைத்துக் கொள்ளப் பட்டு அந்த மரபு ஆண்டுதோறும், நம்மாழ்வார் பூதவுடலை நீத்த தினமான மார்கழி வளர்பிறை ஏகாதசியன்று திறப்பது சம்பிரதாயமாக அனுசரிக்கப் படுகிறது. அந்த ஏகாதசி வைகுண்ட ஏகாதசி எனவும் அழைக்கப்படுகிறது.

பண்ணார் பாடல்களுக்கு வேத ஒப்புதல் வழங்கிய அரங்கன், ஆழ்வாரை தனக்கு சமமாக அமரச் செய்தே அருள் பாலித்தாராம். ஆனால், ஆழ்வாரோ தான் பாசுரமிட்டபடியே அரங்கனின் பொன்னடிகளே ஆழ்வாராகப் போற்றப்படுவதை இயல் 24ல் காணலாம்.

அரங்கனே திருச்செவி சாய்த்து ஒப்புதல் வழங்கினமையால், திரு வாய்மொழி பகவத் விஷயமானது.

திருமங்கை ஆழ்வாரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட திருஅத்யயன உற்சவம் மார்கழி வளர்பிறை முதல் தினம் தொடங்கி இருபது தினங்கள் பிரதி ஆண்டும் திருவங்கத்தில் அனுசரிக்கப்பட்டு வந்தது.



# இயல் 21

# நாதனுக்கும் நாலாயிரம் உரைத்தது

காலச்சுழற்சியில் பல ஆண்டுகள் கழிந்தன. நீண்ட நெடுங்காலம் வாழ்ந்த மதுரகவிகளும் பூத உடலை நீத்தார். செவிச் செல்வமாகவும், பட்டோலை கொண்டும், பெற்ற ஆழ்வாரின் பிரபந்த பாசுரங்கள் மதுரகவி குடிவழி மரபினர்களால், தக்கபடி பாதுகாக்கப்படவில்லை. பல தலை முறைகளுக்குப் பின், மதுரகவிகளின் குடிவழி மரபினர்களோ, அல்லது அவரிடம் பயின்றவர்களோ, பாசுரப்பாடல்களை இறைமுன் விண்ணப்பஞ் செய்வார், இல்லாத நிலையில், திருவரங்கத்தில் திருவத்யயன உற்சவம் நின்று போயிற்று.

பெறுதற்கரிய பெருநிதியை, நாடு இழந்துவிட்ட நிலையில், அவை களைத் தேடி, துருவி ஆராய்ந்து பெற்றுத்தர முடியாத சூழ்நிலையே தொடர்ந்தது. அறிவு மதங்கள் வளரத் தொடங்கிய காலம், அவைகளின் தூண்டுதலால், மக்கள் உள்ளங்களில் புதிய கருத்துக்கள் தோன்ற கார ணமாயிருந்த, காரண, கார்ய, அறிவு, தர்ம வாழ்க்கையை சிக்கலாக்கியது. நாயன்மார்கள் தோன்றி, மீண்டும் பக்தி கலாச்சாரத்தை வளர்ந்த கால கட்டத்தில், ஒரு வைணவ யோகி ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்களை மீட்டு, உலகிற்கு அளித்த வரலாற்றினை, இப்பொழுது காண்போம்.

தஞ்சையை நெற்களஞ்சியமாக மாற்றிய தண்புனல் பொன்னியாற் றின் கரையில், "வீர நாராயணபுரம்" என்னும் திருத்தலம் உள்ளது, தற்போது இத்தலம் "காட்டு மன்னார் குடி" என வழங்கப்படுகிறது. இவ் ஊரில் பல கலைகளையும் நன்கு கற்றுணர்ந்த மறையவர்கள், எம்பெரு மானிடத்து பேரன்பு பூண்ட பரம பாகவதர்களாக விளங்கினார்கள். அவர் களுள் "சொட்டைகுலம்" என்ற அந்தண குலத்தைச் சார்ந்த "ஈசுவர முனிகள்" வடமொழி, தமிழ் இரண்டிலும் நன்கு புலமை பெற்று, அவ்வூரில் கோவில் கொண்டெழுந்தருளி அருள்பாலிக்கும், மன்னனாரின் திருவடி தொழுது, ஆலய கைங்கர்ய பரராக, செயலாற்றி வந்தார்.

கி.பி. 825 ம் ஆண்டு, ஒரு ஆனி மாதத்தில், அனுஷ நஷத்திரம் கூடிய ஒரு நன்னாளில், ஈசுவர முனிகள் தம்பதிக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. அக் குழந்தைக்கு ஸ்ரீ ரெங்கநாதன் என்று பெயரிட்டு, யுக்த வயதில், தான் கற்றவைகளனைத்தையும் கற்பிக்கத் தொடங்கி, ஆற்றல் மிக்கவனாக விளங்கும்படி வளர்த்தார். ரெங்கநாதனும் நலன்களாய நற் கலைகளையும் கற்று, வேத விற்பன்னராக திகழ்ந்ததோடில்லாமல், இசை யும் பயின்று ஏழிசை மன்னனாகவும் திகழ்ந்தார். தேவகானத்திற்கும், மானுடகானத்திற்கும் உள்ள தாள ராக பண் பேதங்களை நன்குணர்ந்த வர்களுள் சிறந்தவராக விளங்கியவர். அதன் பேதங்களை (வித்தியாசங் களை) உணர்ந்தவர்கள், அக்காலத்தில் ஒரு சிலரே! தந்தையைப்

போலவே பகவத் கைங்கர்யத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட ரெங்க நாதன், மல்லிகைத் தோள் மன்னரான திருமகள் நாதன் மீது பக்தி கொண்டு, இன்னிசையால் மகிழ்வித்து தொண்டாற்றி வந்தார். ஒரு முறை கும்பகோணம் சென்றிருந்த போது அங்கு எழுந்தருளியிருக்கும் சாரங்க பாணியான ஆராஅமுதன் எழிலில் தன் மனத்தை பறி கொடுத்தவராத லால், மன்னனாரை ஆராதிக்கும் போதெல்லாம் ஆரா அமுதனின் திரு மேனியையே கண்டு மிகழ்வாராம்.

பகவத் கைங்கர்யம் தவிர, தகுதி படைத்த ஊர் மாணவர்களுக்கு ஆன்மீக கல்வியும், இசைக்கல்வியும், போதித்து வந்தார். இவரது அருமை பெருமைகளையும் ஆன்மீக அறிவாற்றலையும், இசை உணர்வை யும், தன்னலம் கருதாது தொண்டாற்றுவதையும் அறிந்திருந்த ஊர் மக்கள் அவரிடம் பெரு மதிப்பு கொண்டு அன்புடன் "நாத முனிகள்" என்றே அழைத்து வந்தார்கள்.

அவ்வூரிலேயே செல்வாக்குடன் வாழ்ந்து வந்த வங்கீபுரத்து அம்மாள் என்பவரின் அருங்குணச்செல்வி, அரவிந்தலோசனவல்லி என்ற கன்னிகையை திருமணம் செய்து கொண்டு இல்லறத்தை நல்லறமாக பொலியச் செய்யும் வகையில் வாழ்க்கைப் பயணத்தை தொடங்கினார்கள். உரிய காலத்தில் அவர்களுக்கு ஒரு ஆண்மகவு பிறந்தது. தனது தந்தை யின் பெயரான ஈசுவரமுனிகள், என்றே பெயர் சூட்டி, வளர்த்து ஆளாக்கி, உரிய வயதில் திருமணமும் செய்வித்து வாழ்ந்து வந்தனர்.

நாதமுனிகளுக்கு, ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்களை, எப்படி யாவது தேடிப்பெற வேண்டும் என்பது நெடு நாளைய அவா. எனினும் அவரது முயற்சிகள் பயனளிக்கவில்லை அதனால் மன ஆறுதலுக்காக வட நாட்டிற்கு திவ்ய தேச யாத்திரை மேற்கொண்டார்.

பல வடநாட்டுத் திருப்பதிகளைத் தரிசித்துக் கொண்டு மதுரா வந்த போது, யமுனை நதிக்கரையில் உள்ள கோவர்த்தனபுரம் அவரது மனதை வெகுவாக கவர்ந்தது. கண்ணன் களிப்புற்று ஆடிப்பாடி மகிழ்ந்த அப்பதி யும், நதியும் தனக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் இருந்ததால், அங்கேயே சில காலம் தங்க இசைந்தார். அச்சமயத்தில் நாதமுனிகளின், புத்திரரான ஈசுவர முனிகளுக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. யமுனைத் துறையில் பிறந்த காரணத்தால், அக்குழந்தைக்கு யாமுனாச்சார்யன் என்று பெயர் சூட்டப்பட்டது. பிற்காலத்தில் தமிழ்நாட்டின் மன்னவனுக்குட் பட்ட ஒரு சிற்றரசராக சிறுது காலம் பணியாற்றி, பின்னர் ஆன்மீக வாழ்வை மேற்கொண்டு, வைணவத்தை நாடெங்கிலும் வளர்த்த சிறந்த வைணவ ஆச்சார்யாரான ஆளவந்தாரே, யமுனைத்துறையில் பிறந்த யாமுனாச்சாரியாராகும்!

ஆழ்வார்களின் பிரபந்தங்களை எவ்வகையிலும் தேடிப் பெறுவது என்ற ஆவல், தணியாத நிலையில், பல பெரியோர்களிடம் தொடர்பு

கொண்டும் பயனளிக்கவில்லை. தினமும் அதே நினைவு உள்ளத்தில் ஊசலாட, ஒரு இரவு அவரது கனவில் மன்னனார் தோன்றி, வீர நார யணபுரத்திற்கே திரும்பி வாரும், வழிபிறக்கும் என்று பணித்தருளினா ராம்! அதை சிரமேற்கொண்டு, மறுதினமே பயணப்பட்டு, வீர நாராயண புரத்தை அடைந்தார். ஒன்றிரண்டு ஆண்டுகள் மன்னனாரை ஆராதிக் காமல் இருந்து அன்று ஆராதித்த பொழுது, அவர் கண்களுக்கு எம்பெ ருமான் ஒரு புதுப்பொலிவுடன் விளங்கினாராம். "உன் எண்ணம் ஈடே றுங்காலம் நெறுங்குகிறது" என்று அருள்பாலிப்பது போல இருந்ததாம் அப்பொலிவு. பிறகு வழக்கம்போல ஓதுவித்தல் பணியை ஆலய மண்ட பத்திற்குள் மேற்கொண்டார்.

ஒரு தினம் மாணவர்களுக்கு வேத ஓதுவித்தலையும், இசையையும் போதித்துக் கொண்டிருந்தபோது, சன்னதியில் ஒரு பெண்மணி கணீ ரென்று பாடுவது நாதமுனிகளின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்தது.

தேவகானத்திற்கேற்ப பண்ணும், தாளமும் அமையப் பெற்ற பாடலும், அதன் சொற்கோவையும், பொருள் நயமும், மதுரகானமாக, பாடும் குரல் வளமும், பாடிய நேர்த்தியும், நாதமுனிகளின் மனதைச் சுண்டி இழுக்க பாட போதனையை அந்த அளவில் முடித்து சன்னதிக்கு விரைந்தார்.

நாதமுனிகளை கவர்ந்த பாடல்

*"ஆராஅமுதே அடியேன் உடலம்*
*நின்பால் அன்பாலே*
*நீராய் அலைந்துகரைய உருக்கு*
*நின்ற நெடுமாலே*
*சீரார் செந்நெல் கவரி வீசும்*
*செழுநீர்த்திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்*
*கண்டேன் எம்மானே!"*

ஒரு இளமங்கை கையில் சுருதியை மீட்டியவாறு கண்களை மூடி பக்திப் பரவசையாக ஒவ்வொரு பாடலாக அதற்குரிய பண்ணில் அனு பவித்துப் பாடி, இறுதிப் பாசுரத்தை,

*"கழல்கள் அவையே சரணாகக் கொண்ட*
*குருகூர் சடகோபன்*
*குழலின் மலியச் சொன்ன ஓராயி*
*யிரத்துளிப்பத்தும்*
*மழலை நீர் வல்லார்காமர்*
*மானேய் நோக்கியர்க்கே"*

என்று பாடி முடித்து மன்னனாரை வணங்கி நின்றாள்.

இசையில் மனதை பறி கொடுத்தவராய், செழுநீர் குடந்தையில்

ஆராஅமுதனை அனுபவிப்பவராக தன்னை மறந்து நின்ற நாதமுனிகளை, "குருகூர் சடகோபன் மலியச் சொன்ன ஆயிரத்துள் இப்பத்தும்" என்ற சொற்றொடர் காதில் விழவும் வியப்புக்குள்ளாகி, மகிழ்ச்சி ஆரவாரம் பொங்க "கண்டேன் பெருநிதியை" என்று கூறி குதூகலித்தாராம்.

பிறகு, பெருமாள் சாற்றிக் களைந்த மாலையையும், தீர்த்தத்திரு துழாய் பிரசாதங்களையும் அப்பெண்மணிக்கு வழங்கி, ஆசி கூறி விசாரித்தார்.

அம்மணி, இன்று உனது தேவகானத்தை செவிமடுத்து இன்புற்றது போல, ஒரு சிறந்த தேவகானத்தை இதுவரை நான் கேட்டதேயில்லை. பொருளாழம் கொண்ட சொற்கள் எனது உள்ளத்தை நெகிழச் செய்ய, சடகோபன் சொன்ன "ஆயிரத்துளிப்பத்தும்" என்று பாடி பாசுரத்தை தலை கட்டியது. நான் எதைத் தேடி இவ்வளவுகாலம் அலைந்தேனோ அவை என்னையே தேடி வந்தது போல, என் உள்ளத்தை துள்ளச் செய்து, ஆகாயத்தில் சிறகடித்துப் பறக்கச் செய்து விட்டது. எனது உள்ளத்தில் புதையுண்ட நெடு நாளைய அவாவிற்கும் உனது தேவகானத்தில் விடை கிடைத்தது. நீ தலைகட்டியபடியே அந்த ஆயிரம் பாடல்களும் உனக்குத் தெரியுமா ? என்று ஆர்வமிக்க குரலில் அன்போடு வினவினார்.

ஸ்வாமி, எனது வாழ்க்கையில் இன்று மறக்க முடியாத ஒரு நந்நாள். எதைப் பெற வேண்டும் என்று நான் நாடு முழுவதும் அலைந்து எதிர் பார்த்திருந்தேனோ, அது மன்னனாரின் அருளால், தாங்கள் வாக்கினின்று பெற்றேன். நான் இசையை முறையாகப் பயின்றவளல்ல. இருப்பினும், குரு கூரிலுள்ள எனது பாட்டனாரிடம் பாடுவதற்கு கற்றுக் கொண்டவள். எனது குரல் வளமும், இனிமையாகப் பாடுந் திறனும் உருவ எழிலும், இளவயதும் இசை பாடுவதில் நாடளாவிய புகழ் பெறவேண்டும் என்ற எனது ஆவ லிற்கு வித்திட்டன. அதன் காரணமாக பாண்டிய மன்னன் ஆஸ்தான வித்வாம்சினியும், முறையாக இசை பயின்றவளுமான பாடகி ஒருத்தி யோடு போட்டியில் கலந்து கொண்டேன். ஜனரஞ்சகமான கவர்ச்சி மிக்க சொற்களால் புனையபப்பட்ட எளிய பாடல்களை மிக லாவகமாக பாடி வெற்றி வாகை சூடினார். அவள் பாடிய மானுட கானத்திற்கு முன், பொரு ளாழம் கொண்ட தெய்வீக இசை தேவகானமாக, என்னால் பாடப்பட்ட வைகள், அம்பலம் ஏறவில்லை. மிகப் பெரிய எதிர்ப்பார்ப்புகளை என்னுள் வளர்த்துக் கொண்ட என் உள்ளம் சுக்கு நூறாக வெடித்து சிதறியது. ஆணவத்தின் தோல்வியை உணர்ந்த எனக்கு ஒரு ஆவேசமும் பிறந்தது. எனது இசையை தெய்வத்திற்கே இனி அர்ப்பணிப்பது என்றும், எங்கே யாகிலும் எவராவது ஒருவர், எனது தேவகானம் மானுடகானத்தைக் காட்டிலும் மேம்பட்டது என்று போற்றி ஆசீர்வதித்தால், அதுவே நாடளா விய புகழ் என்று என் உள்ளம் கூறிற்று. அதன் விளைவே இந்த பாரத நாட்டு பயணம், என் எதிர்ப்பார்ப்பு வீண் போகவில்லை. ஆராஅமுதனே உங்கள் வாக்கில் எனது கானத்தை தேவகானம் என்று ஏற்றுக் கொண்டு

விட்டான். பிறவிப்பயனை அடைந்து விட்டேன் என்று கூறி, கண்களில் நீர் தளும்ப நாதமுனிகளை தண்டனிட்டு வணங்கி நின்றாள்.

மேலும், நாதமுனிகள் விரும்பிய விவரம் தன்பாட்டனாருக்கே தெரியும் என்று கூறி, மறுதினம் இருவரும் குருகூருக்கு பயணப்பட்டார்கள்.

நாதமுனிகள், இசையின் இலக்கண மரபுகளை நன்கு கற்றுணர்ந்த வித்தகர். தாளத்தின் ஒலியைக் கொண்டே தாளத்தின் எடையை துல்லி யமாகக் கூறும் ஆற்றல் பெற்றவர். குருகூர் செல்லும் வழியில், இசை பாடிய பெண்மணியுடன் பாண்டிய மன்னனைச் சந்தித்து தேவகானத்திற் கும், மானுட கானத்திற்கும் உள்ள இலக்கண வேறுபாடுகளைக் கூறி அதை அறியும் வகையையும் தெரிவித்து, அப்பெண்மணிக்கு ஆறுதலாக, மீண்டும் அப்பெண்மணியை பாடச் செய்து, அதன் உயர்த்தியை ஏனை யோர் அறியச் செய்யும்படி மன்னர் ஏற்பாடு செய்ய வேண்டும். என்று கேட்டுக் கொண்டாராம்!

குருகூரை அடைந்து, நாதமுனிகளை அப்பெண்மணி தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்று, தனது பாட்டனாருக்கு அறிமுகம் செய்வித்தாள்.

மதுரகவிகளின் குடிவழி வந்தவர் பராங்குசதாசர். மதுரகவிகள் விட்டுச் சென்ற பெருநிதி காலத்தால் சிதைந்தும் அழிந்தும் போய்விட் டது. எஞ்சியது, அப்பெண்மணி பாடிய பதினொன்று பாசுரங்களும், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்று தொடங்கும் மதுரகவிகளின் பிரபந்த மும் ஆகிய இரண்டு மட்டுமே, கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பதி னொன்று பாசுரங்களை, திருப்புளியடியில் அமர்ந்து, சடகோபனை மனத்திலிருத்தி, ஓர்த்த மனத்தினராய் பந்நீராயிரம் தடவை முன்று முறை அனுசந்திப்போர்க்கு, ஆழ்வார் தோன்றி அனைத்து பிரபந்த பாசுரங்களை யும் ஓதுவித்து அருளுவார் என்று மதுரகவிகளே தன் கைப்பட எழுதியி ருந்தாராம். அந்த ஒலையை அப்பெண்மணியின் பாட்டனாரான பராங்கு சதாசர், நாதமுனிகளுக்கு வழங்கி ஐயா எங்கள் குடிவழி மக்களுள், எவ ரும் இந்த முயற்சியை மேற்கொண்டதாகத் தெரியவில்லை. தாங்கள் முயன்று வெற்றி பெறுங்கள், ஆதிபிரான் அருள் புரிவார், என்று கூறி ஒலையை நாதமுனிகளிடம் வழங்கினாராம்.

மட்டற்ற மகிழ்ச்சி அடைந்த நாதமுனிகள். பாராங்குசதாசரை வணங்கி, ஓலையைப் பெற்றுக் கொண்டார். மறுதினம் அதிகாலையில், பொருநல் சங்கணித்துறையில் நீராடி, அனுட்டானங்களை முடித்துக் கொண்டு, ஆதிபிரான் ஆலயத்திற்குச் சென்று, பொலிந்து நின்ற பிரானை திருவடிதொழுது, திருப்புளியாழ்வார் எதிரில் அமர்ந்து வகுளாபரண சட கோபனைத் திருவடி தொழுது, "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்று தொடங்கும் பதினோறு பாசுரங்களையும் சடகோபனை தியானித்த வண்ணம் பந்நீராயிரம் தடவைகள் மூன்று முறை அனுசந்திக்கத் திரு வுள்ளம் பற்றி, அனுசந்திக்க தொடங்கினார்.

யோகம் பயின்றவர், சகல சாஸ்திரங்களையும், கசடறக்கற்றவர், இசைமேதை, வேதத்யயனம், செய்தவர், சீடருக்குரிய நல்லிணங்கங்களை அறிந்தவர். யோகியான நாதமுனிகள். அன்னபானமின்றி பாசுரங்களை அனுசந்தித்து வணங்கி நிற்க, ஞானதேசிகனான மாறனும் ஒளிப்பிழம்பாய் காக்ஷி அளித்தாராம்!

பேரானந்தம் கொண்ட நாதமுனிகள் பாராங்குசனை திருவடி முதல் திருமுடி வரை, கண்களில் நீர் மல்க சேவித்து, "வைகாசியில் விசாக நாளில் காரிக்கும் நங்கைக்கும், வைணவத்தின் மாநிதியாக வந்துதித்த வித்தகனே! உன்னையே சரணடைந்தேன். திருப்புளிக்குள் மோன நிலை கொண்ட மகிழ்மாலை மார்பா, இப்புவியினில், நன்மக்கள் கடைத்தேற, மறையின் பொருளை, ஆழ்வார்கள் அருளிச்செய்த படி எனக்கு உபதே சித்தருள வேண்டும் என விண்ணப்பித்தார்.

மாறனும் மனமகிழ்ந்து தாம் திருவாய் மலர்ந்தருளிய நான்கு பிர பந்தங்களையும், பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார், மழிசைபிரான், கோழியர்கோன் குலசேகரப் பெருமாள், விஷ்ணு சித்தர், பூங்கோதை, அடிப்பொடி, பாணன், அருட்கலியன். ஆகியோர் அருளிச் செய்த பிரபந் தங்களையும், அவைகளின் உட்பொருள்களையும், அவைகளுள் அடங் கிய ரகஸ்யதிரய சாரத்தையும், அஷ்டாங்கயோக ரகஸ்யத்தையும் பிர சாதித்தருளினார்.

எவராலும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒரு பேரானந்த அனுபவம் நாதமுனிகளுக்குக் கிடைத்தது. கிட்டுவதற்கு அரிதாயிருந்த அந்த அருட் செல்வத்தைப் பெற்ற நாதமுனிகள் பிரபந்த பாசுரங்களுக்கு இசையும் பண்ணும் அமைத்து, ஆழ்வார்கள் அவதரித்த கிரமத்தில், அவைகளைத் தொகுக்காமல், நான்கு பகுதிகளாகப் பிரித்து அளித்தார்.

பெரியாழ்வார் திருமொழி, பூங்கோதையின் திருப்பாவை, நாச்சியார் திருமொழி, குலசேகரப் பெருமாள், திருமொழி, மழிசைபிரான் திருச்சந் தவிருத்தம், அடிப்பொடிகளின் திருமாலை, திருப்பள்ளியெழச்சி, பாண னின் அமலனாதிபிரான், மதுரகவிகளின் கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகி யவைகள் அடங்கிய தொகுப்பு "முதலாயிரம்", என்றும் கலியனின் பெரிய திருமொழி, திருக்குறுந்தான்டகம், திருநெடுந்தாண்டகம், ஆகிய வைகள் அடங்கிய தொகுப்பு "பெரிய திருமொழி" என்றும், சடகோபரின் திருவாய்மொழி தொகுப்பு "திருவாய்மொழி" என்றும் முதலாழ்வார்களின் மூன்று திருவந்தாதிகளும், மழிசைபிரானின் நான்முகன் திருவந்தாதியும், மாறனின் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதியும், கலிய னின் திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகி யவைகளைக் தொகுத்து "இயற்பா" என்றும் நான்கு பகுதிகளாய் அமை யப் பெற்ற 3815 பாசுரங்கள் கொண்ட "நாலாயிரத்திவ்ய பிரபந்தம்" என்ற

தமிழ் மறையை நாட்டிற்கு வழங்கியவர், யோகியும் சடகோப பக்தருமான நாதமுனிகள் ஆவார்.

வடமொழியில் உபதேசிக்கப்பட்ட வேதசாரத்தையும், அதன் பொருளை உள்ளடக்கிய தமிழ் மறையான பிரபந்த பாசுரங்களையும், கற்றுணர்ந்த வைணவர்களை "உபயவேதாந்திகள்" என்று அழைக்கும் மரபை உண்டாக்கியவரும் நாதமுனிகளே!

சடகோபரால் நாதமுனிகளுக்கு உபதேசிக்கப்பட்ட "அஷ்டாங்கயோக ரகஸ்யம்" என்ற செல்வத்தை அவரது பேரன் ஆளவந்தார் பெற முடியா மற் போனதால், நமக்கும் அதைப் பெறும் பாக்கியம் கிட்டாமற் போயிற்று.

மதுரகவிகளுக்குப் பிறகு, நாம் அடைய முடியாத பெருநிதியை, ஆழ்வார் மனங்குளிர்ந்து மீண்டும் ஒரு முறை நாதமுனிகளுக்கு உபதே சித்தமையால், "நாதனுக்கு நாலாயிரம் உரைத்தான் வாழியே" என்று ஆழ்வாரை வைணவ உலகம் போற்றித் துதிக்கின்றது.



# இயல் 22

# நம்பெருமாள்

திருவரங்கத்தில் ஒரு கால கட்டத்தில் நின்று போயிருந்த திருவத்யயன உற்சவம், நாதமுனிகளின் முயற்சியால், மீண்டும் சிறப்பாகத் தொடங்கி வைக்கப்பட்டது.

நாதமுனிகள் தனது சகோதரியின் மக்களும், திருவரங்கத்திலேயே பகவத் கைங்கர்யங்கள் செய்து வந்த, கீழையகத்தாழ்வானுக்கும், மேலையகத்தாழ்வானுக்கும் திவ்ய பிரபந்தங்களை கற்றுத்தந்தார். ஆழ்வார்களின் பாசுரங்களனைத்தும் தெய்வீகமான மறையின் கருப்பொருளை, தீஞ்சுவை செந்தமிழ் சொற்களால் புனையப்பட்டவைகளாகும். அதனால், வடமொழி வேதங்களுக்கு "உதாத்த, அனுதாத்த, சுவர" பேதங்களின் உச்சரிப்பு முறை வகுத்தபடியே திவ்ய பிரபந்த பாசுரங்களுக்கும் பண்ணும் தாளமும் வகுத்து திவ்ய கானத்தில் இயலும் இசையும் அடங்க அமைத்ததின் காரணமாக, பிரபந்தங்களின் இசை தேவகானமானது. தனது மருமக்களைக் கொண்டு அவ்வாறு செயல்பட்டதால் அவர்களிருவரும் தேவ கானத்தில் இசைத்து கற்று தேர்ந்தனர்.

இவ்விருவரையும் திருவத்யயன உற்சவத்தின் போது, தமிழ் மறை விண்ணப்பஞ் செய்வார்களாகத் தோற்றுவித்து, நாதமுனிகள் மீண்டும் உற்சவத்தைத் தொடங்கி வைத்தார் என்று திருவரங்கம் கோயிலொழுகு கூறுகிறது.

இவ்விருவருக்கும், அழகிய மணவாளப் பெருமாள் "அரையர்" என்று திருநாமஞ் சூட்டி உகந்தாராம்.

தெய்வத்திற்கு முன் இசைக்கும் தெய்வீக கலையான, அரையர் சேவையை, ஒரு மகோன்னதமான கலையாக வளர்த்து பெருமை கொண்டவர் நாதமுனிகள், அவரது கொள்ளுப் பேரனும் ஆளவந்தாரின் திருக்குமாரருமான "திருவரங்கத்துப் பெருமாள் அரையர்", நாதமுனிகளைப் போலவே இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ் கலைகளிலும் மிகச் சிறந்து விளங்கியவர். அரையர் சேவையை மேலும் சிறப்பாக வளர்த்த பெருமை கொண்டவர்.

தனது தந்தைக்குப் பின் வைணவ பீடத்தின் தலைமை ஆச்சார்யாராக அலங்கரித்த இராமாநுஜரை காஞ்சியிலிருந்து திருவரங்கத்துக்கு அழைத்து வந்தது திருவரங்கத்து பெருமாள் அரையரின் இசையே ஆகும். அது ஒரு சுவையான நிகழ்ச்சி.

காஞ்சி தேவராஜப் பெருமாளுக்கு முன் பகவத் விஷயத்தை தேவ கானமாக சேவித்தும், அபிநயித்தும் மகிழ்விக்க, பெருமாள் திருவுள்ளம்

உகந்து, அரையருக்கு அநேக வரிசைகளை அளித்து, தன்னையும் தேவிகளையும் தவிர, விரும்பியது, எதுவாகிலும் தருவதாக வாக்களித் தாராம். அரையரும் இராமாநுஜரை தன்னுடன் திருவரங்கத்திற்கு அனுப்பி வைக்குமாறு கோரவும் பெருமாள், அவரைப் பிரிய தாம் திரு வுள்ளம் பற்றவில்லை என்று கூறினாராம். அதற்கு அரையர் சற்றுந் தயங் காமல், "எம்பெருமானே, தாங்கள் விபவத்தில் இராமராக இருந்தபோது இரண்டு சொல் சொன்னதாக வழக்கே இல்லையே என்று கூறி முடிப் பதற்குள் "தந்தோம் இராமநுஜரை" என்றாராம். பெருமாள் திருவுள்ளத் தோடு தொடர்பு கொள்ள வைக்கும் ஆற்றல் கொண்ட தெய்வீக இசையை தேவகானமாக இசைத்து பெருமாளிடம் வரம் பெற்றதின் காரணமாக கோவில் அரையருக்கு "வரந்தரும் பெருமாள் அரையர்" என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது. நாதமுனிகளால் தொடங்கப்பட்ட திருஅத்யயன உற் சவமும் வெகு சிறப்பாக சில நூற்றாண்டுகள் நடந்து வந்தது. பிறகு ஒரு காலகட்டத்தில், அன்னிய சமயத்தார்களின் படையெடுப்பின் காரண மாக, மீண்டும் உற்சவம் நின்று போயிற்று.

இரண்டு, மூன்று கால கட்டங்களில் திருவரங்கம், படைதாக்குத லுக்கு, உட்பட்டது. ஒவ்வொரு முறையும் பொருட்சேதமும், உயிர்சேதமும், மிக அதிக அளவில் இருந்ததாம். ஆலயப் பணியாளர்களும், வைணவப் பெரியோர்களும் பல வகையில் பாடுபட்டு மூலபேரத்தைக் காப்பாற்றி னார்கள். உற்சவ திருமேனியையும், விமானத் தங்க தகடுகளையும், ஆப ரணங்களையும் "உல்லுகான்" என்பவன் களவாடிச் சென்று விட்டான்.

தினமும் அரங்கனை சேவித்த பிறகே உணவு உட்கொள்ளும் பழக் கத்தைக் கொண்டவர், கரம்பனூர் அம்மாள் என்று அழைக்கப்படும் ஒரு பெண்மணி. (கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள உத்தமர் கோயிலே அன்றைய கரம்பனூர்). எதேச்சையாக அந்த பெண்மணி அன்று ஆல யத்திற்கு வந்தபோது, அரங்கனின் திருமேனியை எடுத்துச் செல்வதை அறிந்து, அக்கூட்டத்தை அவர்கள் அறியா வண்ணம் பின் தொடர்ந்து டில்லி வரை சென்று, அரங்கன் திருமேனி, உல்லூகானின் மகள் சுல்தா னியாவிடம், இருப்பதை அறிந்து வந்து கூறினாள். அதற்குள் பல ஆண்டு கள் சென்று விட்டதாம். அவளை "பின் சென்ற வல்லி" என புகழ்ந்தனர்.

திருவரங்கத்து பெருமாள் அரையர் குடிவழியில் வந்த இசைஞானம் மிகுந்த அரையர் ஒருவரும், கூட இருவரும், டில்லிக்கு சென்று, உல்லூ கான் அனுமதி பெற்று, சுல்தானியிடமிருந்து அரங்கனின் திருமேனிக்கு முன், அரையர் தேவகானம் இசைத்து அபிநயித்து தன்னுடன் வர விண்ணப்பிக்க, அது சமயம் சுல்தானி மயக்க முற, மயக்க நிலையிலேயே, தன்னை அறியாது, அரங்கனை அரையரிடம் கொடுக்கவும், அவர்கள் திரும்பினார்கள். சுல்தானி தெளிவடைந்ததும், திருமேனி பிரிவு தாங்காது பின் தொடர்ந்தாளாம்.

பல மாதங்கள் பயணப்பட்டு, அரையர் திருமலையை அடைந்தார். ஆங்காங்கே சிலர் கலகம் விளைவித்துக் கொண்டிருந்ததால், அதை அறிந்த அரையர் திருவரங்கத்திற்கு தொடர்ந்து பயணப்படாமல் திரும லையிலேயே, பாதுகாப்பான இடத்தில் அரங்கனை எழுந்தருளப்பண்ணி, தகுந்த சமயத்தை எதிர்பார்த்திருந்தார். தொடர்ந்த சுல்தானியும் சந்திர கிரியை அடைந்து, அரங்கனைப் பெற இயலாது அவரைப் பிரிந்த துய ரம் தாங்காது, களைப்பு மேலிட உயிர் நீத்தாள். இதை அறிந்த அரையர், இப்படியும் ஒரு பிரேமையா என்று சுல்தானியைப் போற்றி புகழ்ந்தாராம்.

சிலமாதங்கள் கழித்து, நாட்டில் அமைதி நிலவவும், அரையர், அரங் கனின் திருமேனியை எழுந்தருளிப் பண்ணிக் கொண்டு, திருவரங்கம் திரும்பும் வழியில், கலவரம் நடப்பதை அறிந்து, செஞ்சி கோட்டையில் விக்ரகத்தோடு சில காலம் பாதுகாப்பாக தங்கி இருந்து, பிறகு திரு வரங்கம் அடைந்தார்.

அரங்கனின் திருமேனி களவு போனதிலிருந்து, அதை அரையர் மீட்டு வருவதற்குள் ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் கடந்து விட்டதாம்! அதனால் மீட்டுக் கொண்டு வந்த திருமேனியைத் தொட்டு கைங்கர்யம் செய்து வந்த கோயில் பட்டாச்சார்யார்கள் காலமாய் விட்டதால், அத்தி ருமேனி, (அரங்கன்தானா என்ற ஐயம் ஆலய தலத்தார்கள் சிலருக்கு தோன்றியதாம். திருமேனியை தொட்டு கைங்கர்யம் செய்து வந்த அரச்சகர்கள் இல்லாத நிலையில்), எம்பெருமானின் வஸ்திரங்களை தின மும் துவைத்து தரும் ஈரங்கொல்லியான (சலவை தொழிலாளி) 97வயது நிரம்பிய முதியோரிடம் அரங்கன் திருமேனியில் சாத்தியிருந்த சிகப்பு கைலி வஸ்திரத்தையும், அதைப் போன்று வேறு சில வஸ்திரங்களையும் கொடுத்து ஈரவாடை அறியுமாறு நியமித்தார்களாம். துணிகளை தண்ணீ ரில் நனைத்து முகர்ந்ததில் அரங்கனின் மேல் சாற்றியிருந்த கைலித் துணியை மட்டும் கையிலெடுத்து, இத்துணியை அணிந்திருந்தவரான இவரே "நம்பெருமாள்" என்று மகிழ்ச்சி பொங்க உரக்க கத்தினானாம். பிறகு ஒரு நன்னாளில், அரங்கனின் திருமேனி ஸ்தாபிக்கப்பட்டதாம்.

திருவரங்கத்தில் பெருமாளின் வஸ்திரங்களை தினமும் ஈரங்கொல் லியே, கொள்ளிடத்தில் சலவை செய்து, ஈரத்தோடு ஆலயத்தில் கொடுத்து விடுவது மரபு. அது இன்றும் தொடர்கிறது. மேலும் அந்த ஈரங்கொல்லி குடிவழியார்களுக்கு, இறப்பு நேரும் போது, ஆலய மரியா தையும், வாய்க்கரிசியும், வழங்கப்படுகிறது!

நம்பெருமாள் முக்கிய தினங்களில் சிகப்பு லுங்கி வஸ்திரம் அணிந்தே திருமஞ்சனம் கண்டருள்வார். பிறகு, அந்த ஈரவஸ்திரத்தை பிழியாமல், அரையருக்கு வழங்குவது மரபு. அரையர் அதை நான்காக மடித்து, சேவார்த்திகளின் கையில் சிறுக சிறுக பிழிவதே ஈரவாடை தீர்த்தப்பிரசாதமாகும்.

ஈரங்கொல்லி, "நம்பெருமாள்" என்றே அரங்கனை இனம் கண்டு உரக்கக் கூறியதால், அழகிய மணவாளப் பெருமாள் நம்பெருமாள் என்றே அழைக்கப்படுகிறார்.

இசையால் அரங்கன் திருமேனி, சுல்தானியாவிடமிருந்து மீட்கப்பட் டதால், அரையர்களுக்கு "இசை அறியும் பெருமாள் கூட்டத்தார்" என்றும் அருள்ப்பாடு வழங்குகிறது.

ராஜ மகேந்திரன் திருச்சுற்றில் கிழக்குப் பகுதியில் உள்ள அர்ச்சுன மண்டபத்தில் வடகிழக்கு மூலையில் உள்ள ஒரு அறையில், அரங்கனின் திருமேனி மீது அடங்காப் பிரேமை கொண்டு, பிரிவு தாங்கா மல் உயிர் நீத்த சுல்தானியாவின் உருவத்தை, அரையர் அவளது உருவ அமைப்பைக் கூறியபடி ஒரு வர்ண ஓவியமாக தீட்டப்பட்டு, "துருக்க நாச்சியார்" சன்னதி என்று வழங்குகிறது. நம்பெருமாள் திருஅத்யயன உற்சவம் கண்டருளும் பகல் பத்து உற்சவம் பத்து நாட்களிலும் நாச்சி யாருக்கு (சுல்தானியாவுக்கு) சேவை சாதிக்கும் வகையில், பெருமாள் ஒய்யார நடை நடந்து, நாச்சியார் சன்னதிக்கு பக்கத்து மண்டபத்தில் எழுந் தருள்வதற்கு முன், நாச்சியார் (சுல்தானி) சமர்ப்பிக்கும் வெற்றிலைப் பாக்கை பெற்றுக் கொள்வார். அதை கொடுக்கும் மரபு முதலில் மூணா வதான சுண்ணாம்பும், அடுத்து வெற்றிலையும், பிறகு பாக்கும், சமர்ப்பிக் கப்படும். பிறகு மண்டபத்தில் எழுந்தருளி அரையர் இசை கேட்டு உகப்பார்.

அரங்கனின் திருமேனியை மீட்டு வர நாதமுனிகளால் புத்துயிர் ஊட்டப்பட்ட அரையர் சேவையான தேவகான இசையே உதவியது என்ற சிறப்பினைக் காட்டுவதற்காக, இந்நிகழ்ச்சி இங்கே கூறப்பட்டது.



## இயல் 23

# அரையர் சேவை

வைணவ அடியார்கள் எம்பெருமானிடம் ஈடுபாடு கொண்டு, பிர பந்தங்களைப் பாடி அபிநயித்து ஆடும் நாடகரங்கம் ரங்கமாகும். இத்த லத்திற்கு மேற்கே பத்து மைல் தொலைவில் இரண்டாகப் பிரிந்து காவேரி, ரங்கத்திற்கு தென்புறம் காவேரியாகவும், வடபுறம் கொள்ளிடமாகவும், பாய்ந்து ஓடி அரவணையானுக்கு திருமாலையாக விளங்குவது ஒரு அரிய காக்ஷி. ரங்கமே ரங்கம், திருவரங்கம், பூலோக வைகுண்டம், போக மண்டபம், பெரிய கோவில், என்று பல பெயர்களில் போற்றப்படுகிறது.

பரப்பிரும்ஹ சுவரூபமே இங்கே எழுந்தருளியுள்ளதாக ஐதீக்யம். அதனால் இங்கு அனைத்தும் வேத சுவரூபமாகவே சிறப்பிக்கப்படுகிறது. நம்பெருமாள் மிகப் மிகப் பழைய பெருமாள். சத்ய லோகத்தில் பிரமனால் ஆராதிக்கப்பட்டவர். ரகுவம்சத்தவரான இஷ்வாகுக்கு குலதனமாக அளிக்கப்பட்டவர். அவருடைய விபவமான இராமனாலேயே ஆராதிக் கப்பட்டவராதலால், பெரிய பெருமாள் என்று சிறப்பிக்கப்பட்டவர். இலங் கேச்வரனான விபீஷணனுக்கு அன்பளிப்பாக இராமனால் வழங்கப்பட்ட வர். காவேரிக்கு கொடுத்த வாக்கின்படி ரங்கம் என்ற தீவில் எழுந்தரு ளத் திருவுள்ளம் கொண்டவர் என்றென்றும் இலங்கையையே நோக்கி எழுந்தருளி விபீஷ்ணாழ்வாருக்கு அபயம் அளித்தவர்.

பரப்பிரும்ஹ சுவரூபமான ஸ்ரீமந்நாராயணனே, திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பதால், அங்கு அனைத்தும் "பெரிய" (பிரும்ஹ) என்ற அடைமொழியிட்டே குறிப்பிடப்படுகிறது. மேலும் வைகுண்டத்தைப் போலவே அமைந்துள்ளதால் பூலோக வைகுண்டம் என்று சிறப்பித்துப் பேசப்படுகிறது.

வெளியிலிருந்து உள்ளாக, மாடங்கள் சூழ்ந்த திருச்சுற்று பூலோகம்: திருவிக்ரமன் திருச்சுற்று புவர்லோகம்: ஆலிநாடன் திருச்சுற்று மஹர் லோகம்: குலசேகரன் திருச்சுற்று ஜனேலோகம்: ராஜமஹேந்திரன் திருச் சுற்று தபோலோகம்: தர்மவர்மன் திருச்சுற்று சத்யலோகம் என்று ஏழு திருச்சுற்றுகள், ஏழு உலகங்களாகவும், காயத்ரி மண்டபம் வேத அக்ஷரம் என்றும், விமான சிகரம், வேத சிருங்கமாகவும், விமானம் ஒங்காரமாகவும் (பிரணவமாகவும்), பெருமாள் வேத சுவரூபனாகவும், சேவை சாதிப்பது வைகுண்டத்தைப் போல அமைந்துள்ளதால் பூலோக வைகுண்டமாயிற்று.

அனைத்து திவ்யதேசங்களுக்கும், அரங்கம் மூலாதாரமாக விளங் குவதால், இத்தலத்தை மட்டும் சேவித்தாலே, நூற்றி எட்டு திவ்யதேசங் களையும் சேவித்த பலன் கிட்டும் என்று பெரியோர் பணிப்பர். எவராலும் உண்டாக்கப்படாத தானே தோன்றிய (சுவயம் வியக்தம்) தலங்களுள்

முதன்மையானது. இதர தானே தோன்றிய தலங்கள் பத்ரிகாச்ரமம், புஷ்கரம், நைமிசாரண்யம் தோதாத்ரி, திருமலை, ஸ்ரீமுஷ்ணம் ஆகியவைகளாம்!

அனைத்து வேதசாரங்களும் பிரணவமான ஓங்காரம் என்பதின் அடைவுக்குள் இருப்பது. அதனால் வேத சுவரூபனான பெரிய பெருமாள் பிரணவமான ஓங்காரத்தின் சாயையான விமானத்திற்குள், கிடந்தே சேவை சாதிக்கின்றார். யக்ஞமே இவரது ரூபம், இவரது ரூபமே யக்ஞம்.

இக்கோவிலில் நடைபெறும் கைங்கர்யங்களனைத்தும் யாக, யக்ஞாதிகளின் தன்மையை சார்ந்தே அனுசரிக்கப்படுபவைகளாகும்.

கருவறைக்குப் பக்கத்தில் ராஜ மஹேந்திரன் திருச்சுற்றின் வட மேற்கு மூலையில் யாக சாலை அமைந்துள்ளது. அங்குள்ள ஓம குண்டங்களுள், ஒரு குறிப்பிட்ட குண்டத்தில், தினமும், இருவேளைகளில் ஓமம் செய்யப்பட்டு வருகிறது. ஓமத்திற்கு முக்கிய தேவதை அக்நி: சாந்தியே பெறா வண்ணம் காப்பாற்றப்படவேண்டும். அந்த அக்நி "கார்ஹபத்யம்" என வழங்கப்படுகிறது. இதர அக்நிகள் "ஆஹவநீயம்", "தக்ஷிணாக்நி" யாகும். கார்ஹபத்யம், சாந்தியே ஆகாமல் நிரந்தரமாக காலங்காலமாக திருவரங்கத்து யாக சாலையில் காப்பாற்றப்பட்டு வருகிறது.

யாக, யக்ஞாதிகள் செய்தே பிரமனாலும் இராமனாலும் ஆராதிக்கப் பட்டவர் பெரிய பெருமாள் என்ற காரணத்தால் அதே முறை திருவரங்கத்திலும் அனுட்டிக்கப்படுகிறது.

ஓமம் செய்த பின்பே முக்கிய உற்சவங்களும், குறிப்பாக பவித்ரோத்சவமும் தொடங்கப்படும். ஓமத்திற்குரிய அக்நீ, யாக சாலையிலுள்ள கார்ஹபத்யத்திலிருந்து எடுத்து வரப்பட்டு ஓமம் செய்யப்படும்.

யாகத்திற்க்கு உரிய பொருள்கள், பசும்பால், பசுந்தயிர், பசுநெய், நெல், யவம் (கோதுமை) ஆகியவைகளாகும். நெல், யவம் இவைகளிலான மாவை வறுத்து, நீர் சேர்த்து, உருண்டையாக பிடித்தது "புரோடசம்" எனப்படும். நெல், யவம் இவற்றின் அரிசியினால் கஞ்சி வடிக்காமல் பாகம் பண்ணப்படும் சாதம் "சரு" எனப்படும்.

கஞ்சி வடிக்காமல் தளிகை செய்த அரிசிச்சாதமே, "வெள்ளிச்சம்பா" என்ற பெயரிலும் "திருப்பாவாடை" என்ற பெயரிலும், உப்பு புளி காரம் கலப்பு இல்லாமல் நெய் மட்டும் சேர்த்து நிவேதனமாக அளிக்கப்படுகிறது. மேலும், கோவில் பக்ஷயங்கள் அனைத்தும் நெய்யினால் மட்டுமே பாகம் செய்யப்படுகிறது. தீபம், தாசரி பந்தம், தீவட்டி எதுவாகினும், நெய்யில் தான், எண்ணை கலப்பே சிறிதும் கூடாது.

இங்கு பெருமாள் பெரிய பெருமாள் : பிராட்டியார் பெரிய பிராட்டியார்: நித்திய தளிகை பெரிய அவசரம்: வாத்யங்கள் பெரிய மேளம்: ஊர் பேரரங்கம்: பக்ஷயங்கள் பெரிய திருப்பணியாரம்: சந்தனுமண்டபம் பெரிய திருமண்டபம், என்று அனைத்தும் பெரிய என்ற அடைமொழியிட்டே வழங்கப்படுகிறது.

அன்னியர்களின் பாதிப்புக்குள்ளான ஓங்கார விமானத் தங்கத் தகடு களை புதுப்பித்துக் கொடுத்தவர், முதலாவது ஜாதவர்ம சுந்தரபாண்டிய னாகும். சிதைந்த மண்டபங்களையும், கோபுரங்களையும் திருப்பணி செய்து புதுப்பித்தவர். விஜய நகரத்து மன்னனாகும். களவுபோன திரு வாபரணங்களுக்காக புதியவைகள் செய்தும், தங்கக் கட்டிகளாகவும் வழங்கியவர் மதுரை நாயக்கர் மன்னர்களாகும். விஜய நகரத்து மன்ன னால் கட்டப்பட்டு பூர்த்தியாகாமல் மொட்டையாக இருந்த தெற்குவா யில் ராஜகோபுரத்தை ஆசியாவிலேயே மிக உயர்ந்த கோபுரமாக கட்டி திருப்பணி செய்து கோபுரம் போல உயர்ந்திருந்த அகோபிலத்து மடாதி பதியாகவும், பெருமைக்குரிய வைணவ ஆச்சர்யாரகவும் வீற்றிருந்து, அண்மையில் திருநாடு அலங்கரித்த 44வது பட்டத்து அழகிய சிங்கரான ஸ்ரீவண் சடகோப வேதாந்த தேசிக யதீந்தர மகாதேசிகனாகும். (உயரம் 230 அடி)

இப்படி பலவகையில் பெருமை பெற்ற பெரிய கோவில் திருவத்யயன உற்சவத்தில் தமிழ் மறையை (பிரபந்த பாசுரங்களை) தேவகானமாக பாடி பொருள் விளங்க அபிநயித்து, அரங்கன் உகந்த, தொன்று தொட்டு இன்று வரை நடைபெற்று வரும், ஒரு அரிய கலை நிகழ்ச்சியான அரையர் சேவையைப் பற்றி அறிந்து கொள்ள, அடியேன் சொல்லுவேன்.

வைணவ ஆலயங்களில் வீதியார வருவார் என்று வழங்கும் எம்பெருமானின் உற்சவ திருமேனிக்கு முன், பல நூற்றாண்டுகளாக இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ் வளர்க்கும், சம்பிரதாய வழியில் நிகழ்த்தப்படும் ஒரு அரிய கலை நிகழ்ச்சியே அரையர் சேவையாகும்.

இக்கலை, கீழையகத்தாழ்வானுக்கும், மேலையகத்தாழ்வானுக்கும், நாதமுனிகளால் கற்பிக்கப்பட்டு தோற்றுவிக்கப்பட்டது என்பதை முந்தைய இயலில் அறிந்துள்ளோம். பிரபந்தங்களுள் சாமவேத சார்பு கொண்ட திருவாய் மொழிக்கே பண்ணும் இசையும் அமையப் பெற்றவை. அதனால் பண்ணார் பாடல்கள் எனப்பட்டது. தாள இலக்கணங்களை துல்லியமாக அறிந்திருந்த இசை மேதையான நாதமுனிகள், பண்ணார்பாடல்களுக்கு தகுந்த தாள வகையை அமைத்து, சில பழமையான பண்களையும், புகுத்து தனது மருமக்களுக்கு கற்பித்த மரபே இன்றும் தொடர்கிறது. அப்பண் களும், தாளங்களும் முறையே, முதிர்ந்த குறிஞ்சி, இந்தனம், நட்ட பாஷை, தக்கேசி, கொல்லி, தோடயம், நாட்டம் போன்ற பண்களும் இடையொத்து ஏழொத்து ஒன்பதொத்து போன்ற தாள வகைகளாகும்.

தமிழ்நாட்டில் பலர் அறியாத கலை இது. வைணவப் பெரியோர்களாலும் அரையர்களாலும் அறியப்பட்ட இக்கலை, தற்சமயம், ஆழ்வார் பிறந்த தல மான ஆழ்வார் திருநகரி, திருவரங்கம், வில்லிப்புத்தூர் ஆகிய மூன்று தலங்களில் மட்டுமே நடைபெற்று வருகிறது.

இடையின 'ர' அமைத்து "அரையர்" என்று கூறினாலும் வல்லினம் அமைத்து "அறையர்" என்று கூறினாலும் பொருந்தும். பிரபந்த பாசுரங் களுக்கு ஆழ்வார்கள் அரசர் என்ற வகையில், ஆழ்வார்கள் ஸ்தானத் திலிருந்து செயல்படுவதால், அரசர் என்று பொருள்பட "அரையர்" என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் பாசுரங்களைப்பாடி விளங்க வைப்ப தால், எடுத்துக் கூறல் என்று பொருள்படும் அறைதல் என்பதனைச் சார்ந்து 'அரையர்' என்று அழைக்கப்படுகிறார்கள். நம் பெருமாளே அவர் களுக்கு அரையர் என்ற பெயரை வழங்கினார் என்று முன்பே குறிப்பிடப் பட்டுள்ளது.

ஆண்டு முழுவதும் திருவரங்கத்தில் நித்யோத்சவம் நடக்கின்றபடி யால், அநேகமாக எல்லா உற்சவங்களிலும் அரையர்கள் பங்கேற்கின்றார் கள். எனினும், மார்கழி மாதத்தில் நடைபெறும் திரு அத்யயன உற்சவத் தின் போது, தொடர்ந்து இருபது தினங்கள் நடைபெறும் அரையர் சேவை சிறப்பு வாய்ந்ததாகவும், கலையின் பல நுணுக்கங்களையும் கண்டு அனு பவிக்கும் வகையில் முக்கியத்வம் வாய்ந்ததாகவும் அமைந்தது.

இக்கலைக்கு விசேஷ ஒப்பனைகள் ஒன்றும் கிடையாது. நம்பெரு மாள் கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான் ஆகியோர்களுக்கு அரையர் என்ற நாமத்தை வழங்கிய போதே, தலையில் அணிவதற் கென்று ஒரு அணிகலனையும் வழங்கினாராம்! அந்த அணிகலன் சுமார் ஒரு அடி உயரமும், அரக்கு அல்லது பச்சை வண்ண வெல்வெட் துணி யால் ஆனது. கூம்பு வடிவமாக அமைந்துள்ள அதன் மேல் பகுதியில், கல சம் போன்று ஒரு பித்தளை குமுழி பொருத்தப்பட்டிருக்கும். இரண்டு புற மும், காதுகளை மறைக்கும் வகையில் இரண்டு பட்டைகள் தொங்கும். முன்புறத்தில் தென்கலை திருமண் காப்பிட்டு, இருபுறமும் சங்கு சக்கர லச்சினைகள் வரையப்பட்டு, குல்லாய் முழுவதும் சரிகை வேலைப்பாட்டு டன் அமைந்திருக்கும். இந்த தலை அணியை அரையர்கள் தவிர மற்ற எவரும் அணிய உரிமை இல்லை.

கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான், திருவரங்கத்து பெரு மாள் அரையர், ஆகியோர்களின் வம்சாவளி மக்களுள், அரங்கனுக்கு கைங்கர்யர்களாக செயலாற்றுபவர்களே அரையர்களாகும். குடிவழியில் வந்த மூத்த ஆண்மக்களே அரையராக செயல்பட தகுதி பெற்றவர்கள். ஆண்வாரிசு இல்லையென்றால் தத்து எடுத்துக் கொள்ளலாம். பெண்கள் பங்கேற்பதில்லை. எம்பெருமான் திரு முன் நடைபெறும் கலையானதால், சுத்தம் கருதி, பெண்களை இக்கலையில் ஈடுபடுத்துவதில்லை.

பத்து அல்லது பனிரெண்டு ஆண்டுகள் பயிற்சி அளிக்கப்படுகின்றது. தந்தையே பயிற்சி அளிக்கின்றார். மனப்பாடமாகவே, பாசுரங்களைப் பயின்று சேவையில் ஈடுபட வேண்டும். வெண்கலத்திலான சிறு வகை தாளங்கள் பயன்படுத்தப்படுகின்றன. சற்றே குழிவாகவும் வட்ட வடிவ

மாகவும் அமையப் பெற்றிருக்கும் தாளங்களில் ஒன்றில் நம்மாழ்வார் என்றும், மற்றொன்றில் நாதமுனிகள் என்றும் பெயர்கள் பொறிக்கப்பட்டி ருக்கும். அடித்தாளத்தின் கயிரை விரல்களுக்குள் இடுக்கி, இடது உள்ளங்கைக்குள் நிலையாக வைத்துக் கொண்டு மேல் தாளத்தை வலது கையில் பிடித்து, அடித்தாளத்தின் விளும்பில் தட்டி ஒலி எழுப்பி, பாசுரங்கள் பாடுவர்.

மார்கழி மாதத்து வளர்பிறை முதல் தினம் தொடங்கி, பகல் பத்தில் (பகலில் நடக்கும் பத்து தினங்கள்) அர்ச்சுன மண்டபத்திலும், வைகுண்ட ஏகாதசி தொடங்கி இராப்பத்தில் (இரவில் நடக்கும் பத்து தினங்கள்) திரு மாமணி மண்டபத்திலும் அரையர் சேவை நடைபெறும் நம்பெருமாள் இரண்டு இடங்களிலும் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து, திரு மங்கை ஆழ்வாரின் வேண்டுகோளுக்கிணங்க, கண்டருள்வது மரபு. நம்பெருமாளை நடுநாயகமாக ஒரு உயர்ந்த சுவர்ண கட்டிலில் எழுந்த ருளப் பண்ணி, முன்புறம் அகன்ற இடைவெளி விட்டு, இருபக்கங்களி லும், ஆண்டாளைத் தவிர இதர ஆழ்வார்களின் திருமேனிகள் எழுந்த ருளிச் செய்து, பெருமாளுக்கு எதிரில் அகன்ற இடைவெளிக்கு அப்பால், பெருமாளை நோக்கியபடி, நம்மாழ்வாரையும், ஒரு புறம் திருமங்கை ஆழ்வாரையும், மறுபுறம் இராமானுஜரையும் எழுந்தருளப் பண்ணி, சுற்றி லும் சேவார்த்திகள் அமர்ந்திருக்க, பெருமாளுக்கு முன் அமைந்த இடைவெளியில் அரையர் சேவை நிகழ்ச்சி நடைபெறும். இவ்வகையில் பெருமாள் எழுந்தருளியிருப்பதே, திருவோலக்கமாக எழுந்தருள்வதாகும். (ஒரு அரசன் சிங்காசனத்தில் அமர்ந்து மந்திரி பிரதானிகள் சூழ மந்திராலோசனை நடத்துவது போல).

'அருளப்பாடு' விஷ்ணு ஆலயங்களில் மட்டுமே வழக்கிலுள்ளது. எனினும் திருவரங்கத்தில் நம்பெருமாளுக்கு நடக்கும் ஒவ்வொரு உபசாரமும் அரு ளப்பாடுடன் தான் நடக்கும். அருளப்பாடு என்றால் அழைப்பு விடுவது என்று பொருள். முற்காலத்தில் யாக யக்ஞங்கள் நடைபெறும் போது பின்பற்றப்படும் முறை தான் அருளப்பாடு. பெருமாளே அழைப்பு விடுவது போன்று ஒவ்வொரு கைங்கர்யத்திற்கும் அழைப்பு விடுப்பது, திருவரங் கத்தில் வெகுகாலமாக பின்பற்றப்பட்டு வருகிறது. பெருமாளுக்கு செய்ய வேண்டிய கைங்கர்யங்களை அதற்காக ஏற்படுத்தப்பட்டவர்கள், உரிய காலத்தில் தவறாமல் செய்ய வேண்டும். அதற்குரிய பயிற்சியும் பெற்று, செயலனுபவமும் இருக்க வேண்டும். கைங்கர்ய காலத்திற்கு முன்னமேயே, அவர் தயாராக காத்திருக்க வேண்டும். அவர் செய்யப் போகும் கைங்கர் யத்தின் பெயரைச் சொல்லி அருளப்பாடு வழங்கப்படும் வழங்கிய உட னேயே, சிறிதும் தாமதமில்லாமல், கைங்கர்யத்தில் ஈடுபட வேண்டும். எம்பெருமானின் அந்தரங்க ஊழியர்களுள் ஒருவர், பெருமாள் பக்கலில் நின்று உரத்த குரலில், "அருளப்பாடு வேத விண்ணப்பம் செய்வார்" என்றோ, "அருளப்பாடு திருவாய்மொழி முழக்கம் செய்வார்", என்றோ,

"அருளப்பாடு ஸ்ரீபாதங்கள் தாங்குவார்" என்றோ அருளப்பாடு வழங்குவர். காத்திருக்கும் கைங்கர்யகாரர்கள், அடக்க ஒடுக்கத்துடனும், வினயத்துடனும், பெருமானுக்கு முன் சென்று கைங்கர்யம் செய்ய வேண்டும். இவ்விதம் பலவகையான கைங்கர்யங்களுக்கும் அருளப்பாடு உண்டு.

திருவரங்கத்தில் ஓங்கார விமானத்துள் வேத சுவரூபனாக பரம்பொருளே எழுந்தருளியிருப்பதால், கைங்கர்யங்க்காரர்கள், எக்கணமும் அருளப்பாட்டை எதிர்பார்த்து இருக்க வேண்டும். அழைப்பு வந்ததும் கைங்கர்யத்தை திறமையாகச் செய்தல் வேண்டும். அழைப்பிற்கு முன் வரக்கூடாது. அழைத்ததும் தாமதிக்க கூடாது. கைங்கர்யத்தில் குறை ஏற்படக் கூடாது. இதுவே அருளப்பாடு.

அத்யயன உத்சவத்தின் போது நம்பெருமாள் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருக்க, அரையர் சேவைக்கு, "அருளப்பாடு கோயிலுடைய பெருமாள் அரையர், வரம் தரும் பெருமாள் அரையர் விண்ணப்பம் செய்வர்", என்று பகல் பத்தில் முதல் தினத்திலும், "அருளப்பாடு மதியாத தெய்வங்கள் மணவாளப் பெருமாள் அரையர், நாதவினோத அரையர் விண்ணப்பஞ்செய்வர்" என்று இரண்டாம் நாளிலும் அருளப்பாடு வழங்குவது மரபு.

அருளப்பாடு வழங்கியதும், அரையர்கள் தலையில் குல்லாய் அணிந்து, "நாயிந்தே", "நாயிந்தே" என்று பதில் கூறி, நம் பெருமாளிடம் நியமனம் பெற செல்வார்கள். பெருமாள் சாற்றிக்களைந்த மாலைகளை (இரண்டு மாலைகள்) அரையருக்கு அணிவித்து, சாற்றிக் களைந்த பட்டு வஸ்திரத்தை, குல்லாயைச் சுற்றி தொங்கும் பரிவட்டமாக அணிவித்து, சடாரி சாதித்து, மரியாதைகள் செய்யப்படும். பிறகு அரையர்கள் பின்புறமாகவே நடந்து இருபக்கங்களிலும் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார்களின் மத்தியிலுள்ள இடைவெளியில் நின்று சேவையத் தொடங்குவர். சுற்றிலும் சேவார்த்திகள் கூட்டம் நிரம்பியிருக்கும்.

முதலில் கைத்தாளம் சேவித்து கொண்டாட்டம் சொல்வார்கள். கொண்டாட்டம் என்பது இறைவனின் புகழ் பாடுவதாகும். புகழுரையைக் கூறி "அழகிய மணவாளப் பெருமாள்" என்று முடிப்பது பெருமாள் கொண்டாட்டம் ஆகும். பெரிய பிராட்டியார் முன் சேவிக்கும் போது, புகழுறை கூறி "நாச்சியார்" என்று முடிப்பது நாச்சியார் கொண்டாட்டம் ஆகும்.

திவ்ய பிரபந்த பாசுரங்களை ஓதும் (சேவிக்கும்) போது, ஓதப்போகும் பாசுரங்களை அருளிச் செய்த ஆழ்வாரின் தனியனை முதலில் சேவித்த பிறகே, பாசுரங்களை சேவிக்க வேண்டும் என்பது நியதி. ஆனால் அரையர் சேவையின் போது ஆழ்வார்களின் பிரதியாகவே அரையர்கள் செயல்படுவதால், ஆழ்வாரின் தனியனை சேவிக்காமலேயே, பாசுரங்களை சேவிக்க அரையர்கள் மட்டும் உரிமை பெற்றவர்கள்.

கொண்டாட்டம் சொல்லி முடித்ததும் அன்றைக்குரிய பாசுரங்களை ஒவ்வொரு பாசுரமாக அபிநய பாவத்தை, ஒரு அரையர் காண்பிக்க, பின் புறம், மற்ற அரையர்கள், பாசுரத்தை இசையின் கால் தட்டல் ஓசைக்கு, தக்கவாறு சேவிப்பர். அபிநயத்தில் கைகளால் முத்திரையிட்டு, கால் களால் ஜதி செய்து, அதற்கேற்ப உடல் அசைந்து, முகத்தில் பாவங்கள் காண்பித்து, முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் அசைந்து அபிநயிக்கும் போது, பாசுரத்தின் பொருள் தெளிவாக விளங்கும்.

இதைத் தொடர்ந்து, வியாக்யானம் நடைபெறும். மீண்டும் அரையர் கள் நம்பெருமாள் பக்கலில் சென்று நியமனம் பெறுவார்கள். பிறகு நம்மாழ்வார் பக்கலில் சென்று அவரது நியமனமும் பெற்று நம்மாழ்வார் பாஷீயக்காரர் (இராமாநுஜர்) ஆகியோர் சாற்றிக் களைந்த மாலைகளைப் பெற்றுக் கொண்டு, வியாக்யானம் தொடங்குவர். ஒரு அரையர் வியாக் யானம் சேவிக்க மற்றொரு அரையர் ஓலைச் சுவடி பிரதியை கண்கா ணித்துக் கொண்டு (கடாக்ஷித்துக் கொண்டு) வருவர். நாடக ரீதியில், குரலில் ஏற்றத்தாழ்வுகளுடன் உரைநடையை வியாக்யானம் செய்வர். இவ்வகையில் முத்தமிழும் கலந்து, மறையை இசையாகவும் இயலாகவும் அபிநயமாகவும் (நாடகம்) பொருள் விரிய, பெருமாளுக்கு முன் நடத்திக் காட்டப்படும் தெய்வீக கலையே அரையர் சேவையாகும்.

அன்றைக்குரிய பாசுரங்கள் சேவித்து முடிந்ததும், மீண்டும் கொண்டாட்டம் சொல்வார்கள். இதே போல் தினமும் தொடர்ந்து திரு வத்யயன உற்சவத்தில் இருபது தினங்கள் நடைபெறும்.

“ஆச்சார்ய ஹிருதயம்” என்ற நூலில், அரையர்களை தம்பிரான்மார் கள் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. அதனால் திருவரங்கத்தில் அரையர் கள் பின்பற்றும் வியாக்யானம் “தம்பிரான்படி வியாக்யானம்” என்றே வழங்கப்படுகிறது. ‘படி’ என்பது ஒரு அளவு. ஒற்று ஒழித்து, உயிரும் உயிர், மெய்யும் கூடி, முப்பத்தி இரண்டு எழுத்துக்கள் கொண்டது ஒரு படியாகும்.

திருவரங்கத்தில் அத்யயன உற்சவத்தில் திருமொழித் திருநாளான பகல் பத்தில், பத்து தினங்களிலும் அரையர் சேவையில் இடம் பெறும் பாசுரங்களின் விவரங்களையும், செயல் நேர்த்தியையும் அறிந்து கொள்வோம்.

திருமொழித் திருநாள் பகல்பத்து முதல் தினம், “திருப்பல்லாண்டு” அபி நய வியாக்யானம். “வெண்ணெய் விழுங்கி” முடிய பாசுரங்கள் சேவிக்கப்படும்.

(திருவரங்கத்தில் அரையர் திருப்பல்லாண்டு சேவித்த பிறகே, வில்லிப்புத்தூரில் சேவிக்க வேண்டும் என்பது மரபு).

இரண்டாவது தினம்: “ஆற்றிலிருந்து”, “தன்னோராயிரம்” ஆகிய பாசுரங்கள் சேவித்து அபிநய வியாக்யானம் தொடங்கி பாசுரம் “துக்கச் சுழலை” முடிய.

மூன்றாம் நாள்: "சென்னியோங்கு" தொடங்கி "பருப்பதத்து" முடிய அபிநய வியாக்யானம். "திருப்பாவை" அபிநயம் வியாக்யானம், மற்றும் நாச்சியார் திருமொழி "மற்றிருந்திர் கட்கறிய" முடிவு பாசுரம்.

நான்காவது நாள், "நாச்சியார் திருமொழி", "கண்ணனென்னும்" பாசுரம் அபிநயம் வியாக்யானம், பெருமாள் திருமொழியில் "இருள் இரிய சுடர்மணி": மீண்டும் நாச்சியார் திருமொழியில் "கஞ்சைக்காய்ந்த கரு வல்லி" என்ற பாசுரத்தை சேவித்து, "கம்சவதம்" தம்பிரான் படி வியாக் னத்தைச் சார்ந்து, அபிநயத்துடன் சேவிப்பது மற்றும் திருச்சந்த விருத் தப்பாசுரம்.

ஐந்தாம் நாள், அடிப்பொடிகளின் திருமாலை: "காவலில் புலனை வைத்து", அபிநயம் வியாக்யானம். பிறகு அரங்கனுக்கு ஆட் செய்யும் பிர கரணம் நாடகமாக நடித்துக் காட்டும் நிகழ்ச்சி நடைபெறும் மற்றும் திருப் பாணாழ்வாரின், "அமலனாதிபிரான்" அபிநயம், வியாக்யானம். பாணனின் பாசுரங்களின் முதல் எழுத்து அமைப்பைச் சார்ந்து தத்துவ விளக்கம் அபிநயமாக காட்டுவது ஒரு சிறப்பு. முதல் மூன்று பாசுரங்கள் முறையே அ, உ, ம என்றெழுத்தில் தொடங்குகின்றன. அந்த எழுத்துக்களின் சந்தி "ஓம்" என்ற ஓங்காரம் (பிரணவம்). எட்டெழுத்து மந்திரத்தின் முதல் சொல். அப்பாசுரங்களுக்கு அபிநயம், ஓங்காரத்தை (பிரணவத்தை) விளக்கும் வகையில் ஒரு சிறப்பு நிகழ்ச்சியாக அமையப் பெற்றது. மேலும் அமலனாதிபிரான் 5,6,7 பாசுரங்களின் முதல் எழுத்து முறையே பா, து, கை என்று தொடங்குகிறது. அதை, எம்பெருமானின் திருவடி நிலைக ளான பாதுகாதேவியை உணர்த்துவதாக அபிநயிப்பதும், நான்காவது பாசு ரமான "சதுரமாமதில்" என்பதினில் உள்ள 'ச' என்ற எழுத்து, ஓங்கா ரத்தையும், பாதுகைகளையும், பொருத்த அமைந்தது போல (அன்வயம்) அபிநயித்து விளக்குவது ஒரு சிறப்பு நிகழ்ச்சி.

ஆறாவது நாள், மதுரகவிகளின் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" பாசு ரமும், திருமங்கை ஆழ்வார் பாசுரமான "வாடினேன் வாடி" ஆகிய இரண்டு பாசுரங்களுக்கு அபிநயம் வியாக்யானம். வாள்கொண்டு மந்தி ரம் கொண்ட திருமங்கையாழ்வாரின் பாசுரத்தில் இடம்பெறும் நாரா யணவென்னும் நாமம் என்பதின் தத்துவார்த்தமும், "கண்ணிநுண்" பாசு ரம் விளக்கும் சேஷத்வமான நம: பத, தத்துவப் பொருள் விளக்கங்களும், அபிநயம் வியாக்னங்களாக இடம் பெறுவது திருவரங்கத்தில் நடைபெ றும் அரையர் சேவையில் மட்டும்தான். இறைவன், சீவர்கள் தொடர்பு பிரிக்க முடியாதது என்பதனை விளக்கும் மூலமந்திரத்தின் சிறப்பினை அபிநயமாக காட்டுவது ஒரு அரிய காக்ஷி.

ஏழாம் நாள் பெரிய திருமொழி "தூவிரிய", அபிநயம் வியாக்யானம். அடுத்து "மண்ணளந்ததாடாளா" என்ற வாமன அவதார சிறப்பினை தம்பி ரான்படி நாடகமாக நடைபெறும்.

எட்டாம் நாள் பெரிய திருமொழி. "பண்டை நாள் முறை" தம்பிரான் படி' வியாக்யானம்". அப்பாசுரத்தின் ஈற்றடியான "அரங்கமாநகர மர்ந்தானே" என்பதற்கு திருமாலின் பத்து அவதாரங்களின் அபிநய பாவங்களைக் காட்டி, அனைத்தையும் உள்ளடக்கியது "அரங்கம்" என்று தம்பிரான்படி வியாக்யானமாக உரைப்பர். அடுத்து "மாயிருங்குன்ற மொன்று" பாசுரத்தில் வரும் "ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்தான்" என்ற அடியின் விளக்கம் கடல் கடைந்த வரலாறான "அமிர்தமதனம்" என்ற நிகழ்ச்சி, தம்பிரான்படி நாடகமாக, இடம் பெறும் தினம், ஒன்பதாம் நாளில் பிறகு அதே தினத்தில் "முத்துக்குறி" நடைபெறும்.

முத்துக்குறி என்பது ஒரு சிறப்பு நிகழ்ச்சி. அகத்துறைபொருள் பாசு ரங்கள் மட்டும் முத்துக்குறியில் இடம்பெறும். பிரேமத்தில் பெண் பேச்சு என்பதற்கிணங்க தலைவனின் பிரிவு தாங்காமல் வருந்தும் தலைவியின் நிலை விளக்கப்படும் முத்துக்குறி நிகழ்ச்சியில், மகளுக்கு உடல் நோயல்ல, உள்ளத்துநோய், என்பதறிந்த தாய், அதற்கு தீர்வுகான ஒரு கட்டுவிச்சியை (குறத்தி) அழைத்து, நோயின் தன்மையை கண்டறிந்து அது தீரும் வகையும் காலமும் குறிபார்த்து சொல்வது போல அமையப் பெற்றது. சோழிகளை வைத்து கணக்கிடுவது போல, முத்துக்களை வைத்து கணக்கிட்டு குறி சொல்வதால், முத்துக்குறி என்ற பெயர் பெற்றது. இசையோடு வியாக்யானத்தையும் இணைத்து அபிநயித்து விளக்கப்படும் கலை முத்துக்குறி. அதில் இடம் பெறும் தம்பிரான்படி வியாக்யானங்களுள் "அபிநயவாக்யம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளவை அகப்பொருள் பாசுரங்களுக்கேற்ப அமையப் பெற்றது.

அபிநய வாக்யங்களுக்கேற்ப, ஒரே அரையரே, தலைவியாகவும், தாயாகவும் கட்டுவிச்சியாகவும் நடிப்பர். தலைவி, பிரிவின் துயரம் தாங்காது தவிப்பதும், அதைக் காண சகியாத தாய், குறி பார்க்க ஆவல் கொண்டவளாய், தானே கட்டுவிச்சியாகி மாறி லாகவமாக குறி பார்த்து சொல்வதும், அபிநய பாவனைகளை செய்து காட்டி நிகழ்த்துவது ஒரு அரிய நிகழ்ச்சி. மேலும் நீண்ட நேரம் நடைபெறும் நிகழ்ச்சியாகும் முத்துக்குறி. அன்று குறத்தி குறி பார்ப்பதற்கும் அருளப்பாடு சாதித்து, மரியாதை வழங்கிய பின் நிகழ்ச்சி இடம் பெறும். பகல்பத்தில் ஒன்பதாம் நாள் மட்டுமே நடைபெறும் நிகழ்ச்சியாகும் முத்துக்குறி நிகழ்ச்சிக்கு திருநெடுந்தாண்டகம் "பட்டுடுக்கும்", என்ற பாசுரம்.

பத்தாம் நாள் இராவணவதம் அரையருக்கு அருளப்பாடு வழங்கி யதும், பெரிய திருமொழி "இரக்கமின்றி யெங்கோன்" என்ற பாசுரம் சேவித்து தம்பிரான்படி உரைநடையில் "இராவணவதம்" நாடகமாக நடைபெறும். திருமொழி சாற்றுப் பாசுரங்கள் சாற்றி, சாற்று முறை முடிந் ததும், ஆழ்வார்கள் தொடங்கி அனைத்து சேவார்த்திகளுக்கும், தீர்த்தம் மற்றும் சடாரி சாதிப்பது, அரையரின் உரிமை.

பதினோறாவது நாளான வைகுண்ட ஏகாதசியன்று தொடங்கி நடைபெறுவது திருவாய்மொழித் திருநாளாகும். (இராப்பத்து இரவில் நடப்பது).

அருளப்பாடு மரியாதை முதலிய சம்பிரதாயங்கள் முன் கூறியுள்ளது போல அரையருக்கு நடந்து முடிந்ததும், முதல் தினம் திருவாய் மொழி பாசுரம் "உயர்வற உயர்நலம்" தம்பிரான்படி அபிநயம் வியாக்யானம் நடை பெறும்.

இரண்டாம் நாள் திருவாய் மொழி "கிளரொளி இளமை" அபிநயம் வியாக்யானம்.

மூன்றாம் நாள் திருவாய் மொழி பாசுரம் "ஒழிவில் காலம்", அபி நயம் வியாக்யானம்.

(திருவரங்கத்து பெருமாள் அரையர் ஒழிவில் காலம் என்ற பாசுரத் திற்கு அபிநயமும் வியாக்னமும் செய்த நேர்த்தியை கண்டு, எம்பெரு மானார் அருகில் உட்கார்ந்து தன்னை மறந்து லயித்திருப்பாராம்).

நான்காம் நாள் "ஒன்றும் தேவும்".

ஐந்தாம் நாள் "ஆரா அமுதே"

ஆறாம் நாள் உலகம் உண்ட பெருவாயா" ஆகிய திருவாய் மொழி பாசுரங்களுக்கு முறையே அபிநயம் தம்பிரான்படி வியாக்யானம் நடை பெறும்.

ஏழாவது நாள் "கங்குலும் பகலும்" அபிநய வியாக்யானம். பிறகு "அந்திப் பொழுது அவுணன் உடல்" என்ற பாசுரம். "இரண்யவதமாக, தம்பிரான்படி வியாக்யான உரைகளுக்கேற்ப நாடகமாக நடித்துக் காட்டப் படும். முடிவில், அன்றும் தீர்த்தம் சடாரி சாதிப்பது அரையரே.

எட்டாம் நாள் "நெடுமாற் கடிமை"

ஒன்பதாம் நாள் "மாலை நண்ணி"

பத்தாம் நாள் "தாளதாமரை" ஆகிய திருவாய்மொழிப் பாசுரங்கள் அபிநய வியாக்யானமாக நடைபெறும்.

பத்தாம் நாள் சாற்று முறை ஸ்வாமி நம்மாழ்வாருக்கு மோக்ஷமளித் தல் நிகழ்ச்சி நடைபெறும். ஸ்வாமி நம்மாழ்வாரை ஆதிவாஹிக பிரதா னதான கிரமத்தில், அர்ச்சகர் எழுந்தருளப்பண்ணிக் கொண்டு, சத்திர சாமரங்களுடன், இரண்டு அரையர்கள் "சூழ்விசும்பணிமுகில்" என்ற பாசுரத்தை இசைக்க, நம் பெருமாளின் திருவடிகளில் ஆழ்வாரின் திரு முடி படும்படி சாதித்து, "முனியே நான்முகனே" என்ற பாசுரத்தை அரை யர்கள் இரட்டிப்பாக சேவிப்பர். நம்பெருமாள் நம்மாழ்வாருக்கு தம்மையே ஒக்க அருளிச் செய்யும் கிரமத்தில், மாலை திருத்துழாய், கஸ்தூரிக்

காப்பு, சாற்றுப்படி ஆகியவைகள் சாதித்து, அரையர்கள் "கண்ணிநுண் சிறுதாம்பு" பாசுரத்தை தேவகானமாக இசைக்க நம்பெருமாள் மூலஸ் தானம் எழுந்தருள்வது கண்கொள்ளா காக்ஷியாகும்.

சாற்று முறையன்று "இயற்பா" சாற்றுப் பாசுரங்களையும் அரையர் களே சேவிக்கின்றார்கள். ஆனால் இராமாநுஜரின் சீடரான திருவரங் கத்து அமுதனாருக்கு, பாஷியக்காரரின் ஆச்சார்யார்களுள் ஒருவரான திருவரங்கத்து பெருமாள் அரையர், சுவடி வைத்துக் கொண்டு இயல் சேவிக்கும்படி அமுதனாரைப் பணித்திருந்தாராம். அன்று முதல் அமுத னாரே இயல் சேவிப்பது என்ற மரபு, அண்மை காலம் வரை தொடர்ந்து, (1969 வரை) அமுதனார் பரமபதித்ததும், அவரது குடி வழி தோன்றல்கள் யாரும் இசையாத நிலையில் அந்த உரிமை மீண்டும் அரையர்களிடமே சேர்க்கப்பட்டதாம்.

திருவரங்கத்தில் மட்டும் அத்யயன உற்சவத்தில், அனைத்துப் பாசு ரங்களையும் அரையர்களே சேவிக்கின்றார்கள். ஆனால் ஆழ்வார் திரு நகரியிலும், வில்லிப்புத்தூரிலும், அரையர்கள் தொடங்கி வைக்க, மற்றைய பாசுரங்களை கோஷ்டியினரே சேவித்து, இறுதி பாசுரத்தை அரையர் சேவிப்பது வழக்கு என்று கூறப்படுகிறது.

திரு அத்யயன உற்சவத்திற்கு காரணமாயிருந்த திருமங்கையாழ் வாரின் வேண்டுகோள் அரையர்களால் பின்பற்றப்படுகிறது. திருக்கார் த்திகை தினம் அரங்கனிடம் திருநெடுந்தாண்டகத்தை சேவித்து, மறுதி னம் காலையில், திருமங்கையாழ்வார் சன்னதிக்கு அழைத்துச் சென்று, அரங்கனின் உகப்பை தெரிவிப்பது போல நடைபெற்று மரியாதைகள் செய்யப்படும். திருமங்கை ஆழ்வாருக்கு தைலக்காப்பு இடுவதில்லை.

திருவரங்கத்து அரையர்கள் பின்பற்றும் தம்பிரான்படி முத்தமிழை தன்னுள் கொண்ட உரைவளம் மிக்க ஒரு அமைப்பு. ஆலயத்திற்கு வரும் சேவார்த்திகளை, தன்பால் ஈர்த்து கண்களுக்கும் செவிகளுக்கும் விருந் தளித்து, வைணவத்தின் தத்துவங்களை எளிமையான வகையில், சேவார் த்திகள் அறிந்து கொள்ளத் தூண்டும் ஒரு மகோன்னதமான கலை அரையர் சேவை.

அரையர்கள் பிரதிபலன் ஏதுமில்லாமல் அரங்கனுக்கு செய்யும் சேவையான அரையர் சேவை, பகவத் கைங்கர்யத்திற்கு ஒரு சிறந்த சான்றாகும். பகவத் ப்ரீதிக்கும், பக்திக்கும் வழிகாட்டும் தமிழ் மறையான பிரபந்த பாசுரங்களை சேவிக்கும் அரையர்களை, ஆழ்வார்களாகவே போற்றப்படுகிறார்கள். அரையர் சேவை ஒரு தெய்வீக கலை, சாதாரண கலை அல்ல!

திருக்கார்த்திகை தொடங்கி தைமாதம் வரை, பிரபந்த பாசுரங் களை ஓதக்கூடாத (அனத்யயன காலம்) காலம், (ஆண்டாள் திருப்பாவை

தவிர) ஆனால் இந்த விதி அரையர்களுக்கு ஆழ்வார்களின் பிரதி என்ற நிலையில் பொருந்தாது. அவர்களுக்கு ஆண்டு முழுவதும் சேவாகாலமே (அத்யயன காலம்) இதன் காரணமாகவே திருவரங்கத்தில் மட்டும் பாசுரங்களனைத்தையும் அரையர்களே சேவிக்கின்றார்கள். (கோஷ்டி சேவிப்பதில்லை).

(திருவரங்கத்தில் அரையர்களாக கைங்கர்யம் புரியும் உ.வே நாதமுனி அய்யங்கார், மற்றும் அவர் சகோதரர் உ.வே. சம்பத்குமார அய்யங்கார் ஆகியோர்களுடன் அளவளாவி பெற்ற தகவல்களை சார்ந்து எழுதப்பட்டது.)



## இயல் 24

# அரங்கனின் பொன்னடிகளே ஆழ்வார்

ஸ்ரீ வைணவம், ஆழ்வாரை பிரபன்ன ஜனகூடஸ்தர் என்றும் வழங்குகிறது. சரணாகதி செய்த சீவர்கள், பிரபன்னர்கள், எனப்படுவார்கள். சரணாகதி செய்த பின், அதற்குரிய நெறிகளோடு வாழ்ந்தால் அடையப்படும் நிலை முக்த நிலை, பத்த சீவர்களுக்குரிய சுகதுக்க அனுபவங்கள், ஞானச்சுறுக்கம் வளர்ச்சி ஆகியவைகள் ஒருவருக்கு உள்ளது போல, மற்றவர்களுக்கு இல்லாமல் மாறுபட்டே இருக்கும். ஆனால் முக்தர்களின் ஞான மலர்ச்சி, சுகாநுபவம் ஆகியவை முழுமை பெற்று, வேறுபடாமல், அனைவருக்கும் ஒன்று போலவே இருக்கும். இதனால் முக்தர்கள் கூடஸ்தர்கள் என அறியப்படுகிறார்கள்.

கொல்லர்பட்டரையில், இரும்பைக் காய்ச்சி பல வடிவங்களாக மாற்ற, அடிப்பதற்கு ஏற்ப அமைந்த இரும்பு பீடம், கூடம் எனப்படும். கொல்லர் வழக்கில் கூடத்தைப் பனை என்று கூறுவார்கள். தன் மேல் வைத்து அடிக்கும் இரும்பை பல வடிவங்களாக, அது மாற்றுமேயன்றி, அது மாறாமல் அப்படியே இருப்பதால் கூடம் என்று சொல்லப்படுககிறது. அதனால், மாறுதலிற்குட்படாதவர்களான முக்தர்கள், கூடஸ்தர் ஆகிறார்கள்.

உலகியல் வாழ்வு மீண்டும் பெறாவண்ணம் சரணாகதி வழியை, திருவாய் மொழி முதல் பாசுரத்திலேயே "அவன் துயரறு சுடரடி தொழுதெழு மனமே" என்று நமக்குக் காட்டிக் கொடுத்தவர் மாறன் சடகோபனாகும். சடம் என்ற வாயுவை இவர் பிறந்த போதே, ஒரு விசித்திர ஒலி எழுப்பி துரத்தியதால் இவருக்கு "சடகோபன்" என்பது காரணப் பெயராயிற்று என்றே முன்பே கூறப்பட்டது.

ஆழ்வாரின் பிரபந்த பாசுரங்கள், வேதங்களுக்கு சமம் என்ற ஒப்புதல் பெறுவதற்கு திருவரங்கத்தில் திருமங்கை ஆழ்வார், திருஅத்யயன உற்சவத்தை ஆரம்பித்து வைத்து, மதுரகவிகளைக் கொண்டு, பண்ணார் பாடல்களை, பண்ணுடன் பாடச் செய்த போது, கலியுகத்தில் பெருமாள் தன்னடி சேர்த்துக் கொள்ளும் முதல் சீவர் என்ற வகையில் வைகுண்ட வாசல் திறந்து, மோக்ஷம் வழங்கி, தன் திருவடி சேர்த்துக் கொள்ளப்பட்டவர், நம்மாழ்வாரான சடகோபர். அன்று திருமகள் நாதன் திருவடி கீழ் அமர்ந்தமையால், அரங்கனின் பாதுகமே ஆழ்வார் என்ற நிலையில், நம்மாழ்வார் சடகோபர், சடாரி, சடஜித் சடரிபு என்று பல திருநாமங்களால் வழங்கப்படுகிறார்.

திராவிட வேதமான திருவாய்மொழியை ஒவ்வொரு வைணவரும் அறிந்து இருக்க வேண்டும். அப்பொழுது தான், பகவத் அன்பிற்கு நாம், பாத்திரராக முடியும். அத்தகைய பகவத் ப்ரீதி, நாமெல்லோரும் பெறுதல்

அவசியம் என்பதற்காக ஆழ்வாரான, சடாரி, நாதன் பாதுகையாக, நமது தலைமேல் பட நாமும் பகவத் அன்புக்கு பாத்திரமாகக் கூடும் என்பது தெளிவு.

பெருமாள் சன்னதியில் முதலில் ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பெற்று உட்கொள்ளுவதால் அகால மரணம் இல்லாமை சர்வரோக நிவாரணம், சகல பாப விமோசனம் ஆகியவைகளையும், ஆத்ம சரீர சுத்தியையும் அளித்து அகங்காரத்தையும் நீக்க வல்லது.

அவ்விதம் சுத்தி செய்யப்பட்டவரின் சிரசில்தான் சடாரி காத்த தகுதி உண்டு என்று பெரியோர் கூறுவர். இதன் காரணமாகவே, அனைத்து வைணவ ஆலயங்களிலும், ஒவ்வொருவருக்கும் சடாரி சாதிப்பது வழக்கம். சடாரி மேலுள்ள இருபாதங்கள் பகவானது திருவடிகளைக் குறிப்பிடும். ஆழ்வார் தாமே திருவடி அடிகளில் புகுந்து சடாரியாக உருவெடுத்தார் என்பதனையும், ஆழ்வாரே பகவானுக்கு, நம்மேல் பரிவு உண்டாகும் படி செய்கிறார் என்பதும் ஸ்ரீமத் வேதாந்த தேசிகரின் அருளிச் செயல் கூறுகிறது.

ஆலயங்களில் அர்ச்சகர்கள் சடாரியை சாதிக்கும்போது அதன் மூலம், நமக்கு ஸ்ரீமந்நாராயணனின் திருவடி தொடர்பு ஏற்பட்டு விடுகிறது என்பதை ஆளவந்தார் தனது ஸ்தோத்ர ரத்னத்தில் காட்டியுள்ளார்! அது

*"மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்*
*ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்*
*ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்*
*ஸ்ரீமத் ததங்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா"!*

இதன் பொருள் :

*ஸ்ரீ சடாரி தொடர்பு கொண்டவர்க்கும், அவரது குடி வழியார்களுக்குத் தாயும் தந்தையும் மனைவியும் மக்களும், மற்ற ஐசுவர்யங்களுக்கு காரணமானதும்; கலியுகத்தில் பத்த சீவர்களுக்கு, முதல் ஆச்சார்யாராக விளங்கும் சடகோபரின் அழகான வகுளமாலையின் தொடர்பால் பெற்ற, நறுமணம் கொண்டதுமான; தன்னைப் பெற்றுக் கொண்டவர்களுக்கு, பகவத் பரிவு உண்டாவதற்கு காரணமானதுமான அந்த பகவத் திருவடிகளை, தலையால் வணங்குகின்றேன்.*

பகவத் சன்னதியில் நமது தலையிலும் புஜங்களிலும் சடாரியின் தொடர்பு உண்டான கணத்திலேயே, நமக்கெல்லாம் தந்தையாக விளங்கும் திருமாலின் திருவடிகளில் தலை வைத்தோம் என்று கூறும் துணிவை பெற்றுள்ளோம். சடகோபரின் அருளினாலே! என்று ஆச்சார்ய திலகமான ஸ்ரீமத் நிகமாந்த மகாதேசிகன் தனது தேசிக பிரபந்தத்தில் கூறியுள்ளதை இங்கே நினைவு கூர்வோம்.

*"அந்த மிலாப் பேரின்ப மருந்தவேற்கும் அடியோமை யறிவுடனே யென்றுங்காத்து முந்தைவினை நிரைவழியிலொழுகாதெம்மை முன்னிலையாந் தேசிகர் தம்முன்னே சேர்த்து மந்திரமும் மந்தி ரத்தின் வழியுங்காட்டி வழிப்படுத்தி நின்ற தனித் திருமால் தாளில் தலை வைத்தோம் சடகோபனருளாலே"*

புராணங்கள் பாதுகாதேவியை வெகுவாகப் போற்றிப் புகழுகின்றன. இராமனை அயோத்திக்கு அழைத்து வந்து விட வேண்டும் என்ற உறுதியுடன் சித்ரக் கூடத்திற்கு, பயணமானான் பரதன். எனினும் இராமன் திரும்புவாரோ? அல்லது பெற்றோர்களின் சொல்லை காப்பாற்ற வனவாசத்தை தொடர்வரா? என்ற ஐயம் பரதனுக்கு இருந்ததாம், அதனால் பரதனின் வேண்டுகோள் ஏற்கப்படாமல், விளம்பித்தே பலன் அளித்ததாம். பரதனின் கோரிக்கையை ஏற்காவிடினும்; தனக்கு பிரதியாக தனது பாதுகைகளை அளித்தாராம்!

இதனால் நாம் அறிந்து கொள்வது, சரணாகதி பலிதம் அடைய வேண்டுமானால், சரணாகதனுக்கு மஹா விசுவாசம் அவசியம். பரதனின் ஐயப்பாட்டினால், அது இல்லாது போயிற்று. அதனால் பரதனின் வேண்டுகோள் உடனே ஏற்கப்படவில்லை, விளம்பித்தே ஏற்கப்பட்டது.

இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் என்ற சேஷத்வத்தை உணர்த்தும், பகவத் சேஷமான பாதுகைகள், இராமனுக்கு பிரதியாக அரசு ஏற்றன. பகவத் க்ஷேமான பாதுகைகள் இராமனை விட உயர்ந்தது என்று கூறுகிறார் ஸ்வாமி தேசிகன்.

அருமறைகள் அந்தாதிப் பாசுரங்களாக அருளிச் செய்து, மக்களனைவரும் அவைகளை தெளிய ஓதி, மேல் வீடு பெற வழி கோலியவர் மாறன். அவர் அருளிச் செய்த, "மறையாய நால் வேதத்துள் நின்ற மலர் சுடரான" பகவானை நமக்குக் காட்டிக் கொடுத்தவர் நம்மாழ்வார். எம்பெருமானுக்கும், சேதனர்களுக்கும் உள்ள தொடர்பான விசேஷத்தை, அனைவரும் அறிந்து கண்டு களிப்புடன் சேவிக்க, ஆலய உற்சவமூர்த்தியான வீதியார வருவாரை வீதியில் எழுந்தருளப் பண்ணி வருவது, எம்பெருமானின் பாதுகைகள். சேதனர்கள் உய்ய வேண்டும் என்ற பரம காருண்யகரமான ஒரே கைங்கர்யத்தை, ஆழ்வாரும் செய்கிறார், எம்பெருமான் பாதுகைகளும் செய்கின்றன. "திருமகள் நாதன் திருவடிக் கீழ் அமர்ந்து புகுந்ததாக, தான் பாசுரம் அருளிச் செய்தவாறே. தாமே அரங்கனின் திருவடிக்குள் புகுந்து அமர்ந்தமையால், நாதன் பாதுகமே, ஆழ்வார் என்ற சமத்துவம் விளங்குகிறது.

எம்பெருமானின் கழலடிகளின் பெருமையை சீவர்களாகிய சேதனர்கள், அறிந்து உய்யும் வண்ணமே, கருணை மேலோங்க "அருள் கொண்ட

ஆயிரம் இன் தமிழ் பாடினார் தூய சடகோபர். இன்தமிழ் ஆயிரம் பாடி யவரை சிறப்பிக்கும் வகையில் வடமொழியில் ஆயிரம் பாமாலைகள் சூட்டினர் ஸ்வாமி தேசிகன். "பாதுகா சகஸ்ரம்" என்ற முப்பத்தி இரண்டு இரத்தினங்கள் பொருந்திய வைர மாலையில், ஒரு இரத்தினம் "சமக்யா பத்ததி". அதில் நம்மாழ்வாரும் பகவானின் பாதுகைகளும் (சடாரி) ஒரு வரே என்று நேர்த்தியாக எடுத்துக் காட்டியுள்ளார் கவிதார்கிக சிம்ம மான ஸ்வாமி தேசிகன்.

வைரத்தைப் போல கடினமானதும், ஒளிரப் பிரகாசிப்பது போன்ற ஆயிரம் ஸ்லோகங்கள் கொண்ட "பாதுகா சகஸ்ரம் என்ற வைரமா லையை, ஒரே இரவிற்குள் அருளிச் செய்தார் என்றால், தேசிகரது காவ்ய புலமை, இமயத்தினும் உயர்ந்து நிற்கின்றதே! உலகளந்த அடிகளின் காப்பாளை பாதுகா தேவியாக்கிய பெருமையை நாடறிய, நம்பெருமாள் தேசிகருக்கு "கவிதார்க்கித சிம்மம்" என்ற விருதினையும் தனது பவள வாய் திறந்து அர்ச்சகர் முகமாக அனுக்கிரஹித்தாராம்!

பாதுகா சகஸ்ரத்தினின்று ஒன்றிரண்டு ஸ்லோகங்களையும் இப்பொழுது காண்போம்.

*"சய்யாத்மநா மதுரி போரஸி சேஷபூதா*
*பாதா க்ஷரயேணா சபுந: த்விருணீ க்ருதம்தத்*
*பூயோபி பாகவத சேஷதயா ததேவ*
*வ்யங்கிதும் பதாவநி சடாரிபதம் பிபர்ஷி"*

இதன் விளக்கம்:

"சென்றால் குடையாம், இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மர வடியாம், என்று ஸ்ரீ மந்நாராயணனுக்கு "ஒழிவில் காலமெல்லாம் வழுவிலா அடிமை செய்பவன் அனந்தன். இரண்டு திருவடிகளுக்கும் மரவடியாயி ருந்து அடிமைத்தனத்தை (சேஷத்வத்தை) அதிகம் பெற்றதினால் அனந் தன் ஆதி சேஷனானான். சடகோபனுக்கு திருப்புளியாக இருந்து உத வியவன். பாதுகைகளே சடகோபர் என்ற பெயரைப் பெற்றமையால், பாக வத அடிமைத்தனம் (சேஷத்வம்) பகவத் அடிமைத்தனத்தை (சேஷத் வத்தை) மேன்மையுறச் செய்ததாம்!" என்று அருளிச் செய்கிறார் ஸ்வாமி தேசிகன் சமக்யா பந்ததி 7வது ஸ்லோகத்தில்

திருவாய் மொழியில், ஆழ்வார், பாதுகைகளின் சிறப்பைப் பற்றி பாசுரங்களில் பாடியுள்ளார். அதனால் பாதுகைகளுக்கு அடியார், என் நிலையைப் பெற்றார். ஆனால் அப்பாதுகைகளோ, சடகோபரின் பெயரை ஏற்றுக் கொண்டன. அதனால் சடகோபருக்கு பாதுகை அடியாள் ஆனால் பாதுகை பகவானுக்கு சமம் என்ற நிலையில், சடகோபருக்கு வசப்பட் வர்களானார்கள் என்று சமக்ய பந்ததி 8 வது ஸ்லோகம் கூறுகிறது.

அது

*“பத்யேநதேவி சடகோப முநிஸ்தவாஸீத்*
*தஸ்யாபி நாமவஹநாத் மணிபாதுகே த்வம்*
*சேஷி பபூவ யுவயோரபி சேஷ சாயி*
*சேஷம் த்வசேஷமபி சேஷபதே ஸ்திகம்வ:”*

மற்றொரு ஸ்லோகத்தையும் காண்போம். “பகவான் தன் திருவடிகளுக்கு அளவான பூமியை உட்கொண்டு அந்த உணவு அனுகுணமாகக் காரியத்தை செய்த அவர் ஒப்புதல் இல்லாத இளமை பொருந்திய திருமேனி கொண்டவராம்! என்று ஆழ்வார் திருவாய்மொழியில் அருளிச் செய்துள்ளார் (3.7.10) அத்தகைய எம்பெருமானுக்கு, அடிமையாக இருப்பதிலும் ஏழு நிலைகள் தாழ்ந்து, அடியார், தம்மாடியார், அவருக்கும் அடியார் என்றபடி, அடியோம்யாம் என்று தாழ்ந்து இருப்பது சிறந்தது என்று கூறுகிறார் ஆழ்வார். அவ்வகையில் கூறிய ஆழ்வாரின் பெயரையே பாதுகாதேவி ஏற்றுக் கொண்டதால், பாதுகாதேவி ஆழ்வாருக்கும் அடியாள் என்று அடிமைத்தனத்தில் (சேஷத்வத்தில்) சடகோபரையும் விஞ்சி ஒருபடி உயர்ந்தாளாம் என்று பேசுகிறார் ஸ்வாமி தேசிகன் 6 வது ஸ்லோகத்தில்,

*“ய: ஸப்தபர்வவ் யவதாநதுங்காம்*
*சேஷ்த்வ காஷ்டா மபஜந் முராரே:*
*தன்யாபி நாமோத்வ ஹநாத் த்வயா ஸௌ*
*லகூக்ருதோ பூத் சடகோப ஸூரி:*

ஆழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழியில் மிகுந்த ஈடுபாடு கொண்டு பாஷ்ய பகவத் விஷய பிரவர்த்தகராகவும், எம் பெருமானார் தர்சன ஸ்தாபகராகவும், அனந்தனின் மற்றொரு அவதாரம் என்றும் புகழ் பெற்றவரும், குன்றின் மேல் இட்ட தீபம் போல் ஒளி வீசியவருமான ஆச்சார்ய திலகம் மாமுனிகள், திருவாய் மொழியைச் சிறப்பித்து அருளிச் செய்த சில பாசுரங்களையும் நாம் இப்பொழுது காணலாம்.

அணி அரங்கன் திருமுற்றத்தை அலங்கரித்த ஆச்சார்யர்களுள், வேதாந்த தேசிகனைப் போன்று உயர்ந்து விளங்கியவர் மணவாள மாமுனிகள். எம்பெருமானாரிடம் கொண்ட அத்யந்த பக்தி விசேஷத்தால் “யதீந்தர பிரணவர்” என்ற திருநாமத்தைப் பெற்றவர். வடக்கு திருவீதி பிள்ளை திருவாய் மொழிக்கு விரிவுரை இட்டருளிய ஈடு வியாக்யானமான முப்பத்தாராயிரப் படி பகவத் விஷயத்தை, வெளிக் கொணர்ந்து நாடு முழுவதும் பிரகாசப்படுத்தியவர்.

அணி அரங்கனின் திருமுற்றத்துள், ஈடு விரிவுரையை செவிமடுத்த பெரிய பெருமாள், தாமறிந்த திருவாய்மொழி அர்த்த விசேஷங்களை அனைவரும் கேட்டு பயன் பெறுவதற்கேற்ப பெரிய திருமண்டபத்தில்

தொடங்கி நடத்தும் என்று அருளப்பாடு இட்டு நியமித்தாராம்!

அழகிய மணவாளனின் நியமத்தை சிரமேற்கொண்டு, 360 தினங்கள் (ஒரு ஆண்டு காலம்) உபன்யாசித்தாராம்.

"அவாவறச் சூழ்அரியை" என்ற ஈற்று பாசுர விரிவுரை முடியவும் அரங்கன் பவள வாய் திறந்து அர்ச்சகர் முகமாக, மாமுனிகளுக்கு,

"முப்பத்திராயிரப்படி பெருக்கர்", என்றும், "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்ற தனியனையும் அனுக்கிரஹித்து குளிரக் கடாக்ஷித்தருளினர் என்று பெரியோர் பணிப்பர்.

பெரிய பெருமாளின் கருணையைப் பெற்ற பெரிய ஜீயரான மண வாள மாமுனிகள் அருளிச் செய்த ஆழ்வார்கள் ஆச்சார்யார்கள் பெரு மைகளைக் காட்டும் "உபதேசரத்தினமாலை", திருவாய் மொழியின் முக்கி யத்துவத்தை விளக்கும்

"திருவாய் மொழி நூற்றந்தாதி", மற்றும் "ஆர்த்தி பிரபந்தம்" ஆகிய அருளிச் செயல்களிலிருந்து சில பாசுரங்களை காண்போம்!

ஆழ்வார் பிறந்ததினால், வைகாசி விசாகத்திற்கு உண்டான ஏற்றத் தைப் போல, வேறு ஒரு நாளுக்குண்டோ? என்று போற்றுகிறார். சட கோபர் என்ற பெயருக்கு ஒப்பானவர் என்று எவரையாகிலும் சொல்ல முடியுமோ? திருவாய்மொழி போல ஒரு இலக்கியமோ, குருகூரைபோல ஒரு ஊரைக்கான இயலுமோ என்று பொருள்படும் பாசுரம்:

*"உண்டோ வைகாசி விகாகத்துக் கொப்பொருநாள்*
*உண்டோ சடகோபர்க் கொப்பொருவர் உண்டோ*
*திருவாய்மொழிக் கொப்பு தென்குருகூருக் கொண்டோ*
*ஒருபார் தனிலொக்குமார்"*

(உபதேச ரத்தினமாலை 15)

"நம் பெருமாளின் மலர் போன்ற திருவடிகளுக்கு பாதுகையான செல்வச் சடகோபரின் திருவடிகளை ஆச்ரயித்து புகழ் பெற்ற எந்தை இராமாநுஜர் ஆகிய இருவரையும் நெஞ்சமே நீ தொழு" என்று அருளிச் செய்வது "ஆர்த்திப் பிரபந்தம்" என்ற நூலில். அது :

*"பூமகள் கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய்*
*தாம் மகிழும் செல்வச் சடகோபன் தேமலர்த்தட்டு*
*ஏய்ந்தினிய பாதுகமாம் எந்தைராமாநுஜனை*
*வாய்ந்தெனது நெஞ்சமே வாழி"*

நூறு திருவாய் மொழிக்கும் மொழிக்கு ஒன்றாய் நூறு வெண்பாச் கள், அவைகளின் சிறப்பினைப் போற்றி, அந்தாதியாக, திருவாய்மொழி நூற்றந்தாதி என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்தது.

*"உலகுயமால் நின்ற உயர்வேங்கடநத்தே*
*அலர் மகளை முன்னிட்டு அவன் தன் மலரடியே*
*வன் சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளினையே*
*உன்சரணாய் நெஞ்சமே உன்"*

(திருவாய்மொழி நூற்றந்தாதி 60)

அப்பாசுரம், விங்குநீர் வேங்கடத்தானே, ஆழ்வார் சரணடைந்து மங்களாசாசனம் செய்த பாசுரத்திற்கு (6.10.1)ஏற்ப அதை சிறப்பித்து பாடியது.

ஸ்ரீமந்நாராயணனின் அருள் பெற்று, அவனைப் பற்றியே ஆயிரம் இன்தமிழ் பாக்கள், மறை பொருள் பாடிய தூய சடகோபனருள் இவ்வுலகத்தைக் காட்டிலும் பெரிது.

*"பெரிது பெரிது புவனம் பெரிது*
*புவனமோ நான் முகன் படைப்பு*
*நான் முகனோ திருமாலு ந்தி வந்தோன்*
*திருமாலோ அலைகடல் துயின்றோன்*
*அலைகடலோ குருமுனி அங்கையிற் அடக்கம்*
*குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்*
*கலசமோ புவியிற் சிறுமண்*
*புவியோ அரவிற் கொருதலைபாரம்*
*அரவோ உமையவள் சிறு விரல் மோதிரம்*
*உமையோ சிவபிரான் பாகத் தொடுக்கம்*
*சிவனோ திருமால் திருவடி யொடுக்கம்*
*திருமாலோ தொண்டர் தம் உள்ளத்தில் அடக்கம்*
*தொண்டருள் பெரியோர் தூய சடகோபர்*
*சடகோபரின் அருள் சகத்தினும் பெரிதே".*



## இயல் 25

# இதத் தாய் இராமாநுஜர்

நம்மாழ்வார், திருவாய்மொழியை இவ்வுலகிற்கு, ஈன்ற முதல் தா என்றால், அதை நாடளாவிய வகையில் போற்றி வளர்த்த இதத்தாய் இரா மாநுஜர் ஆகும்.

*"வான் திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல்*
*ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற*
*முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த*
*இதத்தாய் இராமாநுஜன்"*

(பட்டர் அருளியது.

மறையாய வேதங்கள் பிரமாணம் என்றால், அது காட்டித் தரும் பி மேயம் பகவானாகும்.

பகவான் விபவத்தில் கிருஷ்ணனாக அவதரித்த போது, அவனுக் தாய்மார்கள் இருவர். கண்ணனைப் பெற்றெடுத்த தாய் தேவ கண்ணனை வளர்த்த தாய் யசோதை.

இதைத்தான் ஆண்டாளும் "ஒருத்தி மகனாகப் பிறந்து, ஒருத்தி ம னாக ஒளித்து வளர" என்று பாசுரமிட்டருளினார்.

பிரமேயனான கண்ணனுக்கு அமைந்தால் போலவே, பிரமாணமா மறையான திருவாய் மொழிக்கும் இருதாய்கள்.

நாவீறன் நம்மாழ்வார் வழங்கிய தமிழ் மறைடைய, இன்னிசையா வழங்கியவர் நாதமுனிகள். வழிவழியாக அது ஆளவந்தாரை அடைந் பல ஆறுகளாகப் பெறுகி, இராமாநுஜர் என்ற ஏரியில் சங்கமித்தது. ஆ வந்தாருக்குப் பிறகு, வைணவ மடாதிபதியாக பதவியேற்றவர், இரா நுஜர். தனது பூர்வாச்சார்யார்கள் மூலமாகப் பெற்ற திருவாய்மொழி அ ளிச் செயல்களின் அர்த்தங்களைத் தானும் அனுபவித்து, அக்காலத் வர்களுக்கும் அருளிச் செய்தது மட்டுமல்லாமல், பிற்காலத்திலுள்ளே களும் அதனைப் பெற்று பயன் பெற, பல வகைகளில் வளர்த்து, அ ளினாரதலால், இராமாநுஜர் இதத்தாய் என்று அனுசந்திக்கப்படுகிறா

கண்ணனை பத்துடை யடிவர்கெளியன் என்று முதல் தாய் ஆழ்வ பாசுரமிட்டருளினார். அனைவரும் பாங்காக கற்பதற்கு எளிதாக அ யப் பெற்ற மறையான திருவாய் மொழி என்று இதத்தாய் எம்பெரு னார் நாடளாவி வளர்த்தார்.

கீழே குறிப்பிட்ட தனியனில், "மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆ தமிழ் பாசுரங்களனைத்தும் அரங்கனையே போற்றிப் புகழ்வது பே

கூறப்பட்டுள்ளது. அது எங்ஙனே பொருந்தும் என்ற ஐயம் தோன்றக் கூடும்! இத்தொடரில் 22வது இயலில் கூறியிருப்பது போல, பரப்ரும்ஹ சுவரூபமே அரங்கனாக எழுந்தருளியிருப்பதால் மூர்த்தி பேதம் இல்லாது அனைத்து மூர்த்திகளும் அரங்கனே என்றபடி.

ஆளவந்தார், இராமாநுஜருக்கு நேர் ஆச்சார்யாரல்லர். எனினும், ஆளவந்தாரின் சீடர்களே ஆச்சார்யார்களாக திகழ்ந்ததால், கீழ் பாரா வில் கூறியபடி, ஆளவந்தார் பெரும் வெள்ளம், சீடர்கள் வாயக்கால் வழி யோடி, இராமநுஜ ஏரியை நிரப்பியதால், ஆளவந்தாரே இராமாநுஜருக்கு ஆச்சார்யார் ஆகிறார் என்பதும் பொருந்தும். இவ்வகையில் இராமாநுஜர் திருமாலையாண்டான் என்பவரிடம் திருவாய் மொழி பயின்றவர். அதில் ஒரு வினோதம் என்னவென்றால், திருவாய்மொழி பாசுரங்களுக்கு, திரு மாலையாண்டான் கூறும் விளக்க உறைகளை அப்படியே ஏற்றுக் கொள்ள மாட்டாராம். இராமாநுஜர் அதற்கு மாறுதலாக பொருள் உரைப் பாராம். அது திருமாலையாண்டானை நோகச் செய்யுமாம். ஒரு சமயம் "அறியாக் காலத்துள்ளே" என்று தொடங்கும் பாசுரத்திற்கு (2.3.3)வியாக் யானம் நடந்து கொண்டிருந்ததாம்!

பாசுரம்

> *"அறியாக் காலத்துள்ளே அடிமைக் கண் அன்பு செய்வித்து*
> *அறியாமாமாயத்து அடியேனை வைத்தாயால்*
> *அறியாமை குறளாய் நிலம் மாவலிமூவடி யென்று*
> *அறியாமை வஞ்சித்தாய் என தாவியுள் கலந்தே".*

பாசுரத்திற்கு திருமாலையாண்டான் கூறிய விளக்கம் :

> *"அறிவு பெறப்படாத பால்யத்திலேயே, எனக்கு சம்பந்த ஞானத் தைப் பிறப்பித்து, அறியாமையை உண்டாக்குவதும் அழியக்கூடி யதுமான பிராகிருத உடல் தொடர்பை பிணைத்து வைத்தாயே"*

என்று துயரப்படுவது போன்று இருந்ததாம், முதல் ஈரடி.

அவ்விளக்கம் இராமாநுஜருக்கு ஏற்புடையதாக இல்லையாம். இப் பாசுரத்திற்கு முந்தியதும், பிந்தியதுமான பாசுரத்தில், ஆழ்வார் ஆனந்தப் பரவசராக பேசியதால் இடையே அமைந்த பாசுரத்திற்கு அவ்வகையி லேயே பொருள் கொள்ள வேண்டுமேயன்றி, துயருறுவதைப் போன்று பொருள் கொண்டால், ஏற்புடையதல்ல, என்றும் ஆளவந்தாரும் அவ்வகை யிலே தான் பொருள் கூறியிருக்க முடியும் என்று ஆளவந்தார் அபிமா னித்திருக்கக் கூடிய பொருள் விசேஷத்தைக் கூறினாராம். அது "அறிவுப் பெறப்படாத பால்யத்திலேயே, எனக்கு ஞானத்தை ஊட்டி, அறியப்படமாட் டாத மிக ஆச்சர்யமான உனது அனுபவங்களிலே எனது இந்திரிய தொடர்பு கொண்ட அனுபவங்கள் வெட்கமுற, பக்தியை வளர்த்து என்னை அடிமை கொள்ள வைத்தாயே", என்று ஆனந்த பரவச ராகராக பேசியது போல, முதல் ஈரடி.

அந்த நிகழ்ச்சியால் சினந்த ஆண்டான், மேற்கொண்டு பாடம் போதிப்பதை நிறுத்திக் கொண்டு விட்டாராம்!

ஆண்டானிடம் திருவாய்மொழி பயில வேண்டும் என்ற ஏற்பாட்டை செய்தவரான திருக்கோட்டியூர் நம்பி, பாடம் நின்று போனதை அறிந்ததும், திருவரங்கம் சென்று, ஆண்டானை விசாரித்தாராம். அன்று நடந்தவைகளை ஆண்டான் கூறவும், எம்பெருமானார் கூறியதே சரி அக்காலத்தில் ஆளவந்தாரும் எனக்கு அப்படித்தான் வியாக்யானம் செய்தார் என்று நம்பிகள் கூறினாராம்.

அந்த மறுமொழியை சற்றும் எதிர்பார்க்காத ஆண்டான், ஆத்திரம் கொண்டு எம்பெருமானார் ஆளவந்தாரை பார்த்ததேயில்லை அப்படியிருக்க, அவர் கூறியது அவரது விசுவாமித்ர ஸ்ருஷ்டி தானே? அதை எப்படி என்னால் ஏற்றுக் கொள்ள முடியும், அதனால் தான் பாடத்தை நிறுத்தி விட்டேன் என்றுரைத்தாராம்.

அதற்கு நம்பிகள், ஆண்டானே, உம்மிடம் எம்பெருமானார் திருவாய் மொழி கற்பது, வேதமுதல்வன் எம்பெருமான் கண்ணனாக, ஆச்சார்யார் ஸ்ரீ சாந்தி பனியினிடம் வேதம் பயின்றது போலத்தான்! கண்ணபிரானுக்கு தெரியாததையா சாந்தி பனி கற்றுக் கொடுத்தார். அப்படித்தான் இங்கேயும். அன்று நம்மாழ்வாரே, திருவாய்மொழியான தமிழ் மறையை பிற்காலத்தில் பெரிய அளவில் பரப்பப் போகின்ற எதிர்கால ஆச்சார்யார். ஸ்ரீபெரும்புதூர் வள்ளலே என்று மதுரகவிகளுக்கு காட்டிக் கொடுத்ததை நீர் அறிய மாட்டீர். இனி பாடத்தை தொடர்ந்து நடத்தும் என்று கூறிப் போனாராம்.

மறுதினம் முதல் பாடம் தொடர்ந்தது. ஒருநாள் எம்பெருமானாரை நோக்கி, நீரோ ஆள வந்தாரைப் பார்த்ததேயில்லை, அப்படியிருக்க அவர் கூறிய பொருள் விசேஷங்கள் என்று எப்படி கூறுகின்றீர் என்று ஆண்டான் வினவினாராம்.

ஸ்வாமி துரோணாச்சாரியாருக்கு ஏகலைவன் எப்படியோ, அப்படியே ஆளவந்தாருக்கு நான் ஏகலைவன் என்று கூறினாராம். ஆண்டானும் எம் பெருமானாரைப் புரிந்து கொண்டாராம்!

ஆளவந்தாரின் திருவுள்ளப்படி, திருவாய் மொழியை ஆதாரமாகக் கொண்டு பாஷ்யம் அனுக்கிரகித்தார் இராமானுஜர். அடுத்து ஆழ்வாரின் பெயரை தகுதி படைத்த ஒருவருக்கிட்டு, திருவாய்மொழிக்கு ஒரு விளக்க உரை எழுதச் செய்ய வேண்டும் என்ற ஆளவந்தாரின் விருப்பத்தை நிறைவேற்றும் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, குருகாபுரிக்கு பயணப்பட்டார்.

பாண்டி நாட்டு திருப்பதிகளையெல்லாம் மங்களாசாசனம் செய்து கொண்டு, பொருநை ஆற்றங்கரைக்கு வந்தபோது, உரையாடிக் கொண்டு

வந்த இரு பெண்கள் எதிர்படவும், குருகூர் இன்னும் எவ்வளவு தொலை வில் உள்ளது? என்று எம்பெருமானார் அப்பெண்களை கேட்டார்.

பெண்களில் ஒருத்தி கலீரென நகைத்து, ஸ்வாமி தங்களுக்கு திருவாய் மொழி பாடம் அறியுமோ? என்றாளாம். அறிவேன் என்று எம்பெருமானார் கூறவும், அப்பெண் "கூவுதல் வருதல்" என்ற பாசு ரத்தை நீர் அறியமாட்டீரோ என்று மீண்டும் வினவினாளாம். தெரியுமே, நன்றாகத் தெரியுமே, என்று கூறிய இராமாநுஜரின் மனத்திரையில் பாசு ரம் படர்ந்தது, பொருநைக் கரையிலிருந்து கூப்பிடு தூரமே உள்ளது குருகூர் என்பதனை நொடியில் உணர்ந்தார். அந்த இளம்பெண்களின் நுண்ணறிவையும் திருவாய்மொழிப் பாசுரங்களை கற்றறிந்த நேர்த்தி யையும் பாராட்டி, அப்பெண்களிடமும் அன்று ஒரு பொருள் விசேஷத் தைப் பெறக் கொடுத்து வைத்தேன் என்று அப்பெண்களைப் போற்றிப் புகழ்ந்து பாராட்டி நன்றி கூறினாராம்! அப்பெண்கள் திகைத்து, வீடு சென்றதும் நடந்தவற்றை, தங்களது தந்தையிடமும் கூறவும், அவரும் ஆர்வமாக வெளியே சென்று பார்த்தபோது எம்பெருமானரை இனங் கண்டு கொண்டார். உடனே நெடுஞ்சாண் கிடையாக கீழே விழுந்து, ஸ்வாமி, அபசாரம் நேர்ந்து விட்டது, எனது புதல்விகளையும் என்னையும் மன்னித்து அனுக்கிரக்கி வேண்டும் என்று வேண்டினார்.

மேலும், எம்பெருமானாரை தனது இல்லத்திற்கு அழைத்து, இரண்டு, மூன்று நாட்கள் தங்கி, தான் அளிக்கும் பிக்ஷையை ஏற்றுக் கொள்ள பிரார்த்தித்து, எம்பெருமானாரும் சம்மதிக்க, அவரின் கருணைக்கு பாத்திரங்களாகி புண்ணியம் கொண்டார்களாம், அவரும் அவரது குமா ரத்திகளும்.

அவ்வில்லத்தில் தங்கி இருந்த சமயத்தில் ஒரு தினம், ஆடல், பாடல் முதலிய கலைகளில் தேர்ந்தவர்களான அந்த இரு பெண்களும், ஒருதி னம், எம்பெருமானாருக்கு முன்பு, ஒரு திருவாய்மொழி பாசுரத்திற்கு அபி நயம் பிடித்து ஆடிக் கொண்டிருந்தார்கள். பாசுரத்தை தங்கள் உதட்டு அசைவினாலேயே கமனம் செய்து கொண்டு ஆடியதால், அவர்களின் அங்க அசைவுகள், முகபாவங்கள், கையால் காட்டும் முத்திரைகள் ஆகி யவைகளிலிருந்து மட்டுமே, பாசுரம் யாது என்று ஊகிக்க வேண்டும். எம்பெருமானாருக்கு பாசுரம் புரிந்து விட்டது. அது திருமாலிருஞ் சோலை யைப் பற்றிய பாசுரம். அதை அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது யாரை தேடி திருக்குருகூருக்கு வந்தாரோ, அவரே அங்கு வருகை தந்தார்.

ஆளவந்தாரின் சீடர்களுள் பெரிய திருமலை நம்பி என்பவருடைய திருக்குமாரர் "பிள்ளான்". திருவாய்மொழி மீது மிக பற்றுதல் கொண்ட வராய், அது அவதரித்த தலமான திருக்குருகூரையே தனது வாசஸ்தல மாக கொண்டு இருந்தார். அவருக்கு இராமநுஜரை தரிசிக்க வேண்டு

மென்பது நெடுநாளைய அவா. அந்த அவா ஈடேறாத நிலையில் எம் பெருமானாரே, திருக்குருகூருக்கு எழுந்தருளியுள்ளார் என்பதனை அறிந்த பிள்ளான், அவர் தங்கி இருந்த இடத்திற்கு விரைந்தார்.

அச்சமயத்தில் அந்த இல்லத்தில் நடனம் நடந்து கொண்டிருந்தது. மெதுவாக வாயிற் கதவை திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார். அங்குள்ளவர்கள் பிள்ளானை அறிவார்கள்.

நடனம் முடிந்ததும், எம்பெருமானாரை நெடுஞ்சாண் கிடையாக கீழே விழுந்து வணங்கினான் பிறகு ஸ்வாமி, அடியேன் பிள்ளான், இக்கன்னியர்களின் நடனத்திற்கு தாங்கள் அனுசந்தித்த பாசுரம், திருப் பேர் பாசுரமான பிடித்தேன் பிறவி எடுத்தேன். (10.8.1) என்பது தானே ? என்று வினவினார்.

திருமாலிஞ்சோலைக்கு, திருப்பேர் என்பதும் பொருந்தும் என்பதனை உணர்ந்து, தான் மனதிற்குள் அனுசந்தித்த பாசுரத்தை மிக நேர்த்தியாக எடுத்துச் சொன்ன பிள்ளானின் ஆற்றலைக் கண்டு வியந்து, பிள்ளான், உங்களது பெயர் எனக்கு தெரிந்த பெயராக இருக்கிறது. சொட்டை குல ஆச்சார்யார் தொடர்பு கொண்டவரின் புதல்வரோ ? என்று வினவினார்.

பெரிய திருமலை நம்பியின் புதல்வர் என்று அவர் கூறியதும், அவரை தனது சீடராக அபிமானித்து, பிள்ளானே, ஆளவந்தாரின் விருப் பத்தை பூர்த்தி செய்ய தகுதி படைத்தவர் என்பதையும் தீர்மானித்து அவருக்கு "திருக்குருகைபிரான் பிள்ளான்" என்று ஆழ்வாரின் பெயரிட்டு அவரைக் கொண்டு திருவாய் மொழிக்கு மணிப்பிரவாள நடையில் ஒரு விரிவுறை செய்ய வகை செய்து ஆளவந்தாரின் விருப்பத்தை பூர்த்தி செய்தார்.

ஆக, திருக்குருகை பிரான் பிள்ளான் அருளிச் செய்த "ஆறாயிரப் படி" வியாக்யனமே, முதன் முதலாக திருவாய் மொழிக்கு அருளிச் செய்யப்பட்ட வியாக்யானமாகும்.

ஆறாயிரப்படி விளக்க நூலிற்கு பிறகு திருவாய் மொழிக்கு விளக்க உரைகளாக வெளியிடப்பட்டவைகள்.

நஞ்சீயர் அருளிச் செய்த ஒன்பதினாயிரப்படி வியாக்யானம்.

பெரியவாச்சான் பிள்ளையின் சீடரான வாதி கேசரி அழகிய மண வாள ஐயர் அருளிச் செய்தது பந்நீராயிரப்படி என்பது நான்காவதாக வெளியிடப்பட்டது.

நம்பிள்ளையின் சீடர் வியாக்யான சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்தது இருபத்தி நாலாயிரப்படி வியாக்யான மூன்றா வதாக வெளியிடப்பட்டது.

ஐந்தாவதாக வெளியிடப்பட்டது முப்பத்திராயிரத்துப்படி என்ற ஈடு வியாக்யானமாகும். வடக்கு திருவீதிப் பிள்ளையால் அருளிச் செய்யப் பட்டு, காலந்தாழ்ந்து பின்னால் மாமுனிகளால் வெளியிடப்பட்டதாகும்.

அவ்வகையில் வியாக்யான மிட்டருளிய ஆச்சார்யார்களைப் பற்றி யும், விளக்க உரை அருளிச் செய்த பாங்கினையும் ஆச்சார்ய பந்தி என்று இயலில் விளக்கப்பட்டுள்ளது.

திருக்குருகைபிரான் பிள்ளான் அருளிய ஆறாயிரப்படி வியாக்யா னத்தை அடிப்படையாக கொண்டு, எழுபத்தி நாலாயிரப்படி என்ற ஒரு விளக்க உரையை "நிகமபரிமளம்" என்ற பெயரில் ஸ்வாமி வேதாந்த தேசிகர் அருளிச் செய்திருந்தாராம் ஆனால் அது லுப்தமாய் போய் விட்டதாம். நமக்கு கிடைக்க வழி இல்லாது போய் விட்டது.

நம்மாழ்வாரே, மதுரகவிகளுக்கு இராமானுஜரைக் காட்டிக் கொடுத் தார் என்று திருக்கோட்டியூர் நம்பி ஆண்டானிடம் கூறினாரல்லவா அது எப்படியென்று பார்ப்போம்.

திருக்கோளூர் செல்வரான மதுரகவிகள், நாவீறன் மகிழ்மாலை மார்ப னிடம். ஸ்வாமி, அவாவற்று வீடுபெற்ற சடகோபரே, தேவரீரது திருக்கோ லத்தை, அர்ச்சா விக்ரஹ ரூபமாக, அடியார்கள் அடி தொழ, சாதித்தருள வேண்டும் என பிரார்த்தித்தார்.

மதுரகவிகளுக்கு தெய்வமான நம்மாழ்வார், அவரின் விருப்பத் திற்கு உள்ளம் உகந்து, சித்திரையில் உதித்த சித்திரையோனே, தாமிர பரணி நீரை ஒரு கொப்பரையில் இட்டு சுண்டக் காய்ச்ச, அர்ச்சா விக்ர ஹம் ஆவிர்பவிக்கும் என்று மொழிந்தார்.

நம்மாழ்வாரின் நியமனப்படியே பொருநையாற்றின் நீரைக்காய்ச்ச வும் ஒரு விக்ரஹம் ஆவிர்பவித்தது. ஆனால் ஊர்த்வபுண்டரங்களோடும், மார்பில் முப்புரிநூலும், வலது தோளில் சாத்திய முக்கோலும் (திரிதண்டம்) கூப்பிய கரங்களுடன் ஒரு விக்ரகம் ஆவிர்பவித்தது. அதைக் கண்ணுற்ற மதுரகவிகள் வியப்புடன், ஆழ்வார் விபவத்தில், இவ்வகை திருக்கோலங் களுடன் காக்ஷி கொடுத்ததில்லையே என்று திகைத்தாராம்.

ஆழ்வாரின் திருமேனி கிடைக்கப் பெறவில்லையே என்று வருந்தி, ஆழ்வாரை அடிபணிந்து வேண்ட ஆழ்வாரும், மதுரகவிகளே, நாம் திரு வாய் மொழியில் கூறியுள்ளபடி "கலியுங்கெடும் கண்டு கொண்மின்" என்ப திற்கிணங்க இனி அவதரிக்கப் போகின்ற திருக்கோலமே, உமக்குக் கிடைத்த எதிர்காலத்து ஆச்சார்ய (பவிஷ்யதாசர்ய) விக்ரகம். எனது திரு வடிகளை உற்று நோக்குவீராயின், அவைகளுள் அந்த விக்ரகத்தை நீர் காண்பீர். திருவாய்மொழியை ஆதாரமாகக் கொண்டு வைணவத்தை நாட ளாவிய அளவில் பரப்ப, அனந்தனே பெரும்புதூரில் இளையாழ்வானாக அவதரிக்கப் போகின்றார். கொப்பரையில் மீண்டும் கொஞ்சம் நீர்

சேர்த்து காய்ச்சுவீராகில், நமது அர்ச்சை வடிவம் கிடைக்கப் பெறுவீர். இரண்டு விக்ரகங்களையும் ஆராதித்து வருவீர் என்று மொழிந்தார்.

ஆழ்வார் நியமனப்படியே, மறுபடியும் காய்ச்ச, ஆழ்வாரின் அர்ச்சா விக்ரகம் கிடைக்கப்பெற்றார்.

திருவாய்மொழியில், "பொலிக பொலிக பொலிக" பிரபந்தத்தில் ஸ்ரீபாஷ்யகாரரவதாரத்தை சடகோபர் காட்டிக் கொடுத்தார் என்பதும் அதே போன்று திருவிருத்தம் "நானிலம் வாய்கொண்டு" என்ற பாசுரத்தில் ஸ்ரீ தேசிகாவதாரத்தையும் சடகோபர் சம்பிரதாயசித்தமான பொருள் என்று ஆன்றோர் பணித்துள்ளார்.

சிற்பிகளால் உருவாக்கப்படாத அந்த இரண்டு அர்ச்சாவிக்ரகங் களை, திருப்புளியாழ்வார் அடியிலேயே நிலைப்படுத்தி ஆராதித்து வந்தார் மதுரகவிகள்.

காலச்சுழற்சியில், திருவரங்கத்தைப் பாழ்படுத்திய அன்னிய படை கள், தென்திருப்பதிகளையும் விட்டு வைக்கவில்லை. குருகூர் சூரையா டப்பட்டது. ஆழ்வார் விக்ரகம் ஒரு சுனையில் எறியப்பட்டது. பவிஷ்ய தாசார்ய விக்ரகம் திருப்புளியடியில் புதையுண்டது.

மணவாள மாமுனிகளின் ஆச்சார்யாரான திருவாய்மொழிப்பிள்ளை யின் முயற்சியால், மீண்டும் பழைய நிலைமைக்கு சீரமைக்கப்பட்டது. குரு காபுரி காடு மண்டிக் கிடந்த புதர்களை வெட்டி சீரமைத்ததால் திருவாய் மொழி பிள்ளைக்கு "காடு வெட்டி" என்ற காரணப் பெயரும் உண்டா யிற்றாம். அவரது முயற்சியால் பவிஷ்யதாசார்ய விக்ரகம் கண்டு பிடிக் கப்பட்டு, சதுர் வேதி மங்கலம் என்ற ஊரில் நிலைப்படுத்தி, ஆராதித்து வர ஏற்பாடுகளை செய்தாராம்.

சுனையில் போடப்பட்ட ஆழ்வார் விக்ரகம் அவரால் மீட்கப்பட முடி யவில்லை. அப்படியெனில், ஆழ்வார் விக்ரகம் கிடைக்கவே இல்லையா என்ற ஐயத்திற்கு இடமின்றி, அஹோபில மடத்தில் முதல்பட்டத்தில் எழுந் தருளியிருந்த அழகிய சிங்கரால் ஆழ்வார் மீட்கப்பட்டாராம்.



# இயல் 26

# ஸ்ரீமத் அழகிய சிங்கர் வண் சடகோபரானது

பக்தன் பிரஹலாதனுக்கு அருள் பாலிக்க, பொன் பெயரோன், அளந்து நட்ட தூணிலிருந்து தோன்றிய திருமாலின் அவதாரமே ந்ருசிம் ஹாவதாரம் ஆகும். ந்ருசிம்ஹம் என்றால் நரங்கலந்த சிம்மம். அதாவது சிங்க முகத்தோடு, மனித உடல் கொண்ட ஒரு உருவம். தூணிலிருந்து தோன்றிய உடனேயே பொன் பெயரோனான இரண்யனை பிடித்து வதைக்க திருவுள்ளம் கொள்ளவில்லையாம். பிரஹலாதனின் வாக்கு பலித்ததின் உண்மையை உணந்திருந்தால், தனது தீய செயல்களுக்கு வருந்தி சரணடைகிறானா? என்று சில வினாடிகள் பொறுத்துப் பார்த்து, பிறகே இரண்யனைப் பிடித்து வதைத்தாராம். விரோதியையும் நல்வழிப்ப டுத்த ஒரு வாய்ப்பு அளிக்க எண்ணிய காருண்யமே. "அழகிய" என்ற அடைமொழி கொண்டு அழகிய சிங்கர் என்ற திருநாமத்தோடு சேவை சாதித்து அருள் பரலிக்கின்றார். கருணையே வடிவான லக்ஷிமிந்ருசிம்மன், அஹோபிலம் என்ற திவ்யதேசத்தில்.

பொதுவாக சிங்கம் வசிப்பது அடர்ந்த அடவியிலுள்ள குகைகளுள். அதுபோல லக்ஷிமி ந்ருசிம்மனும், காடுகள் மண்டிய மலை பிரதேச குகை கள் (பிலங்கள்) கொண்ட தலமான, அஹோபிலத்தில், அழகிய சிங்கமாக எழுந்தருளி சேவை சாதிப்பதும் பொருத்தம்தானே! அஹோபிலமே, சிங்கவேள் குன்றம் என்று அழைக்கப்படுகிறது வேள் என்ற சொல் அனை வரையும் தன்பால் ஈர்க்கக்கூடிய வசீகரம் பொருந்தியது என பொருள் படும். வசீகரம் என்றால் அழகு என்ற நிலையிலும், அழகிய சிங்கம் என்று பொருள்பட அமைந்ததும் பொருத்தம்தானே!

லக்ஷிமிந்ருசிம்ஹனை ஆராதிக்க உரிமை கொண்ட பரம்பரை ஆச்சார்யார்கள், அழகிய சிங்கர் என்ற சிறப்புப் பெயர் பூண்டு, வைண வத்தைப் பரிபாலித்தும், சேதனர்களுக்கு அருள் பாலித்தும், நல்வழி காட்டும் தியாக பரம்பரையினர். அந்த தியாக பரம்பரையை உருவாக்கிய முதல் ஆச்சார்யாரைப் பற்றி சிறிது அறிந்து கொள்வோம்.

மைசூர் பகுதியிலுள்ள மேல் கோட்டை என்ற திருநாராயணபுரத் தில், பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் கிடாம்பி கேசவாச்சாரியா ருக்கு ஒரு புத்திரன் பிறந்து, சீனிவாசன் எனறழைக்கப்பட்டு வளர்ந்து வந்தார். இளம் வயதிலேயே வேதாந்த கல்வியிலும், திவ்ய பிரபந்தமான தமிழ் மறையிலும், ஆர்வம் கொண்டு, கசடறக் கற்க விருப்பம் கொண்ட தால், சீனிவாசனை காஞ்சிபுரத்திற்கு அனுப்பி, தகுந்த ஆச்சார்யார்களி டம் கல்வி கற்க வழி வகுத்தார் கிடாம்பி கேசவாச்சாரியார்.

சீனிவாசனான கிடாம்பி சீனிவாசாசார்யார் காஞ்சியில், தர்சன பிர வர்த்தகராக விளங்கிய வரதர் என்ற கடிகாசதம் அம்மாளை ஆச்சார் யாராக ஆச்ரயித்தார்.

இவர் நடாதூர் அம்மாளின் திருப்பேரர். காஞ்சி தேவப் பெருமாள் திருநக்ஷத்திரத்தில் பிறந்ததால் வரதர் என்று பெயர் பெற்றார். ஒரு கடிக்கு (மணிக்கு) நூறு ஸ்லோகங்கள் இயற்றும் ஆற்றல் கொண்டமையால் "கடிகாசதம் அம்மாள்" என்ற காரணப் பெயரால் அறியப்படுவர்.

முறையாக வேதாந்த கல்வியும், தர்க்க, வியாகரண மீமாம்சை ஆகி யவைகளிலும் தேறி ஆற்றல் மிகுந்தவராக விளங்கி வந்தார். அப்பொ ழுது, ஒரு தினம், சீனிவாசாச்சாரியாரின் கனவில் அழகிய சிங்கம் தோன்றி, அகோபிலத்திற்கு வரும்படி நியமித்தாராம். மறுதினம் தனது ஆச்சார்யாரிடம் பகவத் நியமனத்தைக் கூறி, அவரது அனுமதி பெற்று, சிங்கவேள் குன்றம் சென்றார்.

அப்பொழுது வேதாந்த தேசிகரது காலம் முடிந்து, இருபத்தி எட்டு ஆண்டுகள் முடிந்த சமயம், சீனிவாசாசார்யார் அஹோபிலம் சென்றடைந் தார்.

அஹோபிலத்தில் பாவநாசினியில் நீராடி,நித்ய அனுட்டானங்களை முடித்துக் கொண்டு அழகிய சிங்கமான லக்ஷிமி ந்ருசிம்மனின் சன்ன திக்குச் சென்று திருவடி தொழுது மங்களாசாசனம் செய்து நிற்கையில், ஒரு யதி தோன்றி, ஸ்வாமிக்கு சன்யாச ஆச்ரமம் வழங்கியதாகக் கூறப் படுகிறது.

பாஷ்யக்காரர் சன்னதியில் தயாராக வைக்கப்பட்டிருந்த துவராடை யையும், முக்கோலான திரிதண்டத்தையும் வழங்கி, "சடகோப ஜீயர்" என்ற தாஸ்ய நாமத்தையும் சூட்டி, மாலோலனை ஆராதித்துக் கொண்டு, சஞ்சாரம் செய்த வண்ணம், இராமானுஜர், நிகமாந்த மகாதேசிகன் ஆகி யோர்களால் சித்தாந்தப் படுத்தப்பட்ட வைணவதர்சனத்தை, பல வகை களில் நன்கு தழைத்தோங்கும்படி நிர்வாஹம் செய்து கொண்டு வர வேண்டும் என லக்ஷிமிந்ருசிம்ஹன் நியமித்தருளினாராம்!

அஹோபிலத்தில் ந்ருசிம்ஹன் ஒன்பது வகையில் தனித்தனி பெயர் களில் சேவை சாதிப்பது விசேஷம். அவைகள் ஜ்வாலா; அஹோபில; மாலோல; க்ரோட; காரஞ்ஜ; பார்கவா; யோகாநந்த; சத்ரவடா; பாவநா என்பவைகளாகும். அந்த நவமூர்த்திகளுள் மாலோலனான லக்ஷீமி ந்ருசிம்மனை சடகோப ஜீயரான முதல் அழகிய சிங்கர் பகவத் நியம னத்தை சிராசாவஹித்து, தினமும் ஆராதித்துக் கொண்டு, வைணவ கோட்பாடுகளை வளர்க்கும் நிலையமான அஹோபில மடத்தை சிங்க வேள் குன்றத்தில் நிறுவினார் (ஸ்ஸாபித்தார்). அந்த ஆண்டு கி.பி. 1398 கலியுகம் 4500.

அன்று சடகோப ஜீயரான அழகிய சிங்கருக்கு வழங்கிய பகவத் சாசனமே, பாரதமளாவிய புகழ் பெற்ற அஹோபில மடம்; இன்றளவும் சிறப்புற்று ஓங்கி உன்னத நிலையில் செயல்பட்டு வருகின்றது.

சில ஆண்டுகள் கழித்து, திவ்ய தேசயாத்திரையாக, மாலோலனை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, தென்பாண்டி நாட்டிற்கு சென்றார். குருகூரான ஆழ்வார் திருநகரியில் எழுந்தருளியிருக்கும் ஆதிபிரானின் திருவடி தொழுது, மங்களாசாசனம் செய்த பிறகு, அழகிய சிங்கர் ஆழ்வார் சன்னதிக்குச் சென்றார். சன்னதியில் உற்சவ திருமேனி இல்லாததைக் கண்டு, அதற்குரிய காரணத்தை அறிய, ஆலய தலத்தார் களை வினவினார். அன்னிய மதஸ்தர்களின் செயலால், ஆழ்வாரின் விக்ரகம் ஒரு சுனையில் எறியப்பட்ட விவரங்களை, அங்குள்ள முதியோர் கள் கூறவும், மனம் வருந்திய அழகிய சிங்கர் அதை மீட்கும் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு செயலில் இறங்கினார்.

மதுரகவிகளின் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" பிரபந்தபாசுரங்களை அனுசந்தித்து, ஆழ்வாரைத் தரிசித்த நாதமுனிகளின் வழியையே பின்பற்றி, சுனையின் கரைப் பகுதியில், அழகிய சிங்கர் யோகாசனமிட்டு, மதுரகவிகளின் பாசுரங்களை அனுசந்திக்கத் தொடங்கினார்!

அழகிய சிங்கரை தரிசிக்க ஊர் மக்கள் திரளாக கூடியிருந்தார்கள். அப்பொழுது ஒரு தினம், சுனையில் ஒரு பகுதியில் நீர் குமிழிகள் கொப்ப ளித்து வருவது போல சில அடையாளங்களை கண்ட அழகிய சிங்கர், அந்த இடத்தில் மூழ்கி தேடிப்பார்க்க ஆணையிடவும், அவ்வகையில் செயல்பட, விக்ரஹம் கிடைத்தது. அழகிய சிங்கர் அகமகிழ்ந்து, ஆர்வத் தோடு விக்ரஹத்தை எட்டிப் பிடித்து, "நம் ஆழ்வாரே" என்று பலமுறை கோஷித்தாராம். இந்நிகழ்ச்சியின் காரணமாகத்தான் சடகோபரை நம்மாழ் வார் என்று அழைக்கும் பந்ததி தொடங்கியதாக பெரியோர் கூறுவர்.

பிறகு, ஆழ்வாரை, ஆதி பிரான் ஆலயத்தினுள் முன்போல ஸ்தாபித்து, மங்களா சாசனம் செய்து, உற்சவாதிகளை நடத்தவும் ஏற்பாடு செய்தார்.

இவ்வகையில் திருப்பணிகள் செய்தும், செய்வித்த உதாரரான அழ கிய சிங்கருக்கு, பொலிந்து நின்ற ஞான பிரானால் "வண் சடகோப ஜீயர்" என்ற விருதை அளித்து அருள்பாலித்தாராம்.

நம்மாழ்வாரும், அழகிய சிங்கரின் மேல் கொண்ட பாரிப்பால், ஆதி பிரான் திருநாமத்திலுள்ள "ஆதி" என்று சொல்லை முதலில் சேர்த்து, "ஆதி வண் சடகோப ஜீயர்" என்று அனுசந்திக்கும்படி நியமித்தாராம். மேலும் தனது ஹம்ஸ முத்திரையைத் தந்து, ஆஸ்தான விஷயமாக ஸ்ரீமுகம், திருவக்ஷரம், சாற்றும் போது "சடகோப ஸ்ரீ" என்று எழுதும் படியும் மேலும் அநேக விருதுகளையும் ஆதிவண் சடகோப ஜீயருக்கு

சொல்லுவதற்கும் நியமித்தாராம்.

ஆழ்வார் தம்முடைய ஆஸ்தானத்தில் முதல் தீர்த்தம் அருளப்பாடு அக்ரஸ்தானம், திறவு கோல் முதலியவைகளையும் ஜீயரிடம் கொடுத்து அருள்பாலித்தாராம்!

"வண்" என்ற பதத்திற்கு "மிக விலக்ஷணமானபெருமைகள்" என்று பொருள்படும் அமைப்பும் பகவத் ப்ரீதி தான்.

(ஆதாரம் ந்ருசிம்ஹப்பிரியா விரோதி கிருது ஆண்டு ஆவணி இதழ்).



## இயல் 27

# ஆச்சார்ய வரிசை (பந்தி) 1 ; 2 வரிசைகள்

*"பொய்கை முனி பூதத்தார் பேயாழ்வார்தன்*
*பொருநல் வரும் குருகேசன் விட்டுச் சித்தன்*
*துய்ய குலசேகரன் நம்பாண நாதன்*
*தொண்டரடிப் பொடி மழிசை வந்த சோதி*
*வையமெல்லாம் மறை விளங்க வாள்வேலேந்தும்*
*மங்கையர் கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்*
*செய்ய தமிழ் மறை நிலங்கள் தெளிகின்றோமே!"*

என்று ஆழ்வார்களின் வரிசையைக் கூறி அவர்கள் அருளிச் செய்த தமிழ் மறையான தீஞ்சுவைப் பாசுரங்கள் வேதத்தில், தெளிவாக அறிய முடியாத பகுதிகளையும் தெளிய வைக்கும் ஆற்றல் கொண்டவை என்று "அதிகாரசங்கிரகத்தில்" முதல் செய்யுளாக, ஆச்சார்ய திலகமான ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ளார்.

ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம் என்றளவுப் பட்ட இடைகழியில் (தேஹளி) நான்காவதாக, மூவரோடு நெருங்கி நின்ற, உலகளந்தானை அனுபவித்து பாசுரங்களிட்ட முதலாழ்வார்களும்;

யானையின் நடையில் ஒலிக்கும் மணியோசையைத் தாளமாகக் கொண்டு, கண்ணனை அனுபவித்து பாசுரங்களிட்ட விஷ்ணு சித்தரான பெரியாழ்வாரும்; சக்கரவர்த்தி திருமகனான பெருமாளைப் பாடிய, முடி துறந்த குலசேகரப் பெருமாளும்; "அரங்கனைக் கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே" என்று யாழ் கொண்டு பாடிய பாணனும்; திருவெஃகா பெருமாளையும் ஆரா அமுதனையும் தான் சொன்ன வண்ணம் செயல்படச் செய்தவரான திருமழிசைப் பிரானும்; வாள்கொண்டு மந்திரங் கொண்ட கலியனான மங்கை மன்னனும்; மாற னையன்றி மாறு தெய்வமறியாத மதுரகவிகளும்;

*மறைத்தமிழ் ஆயிரங்களார்ந்த பண்ணார் பாடல்களை*
*அருளிச் செய்த மாறன் சடகோபன்னான நம்மாழ்வாருக்கு*
*அங்கங்களாகின்றனர் என்று ஆன்றோர் பணிப்பர்.*

(இதன் விவரம் 13 வது இயலில் காணலாம்).

பரப்பிரும்ஹ ரூபியான ஸ்ரீமந்நாராயணன் சதுர் முகனுக்கும், திரும களுக்கும் வேதங்களை உபதேசித்தும், ஞானபிரானாக அவதரித்து, பூமா தேவிக்கு சரம ஸ்லோகத்தை உபதேசித்தமையாலும், இராமனாக அவ தரித்து சரண்யனாகத் திகழ்ந்ததும், கிருஷ்ணனாக அவதரித்து கீதோப தேசம் செய்தும், நர நாராயணர்களாகத் தோன்றி, பதரியில் மூல

மந்திரத்தை உபதேசித்து அருளினதாலும், ஸ்ரீயைபதியான ஸ்ரீமந் நாராயணனே மூல ஆச்சார்யரான முதல் ஆச்சார்யாராவர்!

ஆச்சார்ய பங்தியில் சிறப்பு மிக்க இரண்டாவது இடம் திருமகளான பெரிய பிராட்டிக்குத் தான்! எம்பெருமானிடமிருந்து தான் பெற்ற உப தேசங்களை விஷ்வக்கேசனருக்கு உபதேசித்தவர் பிராட்டியார். பெரிய பிராட்டியாரான "ஸ்ரீ" இல்லாமல் திருமாலை மட்டும் தனித்துப் போற்றுவது மரபில்லை. புருஷகார பூதையான பிராட்டியார் கருணை நோக்குப் பெற்ற வர்களை எம்பெருமான், தானே தேடிப்போய் அருள்பாலிக்கிறார். அத்த கைய பெருமையைக் கொண்டவர் இரண்டாவது ஆச்சார்யாராக திகழும் பெரிய பிராட்டியார்.

ஆச்சார்ய பங்தியில் மூன்றாவதாக இடம் பெற்றவர் விஷ்வக்சேனர் ஆக எம்பெருமான் பெரிய பிராட்டியார், விஷ்வக்சேனர் ஆகிய மூவர். முதல் பங்தி ஆச்சார்யார்களாக திகழ்கின்றார்கள்.

மூன்றாவது ஆச்சார்யாரான விஷ்வக்சேனரைப் பற்றி, சிறிது அறிந்து கொள்வோம்.

நித்ய விபூதியான கலங்காப் பெரு நகரத்தில் ஸ்ரீயைப்பதியான பர வாசுதேவனுக்கு எப்பொழுதும் கைங்கர்யம் செய்பவர்கள் நித்ய சூரிகள். அவர்களுள் அனந்தன், கருடன், ஆகியோர்களைக் காட்டிலும் விஷ்வக் சேனர் மிகச் சிறப்பு வாய்ந்தவர். இவருக்கென்று தனிப் பெருமையும் உண்டு. இவரது மனைவியின் பெயர் சூத்ரவதி.

அனைத்துலகங்களுக்குமதிபதியான ஸ்ரீமந்நாராயணனுக்கு சேனைத் தலைவராக பணியாற்றுபவர் விஷ்வக்சேனரே, ஜகத் காரணத்திற்கு பொறுப்பானவரே, காப்பதற்கும் பொறுப்பான எம்பெருமானுக்கு உறு துணையாகச் செயல்படுபவரான விஷ்வக்சேனர் சிறப்பு மிக்கவராக கரு தப்படுகிறார். மேலும் குருபரம்பரையில், எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் அடுத்தபடியாக இருப்பதும் ஒரு வகை சிறப்பாகும்.

இவருக்கு சேனை நாதன், சேநேச்வரர். சேனை முதலியார், சேஷா சனர், நகரபாலர், உள்துறை கைங்கர்யபரர் என்று பல பெயர்கள் உண்டு. சேனை முதலியார் என்ற பெயரில் உள்ள முதலியார், முதல்வர் என்ற பொருளில் அமையப் பெற்றது.

வைகுண்டத்தில், பகவத் கைங்கர்யங்களை, முக்தர்களும், நித்யர் களும், இசைவாகவும், நேர்த்தியாகவும் செய்ய, வகையும், வசதியும் செய்து கொடுத்து துணை நிற்பவராதலால், உள்துறை கைங்கர்யபரர் என்ற பெயர் பெற்றார்.

முதல் தினம் எம்பெருமான் சாற்றிக் களைந்த வஸ்திரம், மாலைகள் முதலியவைகளை பகவத் சேஷமாக அவர் பெற்றுக் கொள்வதால், சேஷா சனர் என்ற பெயர் ஏற்பட்டது. இவர் சேனைகளை எங்கு வேண்டுமா

னாலும் கொண்டு செல்லும் ஆற்றல் படைத்தவராதலால் விஷ்வக் சேனர் என்ற பெயர் பெற்றார்.

இவருக்கு உதவியாக கஜானனர், ஜயத்தேவர், ஹரிவக்த்ரர், காலப் ருகிருதி என்ற படைத்தலைவர்கள் நால்வர் உண்டு. பல சேனைத் தலை வர்களுள் மிக முக்கியமாகக் கருதப்படுபவர்கள், குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், சர்ப்பநேத்ரன், சுமுகன், சுப்ரதிஷ் டன், ஆகிய எண்மர்கள், சேனை முதலியாருக்கு உதவியாக பணி புரி பவர்கள் என்று சாஸ்திரம் கூறுகிறது.

விஷ்வக் சேனருக்கு நான்கு கைகள், அவைகளில் சங்கு, சக்கரம், கதை, அபய ஹஸ்த முத்திரை, ஏந்தியுள்ளார். சிவந்த நிறம் கொண்டவர். வெண்தாமரையை ஆசனமாகக் கொண்டவர். அவருக்கு மீசை உண்டு என்றும் பெரியோர் பணிப்பர். ஐப்பசி பூராட நன்னாளில் அவதரித்தவர். திருவான மகாலக்ஷிமையைக் கொடியில் கொண்டவர். மஞ்சள் நிற ஆடையில் விருப்பமுள்ளவர். ஆலயங்களில் அவரது சன்னதி, வடகிழக்கு மூலையில் தெற்கு நோக்கியபடி, அமையப் பெற்றிருக்கும்.

ஆலயங்களில் உற்சவம் தொடங்குவதற்கு முன் தினம் "அங்குரார் ப்பணம்"நடைபெறும். அச்சமயம் விஷ்வக்சேனருக்கு விசேஷ ஆராதனம் செய்து, வீதி உலா எழுந்தருள்வது வழக்கு. அரசன் பவனி வருமுன், நகர வீதிகள் செம்மையாக இருக்கின்றனவா என்றறிய சேனைத்தலை வன் பார்வை இடுவது போல, பகவான் வீதி உலா எழுந்தருள்வதற்கேற்ப பாங்காக உள்ளதா என்றறிய பகவத் சேனைத் தலைவரான, சேனையர் கோன் சென்று சோதிப்பதாக தெய்வீக மரபு. இதன் காரணமாகவே எந்த நற்செயல்களையும் செய்வதற்கு முன், அது தடங்கலின்றி செவ்வனே நடைபெற விஷ்வக்சேனரை ஆராதனம் செய்ய வேண்டுமென்பது விதி.

*"சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ।*
*பிரசன்ன வதனம் த்யாயேத் சர்வவிக்னோப சாந்தயே ॥*
*யஸ்யத்விரத வக்த்ராத்யா: பாரிஷத்பரச்சதம் ।*
*விக்னம் நித்னந்தி சததம் விஷ்வக்சேனம் சமாச்ரயே. ॥*

என்று தினந்தோறும் தியானிப்பதே தடங்கல் நேராதியிருக்கத்தான்.

"வைகுண்டத்திலுள்ள பகவத் சேனைத் தலைவரும் சூத்ரவதியின் கணவருமானவரின் கையிலுள்ள தங்கத்திலான பிரம்பின் அசைவால், உலகத்தை நிலைப் பெறச் செய்யும் சக்தி படைத்த விஷ்வக்சேனரை நான் வணங்குகின்றேன்." என்று கூறுவது ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்த யதிராஜ சப்ததியில். அந்த ஸ்லோகம்

*"வந்தே வைகுண்ட சேநாந்யம் தேவம் சூத்ரவதிசகம்*
*யத்வேத்ர சிகரஸ்பந்தே விச்வமேதத் வியவஸ்திதம்"*

ஆக பிராட்டியாரிடமிருந்து உபதேசங்களைப் பெற்ற விஷ்வக்சேனர் முதல் வரிசையில் (பங்தி) மூன்றாவது ஆச்சார்யார்.

ஸ்ரீமந்நாராயணனின் ஆணைப்படி விஷ்வக்சேனர், பூலோகம் சென்று மாறன். சடகோபனுக்கு திருவிலச்சினைகள் பதித்து, உபதேசித்து அருளிய வகையில், ஸ்வாமி நம்மாழ்வார், கலியுகத்தில் முதல் ஆச்சார்யாராக பூலோகத்தில் செயல்பட்டது தொடங்கி இரண்டாவது வரிசை தொடங்குகிறது.

அனைத்து ஆழ்வார்களின் பாசுரங்களையும், அஷ்டாங்க யோக ரகசியத்தையும் நமக்கு மீட்டுக் கொடுத்த நாதமுனிகளே இரண்டாவது ஆச்சார்யாராக போற்றப்படுகிறார்.

திருவெள்ளரை புண்டரீகாக்ஷர் என்ற உய்யக் கொண்டார், ராமமிச்ரர், என்ற மணக்கால் நம்பி, ஆகியோர்களின் முயற்சியால், ஒரு சிற்றரசராக இருந்த ஆளவந்தாரை, தர்சன பிரவர்த்தகராகவும், ஆச்சார்ய பெருந்தகையாகவும் உருவாக்க முடிந்தது.

நாதமுனிகளின் பேரரான யாமுனன், தன் தந்தை ஈசுவர முனிகளின் உடல் நலக்குறைவு காரணமாக, அவரிடம் கல்வி பயில இயலாது போயிற்று. ஆழ்வார்களின் பாசுரங்களை தேடிக் கண்டு பிடிக்க தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டதினால், நாதமுனிகளாலும் யாமுனனுக்கு கல்வி போதிக்க இயலாது போயிற்று. அதன் காரணமாக, யாமுனன், கங்கை கொண்ட சோழ புரத்தில், தன் தூரத்து உறவினரும், சிறந்த கல்விமானுமாகிய பாஷ்யாசாரியாரிடம் வேதாந்தக் கல்வி பயிலத் தொடங்கி, பனிரெண்டு வயதிற்குள் மிகச் சிறந்த வித்தகராக பரிமணித்தார். சிறு பிராயத்திலேயே தனது திறமையை வெளிப்படுத்தும் ஆற்றலைக் கண்டு ஊர்மக்கள் வியந்தனர்.

அச்சமயம்தான், அரசு பதவி அவரை தேடி வந்தது!

அந்நாட்டு மன்னனின் அரசவைப் புலவராகத் திகழ்ந்தவர் "வித்வஜனகோலாகலர்" என்ற ஆக்கி ஆழ்வானாகும். அவர் ஆணவம் கொண்ட ஒரு முரட்டு வேதாந்தியாக இருந்தார். மன்னனிடம் கொண்ட செல்வாக்கை பயன்படுத்தி, இதர வேதாந்திகளை, வாதத்தில் வென்று அவர்களிடம் கப்பம் வசூலித்து பெருவாழ்வு வாழ்ந்து வந்தான். கப்பம் செலுத்துபவர்களுள் யாமுனனின் ஆச்சர்யாரும் அடக்கம். ஒரு தினம் கப்பப் பணம் வசூலிக்க வந்த கோலாகலனின் சீடன், பாஷ்யாசாரியாரை ஏளனப்படுத்தி பேசவும், யாமுனன் வெகுண்டு, நாங்கள் வெறும் கவிகள் மட்டுமல்ல, மதங் கொண்ட புலவர்களை அடக்கும் சிம்மங்கள் என்று பதில் கூறி அனுப்பினான்.

அதனால் ஆத்திரங் கொண்ட ஆக்கி ஆழ்வான், அரசரிடம் புகார் செய்ய, அதற்கு அரசனும் யாமுனனை பிடித்து வர காவலாளிகளை ஏவி

னான். அப்பொழுது அருகிலிருந்த அரசியார் குறுக்கிட்டு, "அச்சிறுவன் ஆற்றல் படைத்தவனாக இருக்கக் கூடும், அவனது ஆற்றலை வெளிக் கொணர நாம் முயற்சிக்க வேண்டும். அவனை மரியாதையுடன் அழைத்து வந்து, ஆக்கி ஆழ்வானுடன் வாதம் புரிய ஏற்பாடு செய்யுங்கள்" என்று நீதியை நிலை நாட்டுவதில் அரசனுக்குரிய கடமையை எடுத்து கூறவும், அரசனும் ஆமோதித்து வாதப்போருக்கு ஆணையிட்டான்.

அடுத்த தினமே, அரசவையில் கூட்டம் நிரம்பி வழிய, வாதம் தொடங் கியது. சிறுவன் என்ற வகையில் யாமுனனே வாதத்தைத் தொடங்கினான்.

யாமுனனின் முகப் பொலிவைக் கண்ட அரசியார் வியந்து, அச்சிறு வனே வாதத்தில் வெல்வான் என்று கூறவும், அப்படி அவன் வென்றால் அவனை ஒரு சிற்றரசனாக ஆக்குகிறேன் என்று வாக்களித்தானாம் அரசன்.

வாதம் தொடங்கியது. கோலாகலனின் சாத்திரப் புலமையை சோதித் துப் பார்ப்பதற்கு முன்னால், சில சாமான்ய தர்மங்களைப் பற்றிய புலமையை சோதிக்க கருதி, "ஐயா, நான் எதை உண்டு என்கிறோனோ, அதை நீங்கள் இல்லை என்று மறுக்க வேண்டும். நான் எதை இல்லை என்று சொல்கி றோனோ அதை நீர் உண்டு என்று ஸ்தாபிக்க வேண்டும் எனக் கூறி,

முதல் கேழ்வியாக.

1. உமது தாயார் மலடியன்று" என்று கூறி, அதை ஆதாரத்தோடு மறுக்கும்படி கூறினார்.

அக்கூற்றை மறுத்து, ஒரு பிள்ளையை (தன்னை) பெற்றெடுத்த தாயை மலடி என்று எப்படி கூற முடியும். அப்படியே கூறினாலும் தனது பிறப்பைப் பற்றி ஐயம் தோன்ற வாய்ப்பாகுமே, என்று பதில் கூற முடியாமல் திணறினான்.

அடுத்து இரண்டாவதாக,

2. "அந்நாட்டு மன்னன் ஒரு தர்மவான்" என்று கூறி அதை மறுக் கும்படி சொன்னான். அதை மறுத்து, அரசன் தர்மம் தவறுபவன் என்று எப்படி கூற இயலும் என்று தவித்து தலை குனிந்தான்.

இறுதியாக, அனைவரும் திகைக்க,

3. "அந்நாட்டு அரசியார், சாவித்திரியைப் போல ஒரு கற்புக்கரசி" என்று கூறி மறுக்கச் சொன்னான். பேரிடி போல் தன்னை தாக்கிய அக்க ருத்தை மறுத்துப் பேச வழி அறியாது, திக்பிரமை கொண்டவன் போல, முகம் சுண்டி தோல்வியை ஒப்புக் கொண்டான்.

மூன்றாவதாக கூறியது தன்னைப் பற்றிய விஷயம் என்ற நிலையில், அரசியார் யாமுனனை நோக்கி, உம்மால், அவைகளை மறுத்துக் கூற இயலுமா, என்ற ஆர்வத்துடன் கேட்டாள்.

அதற்கு "மனுசம்ஹிதா" என்ற நூலிலிருந்து ஆதாரங்களை மேற்கோள் காட்டி யாமுனன் மறுத்தார். யாமுனனின் சாதுர்யத்தைப் போற்றிப் புகழ்ந்து. அவையோர்கள் அனைவரும் பாராட்டினர். கோலாக லனும் தனது தவறை உணர்ந்து மன்னிப்புக் கோரி இனி திருந்தி வாழ்வதாக உறுதி பூண்டான். ஆர்வ மிகுதியால், அரசியார் அரியணை யிலிருந்து, இறங்கி வந்து யாமுனனைக் கட்டிப் பிடித்து, "எம்மை ஆள வந்தவரே" என்று அழைத்து, ஒரு சிற்றரசு பதவியையும் வெகுமானமாக அளிக்க அரசரிடம் கோரினாள்.

அரசனும் அவ்வாறே அளித்து பெருமை கொண்டான்.

தான் கூறியவைகளை எப்படி யாமுனன் மறுத்தான் என்பதனை அறிந்து கொண்டு மேலே தொடர்வோம்.

(1)"ஏக புத்ரோ ஹ்ய புத்ர லோகவாதாத்" என்று மனு சம்ஹிதையில் கூறப்படுகிறது. அதாவது ஒரே பிள்ளையை பெற்றவளும் மலடி என்று கூறு வது லோகவழக்கு: "கதலிவந்த்யா" என்பது போல. ஒரே ஒரு குலை மட்டும் வாழை தள்ளுவதால் அதை வந்த்யா (மலடி) என்று கூறுவது மரபு.

*(2) "ஸர்வதோ தர்மஷட்பாகோ*
*ராஜ்ஞோ பவதி ரக்ஷத:"*
*"அதர்மாதபி ஷட்பாகோ பவத்யஸ்ய*
*ஹ்யரக்ஷத:"*

கலியுகத்தில் தர்மம் ஒற்றைக் காலில் நிற்கிறது மக்களிடமிருந்து ஆறில் ஒரு பங்கை வரியாக வசூலித்து, மக்களைக் காக்கும் பொறுப்பை ஏற்கும் அரசன், தர்மம் தவறிய மக்களின் பாபங்களிலும் ஆறில் ஒரு பங்கை பெறுகிறான். அதனால் அரசனை தர்மவான் என்று கூற இயலாது.

மூன்றாவதாக, அரசியார் சாவித்திரியை போன்று ஒரு பதிவ்ரதை என்ற கூற்றை மறுத்துப் பேசுவது.

"அரசன் நீதி வழுவாது செங்கோல் செலுத்தும் போது, சூழ்நிலைக் கேற்ப, அக்நி, வாயு, சூர்யன், சந்திரன், குபேரன், வருணன், யமன், இந்தி ரன் ஆகியோர்களின் அம்சங்களாகவே செயல்படுவதால் அரசன் என்ற உருவை மணந்த அரசி, சூழ்நிலைக்கேற்ப அரசனிடம் ஆவிர்பவிக்கும் தேவர்களுக்கும் மனைவி என்ற பாவனை உண்டு."

அதை வெளிப்படுத்தும் ஆதாரம்.

*"ஸோக்னிர் பவதி வாய்ஸ்ச்ச ஸௌர்க: ச*
*தர்மராட்ச குபேர: ச வருண: ச*
*மஹேந்தர: பிராபாவத:*

அவ்வகையில் அரசு பதவி பெற்ற யாமுனன் ஒரு சிற்றரசனாக அர சாண்டு, பிறகு உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி ஆகியோர்களின்

முயற்சியால், அரசைத் துறந்து, யதி அரசாக ஆன்மீக வாழ்விற்கு திரும்பி, நாடு போற்றும் மிகச் சிறந்த வைணவ ஆச்சார்யாராக திகழ்ந்தார்.

திருவரங்கத்தில் இருந்து கொண்டு, வைணவத்தை மிக உயர்ந்த நிலைக்கு வளர்த்து, தர்சன பிரவர்த்தகராக பல ஆண்டுகள் செயல்பட்ட யோகி, யாமுனாச்சாயாரான ஆளவந்தாரே ஆகும்.

ஆளவந்தாரின் சீடர்களுள் ஐவர், பிரபல ஆச்சார்யார்களாக கருதப் படுபவர்கள். அவர்கள்.

*பெரிய நம்பி (மஹாபூர்ணர்)*
*திருக்கோட்டியூர் நம்பி,*
*பெரிய திருமலை நம்பி,*
*திருமாலை ஆண்டான்,*
*திருவரங்கத்து பெருமாள் அரையர்.*

கடைசியாக கூறப்பட்ட அரையர், ஆளவந்தாரின் திருக்குமாரராகும்.

திருக்கச்சி நம்பி, ஆளவந்தாரின் சீடர் என்று அபிமானிக்கப்படினும், அவர் கல்வி பயின்றது பெரிய நம்பியிடம். அவர் காஞ்சி தேவப் பெரு மாளுக்கு ஆலவட்டம் வீசும் கைங்கர்யத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டமையால் ராமாநுஜரை வைணவ உலகிற்கு அறிமுகப்படுத்தும் பணியை மேற்கொண்டவர்.

ஆளவந்தாருக்கு அடுத்தபடியாக, தர்சன பிரவர்த்தகராக பொறுப் பேற்ற ராமாநுஜர் கீழே கூறிய ஐவர்களிடமும் ஒவ்வொரு துறையில் பயின்ற வகையில், பரமாச்சார்யாரான ஆளவந்தாரே, ராமாநுஜருக்கும் நேரடி ஆச்சார்யாராகவே கருதப்படுகிறார்.

நீண்ட நெடுங்காலம் எழுபது ஆண்டுகளுக்கு மேல் திருவரங்கத் தில் சிறப்புடன் ஆச்சார்யாராக விளங்கி, வைணவத்தை வளர்த்த வள்ளல் ராமாநுஜரே ஆகும்.



# இயல் 28

# ஆச்சார்ய வரிசை (பங்தி) 3 வது

ஸ்ரீராமானுஜரின் 120 ஆண்டு கால வாழ்க்கையில் நடந்த சம்பவங் களை கூறுவது, இவ்வரலாற்றின் நோக்கமல்ல இருப்பினும் அவரைப் பற்றி கண்ணோட்டமாக சிலவற்றை அறிந்து கொண்டு மேலே தொடர்வோம்!

ஸ்ரீபெரும்புதூரில் பிறந்து, காஞ்சியில், அத்வைத சிந்தாந்தி யாதவப் பிரகாசரிடம் வேதாந்த கல்வி. சில ஆண்டுகள் பயின்று, பிறகு திருக் கச்சி நம்பியின் வேண்டுகோளுக்கிணங்க, தேவப் பெருமாளுக்கும், பெருந்தேவி தாயாருக்கும், சாலைக் கிணற்றிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வரும் கைங்கர்ய பரராக தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். தேவப் பெருமாளின் ஆணையாக ஆறு வார்த்தைகளை திருக்கச்சி நம்பி மூலம் அறிந்து, பெரிய நம்பிகளை ஆச்சார்யாராக ஆச்ர யித்து, தேவப் பெருமாள் சன்னதியிலேயே சன்யாச ஆச்ரமம் மேற்கொண்ட ஸ்ரீராமானுஜர் யதிராஜாராக திகழ்ந்த ஸ்ரீபெரும்புதூர் வள்ளல் ஆகும்.

திருவரங்கத்தில் ஸ்ரீராமானுஜரால் தோற்றுவிக்கப்பட்ட சம்பிரதாய கிரந்த உபதேச வகுப்புகள், வித்யார்த்திகளின் வசதிக்காக, பிரபந்த பள்ளி என்றும் பாக்ஷியப் பள்ளி என்றும் அமையப் பெற்று பல ஆண்டுகள் நடை பெற்று, ஸ்ரீராமானுஜரின் காலத்திற்கு பின்பும் சில ஆண்டுகள் தொடர்ந்து நடந்தது.

திருக்குருகை பிரான் பிள்ளான், உபய வேதாந்த காலக்ஷேப கிரந்த பிரவர்த்தகராக சிம்மாசனாதிபதாக்யம் பெற்று, பாக்ஷியப் பள்ளியையும், அதே நியமனம் பெற்று, எம்பார் பிரபந்த பள்ளியையும் நடத்தி வந்தார்கள்.

பிள்ளான் காலத்திற்கு பிறகு கிடாம்பி ஆச்சானும், தொடர்ந்து எங்களாழ்வானும், அவருக்குப் பிறகு ஸ்ரீவரததேசிகரும் பாக்ஷியப் பள்ளி பிரவர்த்தகர்களாக செயல்பட்டு வந்தார்கள்.

வரததேசிகர், நடாதூர் தேசிகாசார்யாருக்கு சுமார் 800 ஆண்டு களுக்கு முன் காஞ்சியில் பிறந்தவர். தன் தகப்பனாரிடமே சில காலம் வேதாந்த கல்வி பயின்று ஸ்ரீபாஷிய காலக்ஷேபம் பண்ண திருவரங்கத் திற்கு சென்றார். போதிப்பவர் என்று பெயர் எடுத்த திருவெள்ளறை சோழியர் எங்களாழ்வானிடம் ஸ்ரீபாஷியம் பயின்றார்.

வரததேசிகர் தேவப் பெருமாளிடம் அத்யந்த பக்தி கொண்டவர். ஒரு தினம், தேவப் பெருமாளுக்கு மிக சூடாக பாலமுது சமர்ப்பித்த போது, அதை ஆற்றி இதமாக சமர்ப்பித்தாராம் வரத தேசிகர். அருளாளப் பெரு

மானும், வரததேசிகர், "அம்மாள்" என்று திருவுள்ளம் பற்றினாராம்! அன்று முதல் வரததேசிகர் நடாதூர் அம்மாளாக அபிமானிக்கப்பட்டாராம்!

தேவப் பெருமாள், ஆலயத்தில் கச்சிவாயத்தான் மண்டபத்தில் எழுந்தருளியிருந்த போது தான், எம் பெருமானாருக்கு ஆறு வார்த்தைகள் உபதேசித்தது, பிறகு சன்யாசமும் வழங்கப்பட்டது. அதனால் அந்த மண்டபத்திலேயே ஸ்ரீபாஷ்ய, பகவத் விஷய கிரந்த காலக்ஷேபாதிகளை நடத்துவது எம்பெருமானாரின் உள்ளம் உகக்கும் என்று கருதிய நடாதூர் அம்மாள், ஸ்ரீபாஷ்யப் பள்ளியை காஞ்சிபுரத்திற்கு மாற்றினார்.

எம்பெருமானாரால் தொடங்கப்பட்ட பிரபந்தப் பள்ளி திருவரங்கத்திலேயே உபய வேதாந்த காலக்ஷேய கேந்திரமாகவும், ஸ்ரீபாஷ்யப்பள்ளி காஞ்சிக்கு மாற்றப்பட்டு அங்கு உபயவேதாந்த காலக்ஷேப கேந்திரமாகவும் செயல்படத் தொடங்கியது.

அச்சமயம் திருவரங்கத்தில் எம்பாருக்கு பிறகு ஸ்ரீபட்டரும், அவருக்குப் பிறகு நஞ்சீயரும் தர்சன பிரவர்த்தகராக இருந்தவர்கள்.

வேதவியாசரின் தகப்பனார் ஸ்ரீபராசரபட்டரின் பெயரை தகுதி படைத்த ஒருவருக்கு இட்டு, அவரை தர்சன ஸ்தாபகராக்க வேண்டும் என்ற ஆளவந்தாரின் உள்ளக் கிடக்கையை நிறைவேற்ற, எம்பெருமானார், தனது அத்யந்த சீடர் கூரத்தாழ்வானின் குமாரருக்கு அந்த பெயரிட்டு பெருமை கொண்டார்.

**அந்த** குழந்தைக்கு பெயர் சூட்டும் போது, எம்பார், குழந்தைக்கு த்வயம் உபதேசித்ததால், அவரே ஸ்ரீபட்டருக்கு ஆச்சார்யாரானார்.

ஸ்ரீபட்டர், நம்பெருமாளின் அஸ்வீகாரபுத்திரராக அபிமானிக்கப்பட்டவர்.

ஸ்ரீவைணவ கொள்கைகளை மறுத்துப் பேசும் வேதாந்தி ஒருவர் வெகு பிரபலமாகப் புகழ் பெற்றிருந்தார். அவரை வென்று ஸ்ரீவைணவத்தைத் தழுவச் செய்ய வேண்டும். என திருவுளம் கொண்டார். தர்சன பிரவர்த்தகரும், கூரத்தாழ்வானின் குமாரருமாகிய ஸ்ரீபட்டர் என்ற பராசர பட்டர்

வேதாந்தி ஒரு பெரிய தனவான். தினமும் சத்திரத்தில் அன்னதானம் செய்வது அவரது கைங்கர்யம். ஸ்ரீபட்டர் பிக்ஷைக்கு செல்வது போல சென்றார். உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருந்த வேதாந்தி, பிஷைக்கு வந்திருந்த பட்டரை கண்ணுற்றதும், பிக்ஷை சத்திரத்தில் வழங்கப் படுகிறது. இங்கில்லை என்றார். நாம் அந்த பிக்ஷைக்கு வரவில்லை தர்க்க வாதப் பிக்ஷைக்கு வந்தோம் என்று கூறவும், ஏற்கனவே ஸ்ரீபட்டரைப் பற்றி பிரசித்தமான சாஸ்திரங்கள் அனைத்தையும் கற்றவர் என்று வேதாந்தி கேழ்விப்பட்டிருந்தால், அப்பொழுது தர்க்க பிக்ஷைக்கு வந்தவர் பட்டராகத் தான் இருக்குமென்று யூகித்து, "தாங்கள் ஸ்ரீபட்டரோ" என்று வினவினார். பட்டர், "ஆம்" என்று பதிலளித்ததும், விவாதத்திற்கு தயாரானார்கள்.

ஒன்பது நாட்கள் ஒருவரை ஒருவர் ஜயிக்க முடியாதபடி விவாதம் நடந்தது. ஒன்பதாம் நாள் இரவு பட்டரின் கனவில் பெரிய பெருமாள் தோன்றி, கலியனின் திருநெடுந்தாண்டகம் தாங்கள் நினைவுக்கு வரவில்லையோ ? என்று கேட்ட மாதிரி சொப்பனம் கண்டாராம்.

பத்தாம் நாள் விவாதம் தொடங்கியதும், பட்டர் திருநெடுந்தாண்டகத்தைப் பற்றி பேசவும், அப்பொழுது பட்டரின் முகப் பொலிவைக் கண்ட வேதாந்தி, அடியேன் தோற்றேன் என்று கூறி பட்டரின் பாதம் பணிந்தார்.

பிறகு வேதாந்தியின் சாஸ்திரப் புலமையையும், வாதத் திறமையையும் பாராட்டி வசிஷ்டாத்வைத தர்சன பிரரர்த்தகராக தாங்கள் செயல்பட வேண்டும் என்று எடுத்துரைத்து திருவரங்கம் திரும்பினார்.

சிலகாலம் கழித்து, வேதாந்தி ஒரு முடிவுக்கு வந்தவராய், தனது சொத்தை தனது இரு தேவிமார்களுக்கு அளித்து விட்டு சன்யாச ஆச்ரமத்தை மேற்கொண்டு யாத்திரை புறப்பட்டு, பயண கதியில் திருவரங்கத்திற்கு சென்று பட்டர் மாளிகையில், பட்டரைச் சந்தித்தார். ஒருமுக்கோல் துறவியை எதிரே கண்ணுற்றதும், பட்டர் சற்றே திகைத்து வேதாந்தி என்றுணர்ந்து, வாருங்கள் "நம் ஜீயரே" என்று வரவேற்று ஆசனத்தில் எழுந்தருளப் பண்ணி உபசரித்தார்.

அந்த வேதாந்தியான நம் ஜீயரே "நஞ்சீயர்" என்ற பெயரில் பிரபல வைணவ ஆச்சர்யாராக திருவரங்கத்தில் ஸ்ரீ பட்டருக்கு பிறகு தர்சன பிரவர்த்தகராக எழுந்தருளியிருந்தார்.

நஞ்சீயர், திருவாய்மொழிக்கு அருளிச் செய்த விளக்க உரை (வியாக்யானம்) ஒன்பதினாயிரப்படியாகும்.

நஞ்சீயரின் சீடர் நம்பூர் வரதராஜன். தமிழில் அதி அற்புத புலமை பெற்றவர். அபார நினைவாற்றல் கொண்டவர். முத்துக் கோத்தது போல தெளிவாகவும் அழகாகவும் எழுத்தாற்றல் பெற்றவர்.

காவேரிக்கு தென் கரையிலுள்ள தனது ஊரான நம்பூரிலிருந்து, வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிய காலத்திலும், நீந்திக் கடந்து திருவரங்கம் அடைந்து, நஞ்சீயரிடம் உபய வேதாந்த காலக்ஷேப கிரந்தங்களை கற்றவர். அவரது எழுத்தாற்றலைக் கண்டு வியந்த, நஞ்சீயர், ஒன்பதினாயிரப்படி வியாக்யானத்தை மிக தெளிவாக எழுதிக் கொடுக்கும்படி பணிந்தி ருந்தார். விளக்க உரை ஓலைகளை, தலையில் சும்மாட்டோடு கட்டி, ஆற்றை நீந்திக் கடந்த போது அதை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போய்விட்டது. மிகச்சிறந்த நினைவாற்றல் கொண்டவராதலால், அவ்வப்பொழுது நினைவு கூர்ந்து, ஒன்பதினாயிரப்படி உரையை மேலும் சிறப்பாக எழுதிக் கொடுத்தாராம்! விளக்க உரையைப் படித்த நஞ்சீயர், மிகவும் மகிழ்ந்து,

அவரை புத்திரராக அபிமானித்து, "நம் பிள்ளையே" என்றழைத்து பெருமைப்படுத்தினாராம்.

நஞ்சீயருக்கு அடுத்து "நம்பிள்ளை" தர்சனப் பிரவர்த்தகராகத் தலைமை பொறுப்பேற்றார்.

நம்பிள்ளை பகவத் விஷயம் காலக்ஷேபம் சாதிப்பதில் இணையற்ற வித்தகர். அவரது காலக்ஷேம் முடிந்து வெளிவரும் வித்யார்த்திகளின் கூட்டம் அலைமோதுமாம். அதைக் காண்பவர்கள் "நம் பெருமாள் திருவோலக்கம் கலைந்ததோ" அல்லது "நம்பிள்ளை காலக்ஷேப கோஷ்டி கலைந்ததோ" என்று கேழ்ப்பார்களாம்.

நம்பிள்ளை காலத்தில் அவரது சன்னதியில் சம்பிரதாய கிரந்தங்களை உபதேசித்து வந்த தர்சன வித்வத் சிரேஷ்டர்களுள் பெரிய வாச்சான் பிள்ளை, வியாக்யான சக்கர வர்த்தியாகத் திகழந்தவர். அவரது சம காலத்தவர்கள் வடக்கு திருவீதிப் பிள்ளையும் பின்பழகிய பெருமாள் ஜீயரும்.

பெரியவாச்சான் பிள்ளை, தஞ்சை மாவட்டத்திலுள்ள சங்க நல்லூரில், பூர்வ சிகை வைணவரான யாமுனாச்சார்யாருக்கும் நாச்சியார் அம்மாளுக்கும் திருக்குமரராகப் பிறந்தவர். சுமார் 830 ஆண்டுகளுக்கு முன் ஒரு சர்வஜித் வருஷம், ஆவணி மாதம், ரோகிணி நக்ஷத்திரத்தில பிறந்ததால், கிருஷ்ணன் என்று பெயரிடப்பட்டவர். ஆரம்பக் கல்வி தன் தகப்பனாரிடமே அப்யசித்து, பிறகு நம்பிள்ளை திருவடிகளை ஆச்ரயித்து, அவரது நியமனம் பெற்று கிரந்த, காலக்ஷேபாதிகளை திருவரங்கத்தில் அருளிச் செய்து கொண்டிருந்தார். பெரிய பெருமாள் பிரபாவத்தை பேசினாலும் பேசி முடிக்க முடியும், பெரிய வாச்சான் பிள்ளையின் பிரபாவத்தைப் பேசி முடியாதென்பர் பெரியோர்கள். அந்த அளவுக்கு சத்வ குணமே உருவெடுத்து "பரமகாருணிகர்" என்றே அழைக்கப்பட்டவர்.

அவரது தன்னிகரற்ற பொருள் விசேஷங்களை அறிந்திருந்த நம்பிள்ளை அவரை திருவாய்மொழிக்கு ஒரு விளக்க உரை எழுதும்படி பணித்தார்.

பெரியவாச்சான் பிள்ளை வால்மீகி இராமயணத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தமையால், அது இருபத்திநாலாயிரம் ஸ்லோகங்களால் அமையப் பெற்றது போல, திருவாய்மொழிக்கு விளக்க உரையையும் இருபத்தி நாலாயிரப்படி வியாக்யானமாக இட்டு, நம்பிள்ளை நன்மதிப்பைப் பெற்றவர். மேலும் ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்கள் அனைத்திற்கும் விளக்க உரை எழுதி, வியாக்யான சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயரையும் பெற்றவர் அவர் ஒருவரே.

பின்பழகிய பெருமாள் ஜீயர், பூர்வாச்ரமத்தில், பெரிய வாச்சான் பிள்ளைக்கு மடப்பள்ளி கார்யம் செய்து வந்தவர். எழுத்து வாசனையே

அறியாதவராக வளர்ந்து, பின்பு கல்வியின் பயனை உணர்ந்து, பெரியவாச்சான் பிள்ளையிடம், ஸ்ரீபாஷிய பகவத் விஷய கிரந்த கால க்ஷேபாதிகளை பயின்று சாஸ்திரபுலமை பெற்று விளங்கி வாதி கேசரி என்ற விருதைப் பெற்றவர். பிறகு சன்யாச ஆச்ரமம் ஏற்று திருவாய் மொழிக்கு விளக்க உரையாக பந்நீராயிரப்படி என்ற வியாக்யானத்தை அருளிச் செய்தவர், வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர்.

நம்பிள்ளையின் சீடராக திகழ்ந்தவர், வடக்கு திருவீதிப் பிள்ளை. அவர் ஸ்ரீபாஷ்ய கிரந்த காலக்ஷேபங்களை சுதர்சனாச்சாரியாருடன் (பட்டரின் உறவினர்) காஞ்சிபுரத்தில் கச்சிவாய்த்தான் மண்டபத்திற் கருகில், நடாதூர் அம்மாளிடம் செய்தவர்.

நம்பிள்ளை சன்னதியில் பகவத் விஷயம் காலக்ஷேபம் கேட்டுவந்த போது, அவைகளை குறிப்பெடுத்துக் கொள்வாராம், வடக்கு திருவீதிப் பிள்ளை. காலக்ஷேபம் பூர்த்தியானதும் தான் குறிப்பு எடுத்தவைகளை, விரிவுபடுத்தி, ஒரு விளக்க உரை எழுதி, அதை நம்பிள்ளையிடம் சமர்ப்பித்தார். கோயில் யானை கம்பீரமாக நடந்து செல்வது போல அமைந்துள்ளது. மேலும் ஸ்ரீபாஷியத்திற்கு விரிவுரையான "ச்ருதபிர காசிகா" போல அமைந்துள்ளது என்றும் பாராட்டினாராம். ஆனால் ஆச்சார்யாரின் அனுமதி இல்லாது எழுதியதால், வடக்கு திருவீதி பிள்ளை எழுதிய ஈடு முப்பதிராயிரப்படி வியாக்யானத்தை, பிரவசனத்திற்கு உரியதாக்காமல் உள்ளே எடுத்து வைத்து விட்டார் நம்பிள்ளை. அதனால் வடக்கு திருவீதி பிள்ளை மனம் நொந்தார்.

நம்பிள்ளையின் மற்றொரு சீடர் ஈயுண்ணி மாதவப் பெருமாள். நம்பிள்ளையின் செயல் பொறுக்காது அவர் பல்கால் அரங்கனை வேண்டினார். அதன் பலனாக, அரங்கன் நம்பிள்ளையின் கனவில் தோன்றி, விளக்க உரையை மாதவப் பெருமாளிடம் கொடுக்கும்படி நியமிக்க நம்பிள்ளையும் அவ்வாறே செய்தார். பிறகு மாதவப் பெருமாள் அதை தனது சீடர் நாலூர் ஆச்சான் பிள்ளைக்கு சாதித்தருளினார். அது வழிவழியாக திருவாய் மொழி பிள்ளையை அடைந்து பிறகு அவரது சீடர் மணவாள மாமுனிகளால் திருவரங்கத்து பெரிய மண்டபத்தில் வெளியிடப் பட்டது.

வடக்கு திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரர்கள், பிள்ளை லோகாச்சாரியாரும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஆவார்கள்.

பிள்ளை லோகாச்சாரியார் பாஷிய, பகவத் விஷய கிரந்தங்களை தன் தகப்பனாரிடமே காலக்ஷேபம் செய்து, பலகிரந்தங்களை அருளிச் செய்து ஒரு சிறந்த வித்தகராக விளங்கியவர். அவர் இயற்றிய கிரந்தங்களுள் "தத்வ திரய விவரணமும்" ஸ்ரீ வசன பூஷணமும் மிகச் சிறந்தனவை களாக கருதப்படுபவைகள், "உலகாசிரியர்", "லோகாச்சாரியார்"

என்றெல்லாம் சிறப்பு விருதுகள் பெற்றவர், இறுதிவரை பிரும்மச்சரிய ஆஸ்ரமத்தைச் சார்ந்தே வாழ்ந்த ஆச்சார்ய பெருந்தகையாகும்.

அவரது சகோதரர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் உபய வேதாந்த கிரந்த காலக்ஷேபாதிகளை நடத்திக் கொண்டு தர்சனத்தை வளர்த்தவர். ஸ்வாமி நம்மாழ்வார் விஷயமாக, "ஆச்சார்ய (ஹ்ருதயம்) இதயம் என்ற விசேஷ நூலை சூத்திரங்கள் வடிவிலேயே இயற்றி பெருமை கொண்டவர். தமையனாரைப் போலவே, இவரும் இறுதிவரை பிரும்மச் சரிய ஆச்ரமத்தைச் சார்ந்தே வாழ்ந்தவர்.

அவரிடம் ஸ்ரீபாஷ்யாதி கிரந்த காலக்ஷேபங்களை செய்தவர் திருவாய் மொழிப் பிள்ளையாகும்.

திருவாய்மொழிப் பிள்ளை திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள "குந்தி" என்ற நகரைச் சார்ந்தவர். இளம் வயதில் வைணவ சித்தாந்தங்களில் ஈடுபாடு இல்லாதவராக வளர்ந்து, பிறகு பல ஆச்சார்யார்களை ஆச்ரயித்து தர்சனம் வளர்த்தவர். காஞ்சிக்கு அடுத்த திருப்புட்குழியில், நாலூர் ஆச்சான் பிள்ளையிடமும், கூரகுலோத்த மதாசரிடம் ஈடு வியாக்யானம் கேட்டறிந்தார் வடக்கு திருவீதி பிள்ளை எழுதிய ஈட்டின் ஒலை சுவடிகளையும் நாலூர் ஆச்சான் பிள்ளை யிடமிருந்து பெற்று வந்தார்.

திருமலை ஆழ்வார், ஸ்ரீசைலேசர் என்ற சிறப்புப் பெயர்கள் பெற்றவர். திருவாய் மொழிப்பிள்ளை, பவிஷ்யாசார்ய விக்ரகத்தை (இராமானுஜர் விக்ரகம்) திருக்குருகூருக்கு அருகில் சதுர்வேதி மங்கலத்தில் நிலைப் படுத்தி தர்சனம் வளர்த்தபோது, மணவான மாமுனிகளுக்கு ஆச்சார் யாராக விளங்கியவர்.

திருக்குருகூருக்கு இரண்டு காதங்கள் தொலைவிலுள்ள "சிக்கில் கிடாரம்" என்ற ஊரில் தாசரண்ணன். தனது மாமன் மகள் ரங்கநாயகி நாச்சியாரை மணந்து கிடாரத்திலேயே வாழ்ந்து வந்தார். பிறகு தர்சன கால க்ஷேபாதிகளுக்கு திருக்குருகூரை அடைந்து வாழ்ந்த போது, அத்தம்பதியருக்கு ஒரு ஐப்பசி மாதம் மூலம் நக்ஷத்திரத்தில் மணவாள மாமுனிகள் அவதரித்தார். அவரை ஆதிசேஷனின் மறு அவதாரம் என்று ஆன்றோர்கள் பணிப்பர்.

அழகிய மணவாளர் என்று பெயரிடப்பட்டிருந்த மாமுனிகள், பகவத் விஷய கிரந்த காலக்ஷேபாதிகளை திருவாய்மொழிப் பிள்ளையிடம் கேட்டறிந்தார். ஈடு வியாக்யானத்தை செம்மையாக அறிந்து ஒலை சுவடிகளையும் திருவாய் மொழிப்பிள்ளையிடமிருந்து பெற்றுக் கொண்டார். ஸ்ரீபாஷிய கிரந்த கால க்ஷேபாதிகளை பெருமாள் கோவில் கிடாம்பி நாயனாரிடம் கேட்டறிந்தார்.

கிடாம்பி நாயனார், திருவரங்கத்தில் பிரும்மதந்திர ஸ்வத ஜீயரிடம் சம்பிரதாய கிரந்த காலக்ஷேபங்கள் செய்தவர்.

பிறகு ஸ்ரீசடகோப ஜீயரிடம் சன்யாச ஆச்ரமம் ஏற்று மணவ மாமுனிகள் என்ற தாஸ்ய நாமம் பெற்று, திருவரங்கத்தில் தர்சன நிர் ஹஸ்தராக, பெரும் புகழுடன் வாழ்ந்த ஆச்சார்ய திலகம் மாமுனி ஆவர்.

மாமுனிகள், ஈடுவியாக்யானத்தை, அரங்கனின் அணிமுற்றத் (பெரிய மண்டபம்) அரங்கனுக்கே காலக்ஷேபம் செய்தபோது, முப்பதிராயிரம் பெருக்கர் என்ற விருதினையும், "ஸ்ரீ சைலேச தயாபாத் என்ற தனியனையும் அரங்கனே உகந்தளித்தான் என்பதனை இயல் 24 கூறியுள்ளோம்.

பெரிய ஜீயர் என்ற சிறப்பு பெயர் கொண்ட மாமுனிகளின் அரு செயல்களையும் இயல் 24 ல் விரிவாக கூறியுள்ளோம்.

பெருமாள் கோயில் கச்சிவாய்த்தான் மண்டபத்தருகில் பாவ கிரந்த காலக்ஷேபாதிகளை நிர்வஹித்த நடாதூர் அம்மாளிடம் கிடா ராமானுஜாச்சாரியார் சம்பிரதாய கிரந்தங்களை காலக்ஷேபம் செ கொண்டிருந்தார். அப்பொழுது தனது சகோதரி தோத்தாரம்பாளி குமாரரான தேசிகனையும் உடன் அழைத்து செல்வார். அப்பொழுது அல்லது 6 பிராயத்தவர் தேசிகர். அவரது முகப்பொலிவும் பாடங்கள் காட்டிய ஆர்வமும், நடாதூர் அம்மாளை மிகவும் வசீகரித்தது. அந் பிள்ளை பிற்காலத்தில் ஒரு மிகச் சிறந்த தர்சன ஸ்தாபகராவார் என் அபிமானித்து, அந்நிலைக்கு அவரை உயர்த்துமாறு ராமானுஜ சாரியரான அப்புள்ளாரை கேட்டுக் கொண்டாராம்! தானே அவ உயர்த்த வேண்டும் என்ற அவா இருப்பினும் முதிர்ந்து தளர்ந்த பிராய காரணமாக தேசிகனின் கையைப் பிடித்து அப்புள்ளாரின் கையில் வைத் ஆசீர்வதித்தாராம்.

நடாதூர் அம்மாளின் எதிர்பார்ப்பு வீண் போகவில்லை. பதினா பிராயத்திற்குள் சிறந்த வேதாந்தியாக உருவாகி திருவஹிந்திர புரத்தி ஐந்தாண்டுகள் தங்கி பெரிய திருவடி, ஹயக்ரீவர், அருளைப் பெற்று பிற காஞ்சி திரும்பி தேவப்பெருமாளை அனுபவித்து, பெரிய பெருமாளை அனுபவிக்க திருவுள்ளம் கொண்டாராம்.

பெரிய பெருமாள் அனுபவம் அவருக்கு யதேச்சையாகவே கிடைத்தது.

திருவரங்கத்தில் சில அத்வைத வேதாந்திகள், பிள்ளை லோகா சாரியாரையும் சுதர்சனச்சாரியாரையும் வாதத்திற்கு அழைத்தார்கள் அவர்களின் முதிர்ந்த பிராயம் காரணமாக (80 க்கு மேல்) அவர்க அரங்கனின் நியமனம் பெற்று தேசிகனை அழைத்தார்கள்.

பெரிய பெருமாளை அனுபவிக்க வேண்டுமென்று உள்ளம் பற்றியிருந்த தேசிகன், அழைப்பு ஏற்று திருவரங்கம் சென்றார்.

தனது அதியற்புத வாதத்திறமையாலும், பொருள் விசேஷங்களாலும், அத்வைத வேதாந்திகளை வென்று வாகை சூடினார்.

வாதத் திறமையற்ற அத்வைத வேதாந்தியான ஸ்ரீ கிருஷ்ண மிச்ரா என்பவர், "பிரமோத சந்திரோதயம்" என்ற நாடகத்தை அரங்கேற்றி, அதைப்போல ஒரு நாடகத்தை இயற்ற இயலுமா என்று தேசிகரிடம் சவால் விடுத்தார். அதன் விளைவே "சங்கல்ப சூர்யோதயம்" என்ற தேசிகர் இயற்றிய அதியற்புத நாடகம்.

பிறகு தென் தேசங்களை சேவித்து, திருவரங்கம், திரும்பிய போது, அந்நியர் படையெடுப்பின் காரணமாக திருவரங்கத்தில் பதட்ட நிலை நிலவியது. அப்பொழுது சுதர்சனாச்சாரியார், தான் இயற்றிய "ச்ருதப்பிர காசிகாவை" தேசிகரிடம் கொடுத்து, பாதுகாக்கும் படி பணித்து அரங்கனின் சொத்துக்களைக் காப்பாற்றும் முயற்சியில் அவரும், பிள்ளை லோகாச்சாரியாரும், பூத உடலை விடுத்தார்கள்.

ச்ருதப்பிரகாசிகாவைப் பெற்றுக் கொண்ட தேசிகர், சத்யமங்கலம் சென்று, அங்கு சிலகாலம் தங்கி பின் திருவரங்கத்தில் அமைதி நிலவவும், திரும்பினார்.

அச்சமயம், காவ்யப் புலமை பெற்ற ஒரு ஸ்வாமி, தேசிகரிடம், அரங்கனின் திருமுன்பு ஒரே இரவில் ஓராயிரம் ஸ்லோகங்கள் செய்ய முடிந்தவரே, "கவிசிம்மம்" என்ற பெயரைப் பெற தகுதி படைத்தவர் என்று கூறி, இருவரும் அருளிச் செய்வதாக ஒப்புக் கொண்டார்கள்.

இரவு தொடங்கி இரண்டாவது யாமத்திற்குள் தேசிகர் அரங்கனின் பாதங்களுக்கு கீழே காப்பாளாக இருக்கும் ஸ்ரீ பாதுகா தேவிகளைப் போற்றி ஆயிரம் ஸ்லோகங்கள் "பாதுகா சகஸ்ரம்" என்ற பெயரில் இயற்றி மூன்றாவது யாமத்தில் தன் இருப்பிடம் சென்றார். போட்டிக்கு அழைத்த ஸ்வாமி பொழு விடிந்ததும் முன்னூறு ஸ்லோகங்கள் கூட இயற்ற இயலவில்லையாம்.

மறுநாள் காலை அரங்கனை சேவிக்க சென்ற பொழுது, தேசிகருக்கு, "கவிதார்க்கிக சிம்மம்" என்ற விருதினை அரங்கன் அர்ச்சகர் மூலமாக வழங்கினாராம்.

தமிழிலும், வடமொழியிலும் நூற்றுக்கு மேற்பட்ட கிரந்தங்களை அருளிச் செய்து பெருமை கொண்டவர். திருவாய் மொழி விஷயமாகவும் திரமிடோபநிஷத் முதலான நூல்களை எழுதி புகழ் பெற்றவர். பெருமாள் கோயிலிலும் பெரிய பெருமாள் கோயிலிலும் பல ஆண்டுகள் தர்சன ஸ்தாபகம் செய்து ஆச்சார்ய கிரேஷ்டராக திகழ்ந்த ஸ்ரீமத் வேதாந்த

தேசிகரை, தனக்கு எதிரிலேயே என்றென்றும் எழுந்தருளியிருக்கும்படி அபிமானித்து, திருவுள்ளம் பற்றியவர் ஸ்ரீரெங்க நாச்சியாராகும்!

"ச்ருதப்பிரகாசிகா" வை அன்று, ஸ்ரீதேசிகர் காப்பாற்றி, பிற்கால குலபதிகளுக்கு வழங்கியிராவிட்டால், ஸ்ரீ பாஷியத்தின் ஆழ்பொருள் விசேஷங்களை இன்றைய தலைமுறையினர் அறிந்து கொள்ளும் வாய்ப்பே இல்லாமல் போயிருக்கக் கூடும்.

நடாதூர் அம்மாளின் குமாரர் தேவராஜப் பெருமாள். அவரின் குமாரர் ஸ்ரீ வரதர். பெருமாள் கோயிலில் தர்சன பிவர்த்தராக விளங்கியவர். ஒரு கடிகைக்கு நூறு ஸ்லோகங்கள் இயற்றும் ஆற்றல் பெற்றவராதலால், "கடிகாசதம்" அம்மான் என்று விளங்கியவர்.

திருநாராயணபுரத்தைச் சார்ந்த கிடாம்பி கேசவாச்சார்யாருடைய குமாரர் கிடாம்பி ஸ்ரீனிவாசாச்சார்யார் கடிகாசதம் அம்மாளிடம் உபயவேதாந்த கிரந்தகால க்ஷேயாதிகளைச் செய்தவர். அப்பொழுது பகவத் அனுமதி பெற்று, பிரும்மசர்ய ஆச்ரமத்திலிருந்தே சன்யாச ஆச்ரமம் ஏற்ற முதல் அழகிய சிங்கராகும் (இயல் 26) கி. பி. 1398.

ஆச்சார்யர் ஸ்ரீமத் நாதமுனிகளால், தனது மருமான்களான (பாஹுநேயர்கள்) கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான் தொடங்கி, அவர்களது புத்திரர், பேரர், பெண் வழி பேரர், மருமான்கள் என்ற குல மரபினர்களால் வளர்க்கப்பட்டு, பாஷிய பகவத் விஷய என்ற இரு பெருங்கிளைகளாக படர்ந்து அநேக விழுதுகள் விட்டு, ஒரு பிரும்மாண்டமான ஆலமரமாக தழைத்து ஓங்கி வளர்ந்து நமக்கும் பகவானுக்கும் உள்ள தொடர்பை காட்டி வாழ்வளிக்கும் ஆச்சார்ய பங்தி என்ற தியாக பரம்பரை நேர்த்தி இதுவரை சுருக்கமாக விளக்கப்பட்டது.

திருவாய்மொழி பிரபந்த பாசுரங்கள் ஆகியவைகளின் மூலம் ஸ்ரீ வைணவ சித்தாந்தங்களின் இன்றியமையாத தத்துவ ஆராய்ச்சிகளில் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட இதுவரை சொன்ன ஆச்சார்ய வரிசையை (பங்தியை) தியாக பரம்பரையாக்க இலக்கணம் வகுத்தவர்.

*"நண்ணித் தென் குருகூர் நம்பி என்றக்கால்*
*அண்ணிக்கும் அமுதூறும் என் நாவிக்கே"*

என்று மதுரகவிகளால் தெய்வமாகப் போற்றப்பட்ட ஆச்சார்யார் ஸ்வாமி நம்மாழ்வாரே ஆகும்.

இதர பிரபந்த பாசுரங்களை விஷ்ணு ஆலயங்களிலும், பெருமாள் திருவீதி உலா எழுந்தருளும் போதும் சேவிப்பதைப் போன்று திருவாய் மொழியை ஒரு போதும் திருவீதிகளில் சேவிக்கலாகாது. எம்பெருமானோ, ஆழ்வார்களோ, ஆச்சார்யார்களோ ஆஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும் போது சேவிக்கத்தக்கது என்று ஆன்றோர்கள் பணிப்பர்.

தினமும் பெருமாள் திருவடி தொழும் பொழுது, ஆச்சார்யார்கள் இரண்டாம் பந்தி வரை அவரோகணமாக அனுசந்திப்பது மரபு. அது :

*"என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கி யானடைவேயவர் குருக்கணிரை வணங்கி பின்னருளால் பெரும் புதூர் வந்த வள்ளல் பெரிய நம்பி, ஆளவந்தார் மனக்கால் நம்பி நன்னெறியை யவர்க்குரைத்த உய்யக் கொண்டார். நாதமுனி சடகோபன் சேனை நாத னின்னமுகத திருமகளென்றி வரை முன்னிட்டெம் பெருமான் திருவடிகளடைகின்றேனே"*



# நூல் பயன்

நம்மாழ்வாரின் பிரபாவத்தை, என்போன்ற சாமான்யர்களாலும் அறிந்து கொள்வதற்கேற்ப, சொல்லுவதற்கு தகுதி வரையறைகள் ஏதும் பெற்றிலேன். இருப்பினும் சொன்ன சொற்களுள் குற்றங்களைந்து ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இத்தொடரின் தொடக்கத்தில், வேதத்தை உபதேச சொற்கள் என்று பொருள் கொண்டு அதை சிறிதளவே விரித்துக் கூறி தொடங்கியதால், மறையின் பெருமையை உணரும்படி முடித்து, நூல்பயனை சொல்லுவேன்.

உலகில் அனைத்திற்கும் பிரமாணம் மறையாகிய வேதம். வேதம் ஆழ்கடல் போன்றது என்றும் உபமானிக்கலாம். கடலில் துன்பம் கொடுக்கும் ஜீவராசிகளும், நச்சுப் பொருள்களும் இருப்பினும், இன்பம் கொடுக்கும் நன்முத்துக்கள் போன்றவைகளும் உள. அன்று கடலை கடந்தபோழ்து அமுதமும் பிறந்தது, பிராட்டியாரும் தோன்றினார்.

அதைப்போலவே, வேதமான மறையில் உலகியல் வாழ்விற்கு வேண்டிய நுட்பங்களும், விஞ்ஞானம், ஆயுர் வேதம், போன்ற பல இயல் நுட்பங்களும், மற்றும் வேண்டாதவைகளும் உள்ளன.

உலகியல் பலன்களை விரும்புகிறவர்களும், பொது அறிவை வளர்த்துக் கொள்ளுகிறவர்களும் தங்கள் தேவைகளுக்கேற்ப வேதங் களின்று பெற்றுக் கொள்கிறார்கள். உலகியலில் அவா அற்று வாழ்பவர்கள் வீடு (மோக்ஷம்) பெறும் நோக்கில் வேதாந்த சிகரமான மறைமுடியின் கருத்துக்களை பின்பற்றுகிறார்கள்.

இதர மதத்தினினர்களும், தங்களின் கொள்கைகளுக்கேற்றவாறு வேதச் சொற்களுக்கு பொருள் கூறி ஏற்கிறார்கள். எனினும், வேதத்தின் ஆழ் கருத்துக் கோட்பாடுகளை நன்கு அறிந்து பயன்படுத்துவது கடினம். அதன் காரணமாகவே, எம்பெருமான் வேத உட்பொருளை, இனிய தமிழில் திருவாய் மொழி பாகரங்களை, நம்மாழ்வாரின் வாய் மொழியாக வெளியிட உறுதி பூண்டதே, தமிழ் மறையின் தோற்றம்!

ஆழ்வாரின் அருளிச் செயலான• திருவாய் மொழி, நாட்டிலுள்ள மற்ற இலக்கியங்களில் கூறப்பட்ட சாரத்தை திரட்டி அமுத மொழியாக, வாழ்வில் அமைதி காணவும், சம்சாரம் என்ற பவக் கடலை தாண்டும் சாதனமாகவும் வழங்கப்பட்டது.

எம்பெருமானின் ஐந்து நிலைகளில், ஐந்தாவதான அர்சசாமேனிக்கு செவி செல்வமாகவும், அர்ச்சையின் பெருமைகளை உணர்ந்து, பகவத் அனுபவம் நாம் பெறுவதற்கும் சாதனமாக அமையப் பெற்றது தமிழ்மறை.

ஆழ்வாரின் திருவாய் மொழி அமுதச் சொற்கள், இனிக்கும் ஈரம் நிறைந்த தமிழ் சொற்கள். அமுத வெள்ளமாய் நாடெங்கிலும் பெருக்கெடுத்தோடுகின்ற இனிய அமுதினை பருகி, பக்தி வளர்க்கவும், தமிழ் அறிஞர்கள் தாங்கள் இயற்றும் நூல்களில் மேற்கோள் காட்டவும், இசை பயின்றவர்கள் பல பண்களில் பாடி அனுபவிக்கவும், ஆழ்ந்த பொருட் செறிவுகளையும், அறிவு மலர்ச்சி பெற வகைகளையும் உள்ளடக்கி அமையப் பெற்றது தமிழ் மறையான திருவாய்மொழி.

ஒரு வேடன், ஆண்பறவையை கொன்றதும் வால்மீகி முனிவருக்கு உண்டான சோகமே, ஸ்ரீமத் இராமாயணம் வடிவெடுக்க காரணமாயிற்று.

எம்பெருமான் மெய் நின்று கேட்டருள வேண்டும் என்ற ஆழ்வாரின் விண்ணப்பமே, ஆழ்வார் உள்ளத்தில் அனுபவித்த இனிய உணர்வுகளே வரிவடிவம் பெறும் திருவாய் மொழியான செவிக்கினிய தமிழ் மறை ஆயிற்று, என்று தன்னை தமிழ் மறையோன் என்ற கூறிக் கொண்ட ஸ்ரீ தேசிகரது உள்ளம்.

நம்மாழ்வாரின் தோற்றம் தமிழ்நாட்டை ஞான வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் பூமியாக மாற்றியது. திருவாய் மொழி, பாரதத்தின் இதர பகுதிகளிலும், அறிவுச் செல்வத்தையும் பக்தியையும் வளர்த்தது. திருவாய் மொழி 1102 பாசுரங்களும் வடமொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது, அதன் சிறப்பிற்கு ஒரு சான்று !

ஸ்ரீ உபயவேதாந்த வில்லூர் நடாதூர் வேங்கட சேஷார்ய மஹா தேசிக ஸ்வாமி என்ற வித்தகர் ராமானாதபுர சமஸ்தானத்தில் ஆஸ்தான வித்வானாக இருந்தவர். அந்த மகானால், வட மொழி ஆக்கம் செய்த திருவாய் மொழி பாசுரங்களின் பதிப்பு நடாதூர் அம்மாள் ட்ரஸ்ட் என்ற ஸ்தாபனத்தால் 1986 ல் வெளியிடப்பட்டது.

வேதம் தமிழ் செய்த நாவீறந் மாறன் சடகோபன் வைணவத்திற்க்கு மட்டுமல்ல ஒரு நாட்டிற்கே, ஏன் ஒரு யுகத்திற்கே உரியவராவர். அறநெறியையும் அன்பு நெறியையும் கடைப்பிடித்தொழுக மக்களுக்கு அறநெறியைக் காட்டி அவர்களை எம்பெருமான் அருளுக்கு ஆட்படச் செய்த மஹான்.

நமக்கு சகலவித உறவினனாகவும் உறுதுணையாக இருப்பவனும் பகவானே!

எப்பெயர் கொண்டு அழைத்தாலும் அது ஸ்ரீமந் நாராயணனையே சாரும்.

அவனே நமக்கு உற்ற துணையாக இருப்பதால், நாம் எதைப்பற்றியும் கவலையற்று இருக்க முடியும்.

நமக்கு கலபனாக இருக்கும் எம்பெருமானுக்கு செய்யும் பிரதி உபகாரம் என்னவெனில், அவன் நமக்கு தந்திருக்கும் சித்தம் - சொல் - செயல் ஆகியவைகளை தினமும் அவனது கைங்கர்யத்தில் ஈடுபடுத்துவது தான். அவனுக்கு நாம் பூசும் சந்தனம், சாத்தும் மலர் பட்டாடை போற்றிப்பாடும் பாசுரங்கள், இருகை கூப்பும் அஞ்சலியே,

*"பூசம் சாந்து என் நெஞ்சமே! புனையும் கண்ணி என்னுடைய*
*வாசகம் செய்மாலையே வான்பட்டு ஆடையும் அஃதே நேசம்*
*ஆன அணிகலனும் என் கை கூப்பச் செய்கையே ஈசன்*
*ஞாலம் உண்டு உமிழ்ந்த எந்தை எம்மூர்த்திக்கே"*

என்ற பாசுர வாயிலாக நம்மாழ்வாரே கைம்மாறு செய்வதைப் பற்றி பேசுகிறார்.

அவனது திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றி சரண் புகுந்தால் மேல் வீடு பெறுவது திண்ணம்.

அவனை நினையாதவர்களுக்கு அவன் மிக அரியவன். ஆனால் அவனைப் பக்தியுடன் ஆராதிப்பவர்களுக்கு அவன் எளியன் மட்டுமல்ல கட்டுப்பட்டவனும் கூட.

உலகம் துன்பங்களுக்கு விளைநிலம். இன்னல்களும் ஏமாற்றங்களும் நிறைந்தது. வாழ்வோ நீர் குமுழி போன்று நிலையற்றது. முடியுடை அரசர்களும் வாழ்ந்தார்கள் என்பது இல்லை. செல்வம் பறிபோவதும் உற்றார் மரிப்பதும் உலக இயல்பு. அப்படி பல துன்பங்களுக்கு அங்கலாய்த்து பாசுரங்களிட்டுள்ளார் திருவாய் மொழியில்.

அவன் இல்லாத இடமே இல்லை என்று சொல்லும்படி அதிநுட்பமான ஆத்மப் பொருள்களிலும் அவன் கரந்துளன். நம்முள்ளேயே உரையும் அவனை எட்டிப் பிடிக்க பாங்காக உரைத்தது திருவாய்மொழி

பகவானுக்கு தொண்டாற்றி எப்பொழுதும் அவனை வழிபட்டே வாழ வேண்டும் என்பதே அவன் நமக்கிட்ட கடமை. தூய மனத்தோடு பகவானை வழிபட்டால் துக்கமென்பதே இல்லை. இந்த பூத உடல் கீழே விழுமுன், பகவானின் திருவடிகளைப் பற்றுங்கள். அப்படி செயல் படின் இன்ப வாழ்வு நம்மை எதிர்நோக்கும் என்று கூறும் பாசுரங்கள் கொண்டது திருவாய்மொழி.

ஆணவத்தின் குறிகளான 'நான் எனது' என்ற அல்பங்களை அடியோடு வேரறுக்க அவனை சரணடைந்து அவனுக்கு கைங்கைர்ய பரர்களாக திகழ்வதைக் காட்டிலும் பேரின்பம் வேறில்லை, என்பதை உறுதி படக் கூறுகிறது திருவாய்மொழி.

பொதுவாக, ஒரு பொருளைப் பற்றி பேச விழையும் போது அவைகளைப் பற்றியெல்லாம் பேசுவதற்கு தமக்கு தகுதி இல்லை

இருப்பினும் என்று தொடங்கி பேசுவது சிலரின் மரபு. இதை அவையடக்கம் என்று கூறுவர். ஆனால், அது, அவர்களது தாழ்வு மனப்பான்மையினையே, குறிப்பிடும் என்பது பலரின் கருத்து, நம்மாழ் வாரும் வேதத்தை தமிழாக்க விழைந்தபோது, வேதம் காட்டிக் கொடுக்கும் பகவானின் மாண்பு கடலினும் பெரியது. அவனோ உயர்வற உயர்ந்தவன், அதை எடுத்துச் சொல்வது தன் தகுதிக்கு அப்பாற்பட்ட தென்பதை கூறுகிறார். எவ்வகையில் என்றால், இவ்வுலகில், எவர்க்கும், பொய் நின்ற ஞானம் பொல்லா ஒழுக்கு மழுக்குடம்பும் இனி பெறக் கூடாது, என்பதை பகவானிடம் விண்ணப்பிக்கத் தொடங்கு முன் பகவான் அதை நேரிலேயே கேட்க வேண்டும் என்றும் கோருகிறார். அவ்வகையில் தானும் உலக மக்களைப் போல சாதாரணமானவர் என்றே தாழ்த்திக் கொண்டு பேசுவதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். அதுவே அவையடக்கம்.

பகவத் நாமங்களை தினமும் அனுசந்திக்காவிடில், உயிர் தரிக்க இயலாதாம். மாயவன் அல்லவா பகவான், அதனால்தான் தன்னுடைய சொற்களையே, ஆழ்வாரின் வாய் வழி தோன்றச் செய்து, தம்மைத்தாமே புகழ்ந்து கொண்டது, அவனின் மாயை தானே! மனித ஆக்கையில் உள்ள ஒரு புண்ணில் நெளியும் ஒரு புழுவிற்கு, உலக ஞானம் எவ்வளவோ அவ்வளவு தான் தனக்கும், என்பதை வெளிப்படையாகவே கூறுகிறார். திருவிருத்தத்தில் மேலும் ஒரு எழுத்தின் ஒலிக்கு சிறிதும் ஒப்புமை இல்லாது, வெளிப்படுத்தும் பல்லியின் ஒலியை, சொல் என்றே கூறி, நடப்பது போன்று, நான் பகவானைப்பற்றி பேசுவதும் ஏற்புடையவைகள் தானே ? (திருவிருத்தம் - 48)

*மெல்லியலாக்கைக் கிருமி குருவில் மிளிர்தந்தாங்கே செல்லிய*
*செல்கைத்துலகையென் நாணும், என்னாலும் தன்னைச்*
*சொல்லிய சூழல் திருமால்வன் கவியாது கற்றேன் பல்லியின்*
*சொல்லும் சொல்லாக் கொள்வதோவுண்டு பண்டு பண்டே*

மனிதர்களுக்குரிய நற்பண்புகளில், அடக்கம், சீலத்தின் அறிகுறி. தான் உடல் வலிமை பெற்றவன், உறமான உள்ளம் கொண்டவன் செல்வச் சீமான், அறிவும் ஆற்றலும் உள்ளது என்பதினால், இறுமாப்பு கொள்வது இயல்பு, என்ற போதிலும், அறிவும் ஆற்றலும் நேர்வழியில் சென்றால் தான், அடக்கம் பெறப்படும். ஆழ்வாரே அப்படி அருளிச் செய்துள்ளார் திருவாய் மொழியில்.

அடிமைத்தனத்தின் (சேஷத்வத்தின்) அடி எல்லையான ஏழாவது நிலைக்கே தன்னைத் தாழ்த்திக் கொள்ளும் மனோபக்குவமே அவை. அடக்கம் என்பது ஆழ்வார் காட்டிக் கொடுத்தது.

*"அடியார்ந்தவையமுண்டாலிலை யன்ன வசஞ் செய்யும்*
*படியாது மில் குழவிப்படி யென்தை பிரான் தனக்கு*
*அடியார் - அடியார் தம் அடியார் அடியார் தமக்*
*கடியார் அடியார் தம் அடியாரடி யோங்களே"* (3.7.10)

புலன்களை காவலில் வைக்காமல் செயல்பட்டதால், அடிப்பொடிகள் தண்டனையை அனுபவித்தார். அவ்வனுபவமே அவரை புலனடக்கத்திற்கு தூண்டி ஞான வைராக்ய பூஷணராகச் செய்து அரங்கனுக்கு பலப்பாமாலைகளை (திருமாலை) சூட்டச் செய்தது. பகவத் பக்தி பெற வேண்டுமானால் புலனடக்கம் அவசியம். புலனடக்கம் வீட்டையே பெறச் செய்யும் சக்தி கொண்டது என்பது ஆழ்வாரின் திருவுள்ளம். அந்த வீடு எத்தகையது என்பதனை பேயாழ்வார்

*"ஓர்த்த மனத்தராய் ஐந்தடக்கி ஆராய்ந்து*
*பேர்த்தால் பிறப்பேழும் போக்கலாம்"*

என்று அருளியுள்ளார் (3 ம் திருவந்தாதி 79)

நன்றே செய், நன்றும் இன்றே செய், அதனையும் உடனே செய் என்பது ஆன்றோர் வாக்கு. எந்த ஒரு நற்செயலையும் நாளைக்கு என்று தள்ளிப் போடக்கூடாது. இச்சரீரம் நிலையற்றது. ஒரு கணம் தோன்றி மறையும் மின்னலைப் போன்றது நிலையற்ற வாழ்வு. இதை மனதில் கொண்டு பகவத் திருவடிகளைப் பற்றும் உபாயத்தில் மனதைச் செலுத்தினால் உயர்ந்த வாழ்வு பெற "நலம் அந்தம் இல்லாது ஓர் நாடு புகுவீர்" என்று உபதேசிக்கின்றார் நம்மாழ்வார் எப்படி ?

*.... குருகூர் சடகோபன் சொல்*
*கேழிலாயிரத்து இப்பத்தும் வல்லவர்*
*வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே"*

என்று பணிக்கின்றார்.

*"திருக்குருகைப் பெருமாள் தன் திருத்தாள்கள் வாழியே*
*திருவான திருமுகத்துச் செவியென்றும் வாழியே*
*இருக்குமொழி யென் நெஞ்சில் தேக்கினான் வாழியே*
*எந்தை எதிராஜர்க் கிறைவனார் வாழியே*
*கருக்குழியில் புகாவண்ணம் காத்தருள் வோன்வாழியே*
*காசினிலாரியனாய்க் காட்டினான் வாழியே*
*வருத்தமற வந்தென்னை வாழ்வித்தான் வாழியே*
*மதுரகவித்தம்பிரான் வாழி வாழி வாழியே"*

மாறன் மலரடி வாழ்க

**சுபம்**



# உதவிய நூல்கள்


1. ஈடு வியாக்யானம்
2. பு.ரா புருஷோத்தம நாயுடுவின் ஈட்டின் தமிழாக்கங்கள்
3. உத்தமூர் ஸ்வாமியின் பிரபந்தரக்ஷை
4. ஸ்ரீ விலில்ப்புத்தூர் N. ராமஸ்வாமி அய்யங்காரின் - வகுளாபரண சடகோபர்
5. திருவரங்க ஆலய வரலாறு By V. N. HARI RAO
6. நாலாயிரத் திவ்ய பிரபந்தம் (திருவேங்கடத்தான் திருமன்றம்)
7. திருவரங்கம் கோயிலொழுகு
8. சடகோபன் செந்தமிழ் By சுப்புரெட்டியார்
9. வள்ளுவருள்ளம் கேசவயங்கார்
10. பிரபந்தசாரம் பி ஸ்ரீ
11. Life of Ramanuja By Ramakrishnananda
12. ஆச்சார்ய இதயம் (ஹ்ருதயம்) பிரிதிவாத பயங்கரம் அண்ணங்கராசார்யார் உரை.